# பொருளதிகாரம்

மெய்ப்பாட்டியல், உவமையியல்,
செய்யுளியல், மரபியல்

பதிப்பாசிரியன்:

வ. உ. சிதம்பரம்பிள்ளை.

# PUBLISHER'S FOREWORD

I had the pleasure of meeting Sriman V. O. Chidambaram lai for the first time when I was introduced to him by Lokanya Bal Gangadhar Tilak and this acquaintance speedily deve-ped into friendship. Sriman V. O. Chidambaram Pillai retired n active politics after his long incarceration and he has since gaged himself in an intensive and critical study of the ancient mil classics which had claimed his attention even during his litical preoccupation and during his professional activities as a yyer. This book represents the fruitful results of his arduous ours in this field carried on for more than three decades. Sriman lai set himself to the difficult task of editing the celebrated

mil Grammar "Tolkappiyam", whose antiquity and authority admitted by all. The age of "Tolkappiyam" has been made ently a matter of controversy among Tamil scholars, but it is later than the third or fourth century B. C. When therefore asked me to undertake the publication of the work, I readily sented to do so. The publication of the work has been greatly litated by the active help and co-operation of Mr. S. Vaiyapuri ai, Editor of the "Tamil Lexicon". He has read in proof every of this great work and edited it with thoroughness and . The assistance of an eminent scholar like him cannot be too ly commended.

ndiarpet
Madras.
... 1935.

V. VENKATESWARA SASTRULU,
OF V. RAMASWAMY SASTRULU & SONS.

# பிரசுரிப்போரின் முன்னுரை



லோகமான்ய பாலகங்காதர திலகரவர்கள் என்னை ஸ்ரீமான் வ. உ. சிதம்பரம் பிள்ளையவர்களுக்கு அறிமுகம் செய்துவைத்தபோதுதான் யான் முதல் முதல் பிள்ளையவர்களைக் கண்டு களிப்புற்றேன். ஸ்ரீமான் பிள்ளையவர்கள் தமது நீண்டகாலச்சிறைவாஸத்திற்குப்பின் (மஹாத்மா காந்தியவர்கள் இராஜீய விஷயங்களில் தலைமைபூண்ட நாள் தொடங்கி) அவ்விஷயங்களினின்று விலகித் தாம் முன் வக்கீல் வேலைபார்த்துக்கொண்டிருந்த காலத்திலும், இராஜீயத்துறையில் வேலைசெய்துகொண்டிருந்த காலத்திலும் தமது கவனத்தைக் கவர்ந்துகொண்டிருந்த தொன்மைத் தமிழ் நூல்களை ஊக்கத்தோடு ஆராய்ச்சிசெய்துகொண்டுவந்தனர். இத்துறையில் பிள்ளையவர்கள் சென்ற சுமார் முப்பதுவருஷம் உழைத்ததன் பயனாகும் இந்நூலின் வெளிவரவு. தொன்மையானதென்றும் தலைமையானதென்றும் யாவராலும் ஒப்புக்கொள்ளப்பட்டதும், தமிழ்நாட்டிலும் அதற்கு அப்பாலும் பெரும்புகழ் பெற்றதுமான தொல்காப்பியத்திற்கு இளம்பூரணர் இயற்றிய உரையைப் பிள்ளையவர்கள் ஆராய்ச்சிசெய்து, ஏடுபெயர்த்து எழுதியோர்களால் நேர்ந்தபிழைகளைக் களைந்து சீர்திருத்தம் செய்தார்கள். தொல்காப்பியத்தின்

காலத்தைப்பற்றிச் சென்ற

சிலவருஷங்களாகத் தமிழ்ப்

பண்டிதர்களுள்

அபிப்பிராயபேதம்

ஏற்பட்டிருக்கிறது; ஆனாலும்,

அந்நூல்

கிறிஸ்து பிறந்ததற்கு முந்நூறு வருஷங்களுக்கு முற்பட்டதென்பதில் ஐயமே
யில்லை. இத்தகைய்நூலை அச்சிட்டுப் பிரசுரிக்கும்படியாக ஸ்ரீமான். பிள்

யவர்கள்

என்னைக் கேட்டுக்கொண்டபோது

நான் உவகையுடன்

உடனே ஒப்புக் கொண்டேன்.

'தமிழ் லெக்ஸிக்கன் ஆசிரியர் ஸ்ரீமான் எஸ். வையாபுரிபிள்ளை உதவியும் ஒத்துழைப்பும் இந்நூலை எளிதில் வெளிவரச்செய்தன. அவர்கள் மிகக் கவனத்தோடும், ஊக்கத்தோடும் இப்பதிப்பினைப் பரிசோதித்திருக்கிறார்கள். அவர்களைப்போன்ற ஒரு பெருங் கல்வியாளருடைய உதவி இவ்வளவினதென்று அளவிடற்பாலதன்று. இந் நூல்

இவ்வுலகின்கண் இனிது நிலவுவதாக !

தண்டையார்ப்பேட்டை,
சென்னை.
1935ஆ ஜூலை 8உ

வா. வெங்கடேஸ்வர சாஸ்த்ருலு,
வா. இராமஸ்வாமி சாஸ்த்ருலு அண்டு ஸன்ஸ்.

ப

திப்புரை.

தொல்காப்பியத்தைப் படிக்கும் பாக்கியம் எனக்கு 1910-ம் வருடம் கிடைத்தது. அதன் பொருளதிகாரத்தை யான் படித்தபோது, அதில் வேறு எம்மொழி இலக்கணத்திலும் காணப்படாத நிலப்பாகுபாடு, நிலங்களின் மக்கள், பிரா உயிர்கள், மரங்கள், செடிகள், மலர்கள், மக்களது ஒழுக்கங்கள், பழக்க வழக்கங்கள் முதலியனகூறப்பட்டிருக்கக் கண்டேன். இவ்வொப்புயர்வற்ற நூலைத் தமிழ்மக்கள் படியாததற்கு ஒருகாரணம் இந்நூலிற்கு ஆன்றோர் இயற்றியுள்ள உரைகளின் கடினநடையென்று உணர்ந்தேன். இந்நூலைத் தமிழ் மக்கள் யாவரும் கற்கும்படி எளியநடையில் ஓர் உரை எழுதவேண்டுமென்று நினைத்தேன்; உடனே எழுத்ததிகாரத்தின் முதற்சில இயல்களுக்கு உரையும் எழுதினேன்.

பின்னர், யான் சென்னை-பிரம்பூரில் வசித்தகாலத்தில் என் உரையைப் பூர்த்திசெய்யக் கருதி முன் எழுதியிருந்த எழுத்ததிகார இயல்களின் உரையைத் திரு. தி. செல்வக்கேசவராய முதலியார் (எம். ஏ.,) அவர்களும் யானும் சரிபார்த்தோம். அப்போது தொல்காப்பிய இளம்பூரண எழுத்ததிகார அச்சுப்புத்தகமும், சொல்லதிகார ஏட்டுப்பிரதிகள் சிலவும் பொருளதிகார ஏட்டுப்பிரதி யொன்றும் திரு. த. கனகசுந்தரம்பிள்ளை (பி. ஏ.,) அவர்களிடமிருந்து கிடைத்தன. இளம்பூரணத்தை யான் படித்தபோது அதன் உயர்வும், சிறப்பும், எளிய நடையும் தொல்காப்பியத்திற்கு யான் உரை எழுதுவது மிகையென்று நினைக்கச் செய்தன. பின்னர் என் உரையைப் பூர்த்திசெய்யும் எண்ணத்தை விடுத்து, இளம்பூரணத்தை அச்சிட்டு வெளிப்படுத்த எண்ணினேன். முதலில் எழுத்ததிகாரத்தை ஒருபுத்தகமாகவும், பின்னர்ப் பொருளதிகாரத்தின் அகத்திணையியலையும், புறத்திணையியலையும் ஒரு புத்தகமாகவும் அச்சிட்டு வெளிப்படுத்தினேன். அச்சமயம்

யான் சென்னையைவிட்டுக் கோயமுத்தூர் முதலிய வெளியூர்களுக்குச் சென்று அவ்வூர்களில் வசிக்கநேர்ந்தது.

அதனால் இளம்பூரணப் பொருளதிகாரத்தின் பிந்திய இயல்களை அச்சிட்டு முடிக்க இயலாமற் போய்விட்டது.

சிலவருடங்களுக்குப்பின், தமிழ்த் தொன்னூல்களின் ஏட்டுப் பிரதிகளைப் பல்விடங்களில் தேடிப்பெற்றுப் பரிசோதித்துக் கொண்டுவரும் தமிழ்ப் பேரகராதி (Tamil Lexicon) ஆசிரியர் திரு. எஸ். வையாபுரிப்பிள்ளை (பி. ஏ., பி. எல்.,) அவர்களின் நட்பு எனக்குக் கிடைத்தது. அவர்களிடம் இளம்பூரணப் பொருளதிகாரத்தின் பிந்திய இயல்களை அச்சிட இயலாமலிருக்கிற நிலைமையைத் தெரியப்படுத்தினேன். என் உண்மைத் தேசாபிமானத்தையும் பாஷாபிமானத்தையும் கண்டு, அவ்வியல்களை அச்சிடுதல் சம்பந்தமான ஆசிரியர் வேலைகளைத் தாமே செய்வதாகப் பிள்ளையவர்கள் வாக்களித்தார்கள்.

மேற்கூறிய இயல்களின் காயிதக் கையெழுத்துப் பிரதிகளையும், திரு. த. கனகசுந்தரம்பிள்ளையவர்களின் பொருளதிகார ஏட்டுப்பிரதியையும் திரு. வையாபுரிப்பிள்ளையவர்களுக்கு அனுப்பினேன். அவர்கள் காயிதப் பிரதிகளை ஏட்டுப்பிரதிகளோடு ஒப்பு நோக்கிக் காயிதப் பிரதியிற்கண்ட வழுக்கள் முதலியவற்றைக் களைந்தும், அச்சுத் தாள் (புரூவ்) களைச் சரிபார்த்துத் திருத்தியும், மேற்கோட் செய்யுள்களின் நூற்பெயர் முதலியவற்றைத் துலக்கியும், முதலில்

களவியல், சற்பியல், பொருளியல் இம்மூன்றையும் அச்சிடுவித்து ஒரு புத்
பாக்கித் தந்தார்கள். இப்போது ஏனைய இயல்களையும் புத்தகவடிவில் வெளிவ
செய்தார்கள். இவ் வேறு இயல்களுக்கும் பெயரளவில் பதிப்பாசிரியன் யா
உண்மையிற் பதிப்பாசிரியர் திரு. வையாபுரிப்பிள்ளை யவர்களே. அவர்கள் செ
கன்பி என்னால் என்றும் உள்ளற்பாலது.

யான் அனுப்பிய எட்டுப்பிரதியும் கடிதப்பிரதிகளுந் தவிர, வேறு
வட்டுப்பிரதிகளும் இப்பதிப்பிற்கு உபகாரப்பட்டன. செய்யுளியற் பி
யொன்றும், மரபியற் பிரதி யொன்றும் இப்பொழுது அண்ணாமலைப் பல்க
கழகத்தில் தமிழாராய்ச்சி செய்துவரும் ஸேதுஸம்ஸ்தான மகாவித்துவ

ஸ்ரீ. ரா. ராகவையங்காரவர்கள்
மிக்க அன்புடன் உதவினார்கள்.
செய்யுளியற்
தப் பிரதி யொன்று
மயிலாப்பூர். பி. எஸ்.
ஹைஸ்கூல் தமிழ்ப்பண்
ஸ்ரீ. எம். வி. துரைசாமி
ஐயரவர்கள் அன்புகூர்ந்து
கொடுத்தார்கள். இவ்

வர்க்கும் எனது மனப்பூர்வமான நன்றி யுரியதாகின்றது. இடையிடையே
சிலபாகங்கள் தமிழ்லெக்ஸிகன் ஆபீஸ் தலைமைத் தமிழ்ப்பண்டிதர் ஸ்ரீ
ராகவையங்கா ரவர்களாலும்,

ஸ்ரீ துரைசாமிப்பையரவர்களாலும் பார்வை
பட்டன. இங்ஙனம் உதவிய
நண்பர்களுக்கு எனது
நன்றியைச் செலு
தல்லது யான் யாது கைம்மாறு
செய்யவல்லேன்!

தமிழ்நாடு முழுவதிலும்
பொருளதிகார இளம்பூரணருரை
முற்றுமடங்கிய
பிரதி ஒன்றேயுள்ளது.
இப்போது அங்கங்கே
ஒருசிலரிடத்துள்ள பிரதிகளெல்
லாம் இவ்வேட்டுப் பிரதியைப்
பார்த்தெழுதிக்கொண்ட கடிதப்

பிரதிகளையா

இக்கடிதப் பிரதிகள் சிலவற்றில்

ஒரு சிலவிடங்களில் ஏட்டுப்

பிரதியிற் கா

பெருத விஷயங்கள் ஆதாரமின்றி நுழைத் தெழுதப்பட்டன. அவ்வாறு நுழ
தெழுதியவற்றை யெல்லாம் களைந்து ஏட்டுப் பிரதியிலுள்ளவாறே இப்ப
எனது நண்பர் வையாபுரிப்பிள்ளையவர்களாற் சித்தஞ் செய்யப்பட்டுளது.

மேற்கோளகராதியில் விடுபட்ட

குறியின்கீழ்க் கொடுக்கப்பட்டுள்ளன.

மேற்கோள்கள் 32-ம் பக்கத்தில்

உ

இங்ஙனம் பதிப்பிக்கப்பெற்ற இவ்வுரை இளம்பூரணருடையதே யென்ப
குத் தக்க சான்றுகள் இருந்தபோதிலும், என்வசமிருந்த ஏட்டுப் பிரதியிலே
ஸ்ரீ ரா. ராகவையங்காரவர்கள் உதவிய ஏட்டுப் பிரதிகளிலேனும் (செய்யுள்
மரபியல் அடங்கியன) இன்னாரியற்றிய வுரையென்பது எழுதப்பெறவேண்
டிருந்ததும் காணப்படவில்லை. இதனைத் தமிழுலகிற்குத் தெரிவிக்குங் கட
டுடையேன்.

மேற்குறித்த ஏழு இயல்களையும் தமது செலவில் அச்சிட்டு வெளிப்பட
வேண்டுமென்று சென்னை ஸ்ரீ. இராமசுவாமிசாஸ்துருலு அண்டு சன்ஸ் பெ

காரரான எனது நண்பர் ஸ்ரீமான். வாஸிள்ள வேங்கடேஸ்வரசாஸ்துருவ களுக்கு எழுதினேன். அவ் வேண்டுகோளுக்கு இணங்கி எழு இயல்கள் அச்சிட்டுப் பிரசுரித்துத்தந்த எனது நண்பர் சாஸ்திரியா ரவர்களின் என்றுல் என்றும் நினைக்கற்பாலது. எல்லாம்வல்ல இறைவன் துணைபுரிக.

தூத்துக்குடி.
15-1-1936.

வ. உ. சிதம்பரம்பிள்ளை,
பதிப்பாசிரியன்.



## பொருளதிகாரம் : சூத்திர முதற்குறிப்பகராதி.

---

## சூத்திரம்




## ஆறுவது - மெய்ப்பாட்டியல்.

௨௱௪௫. பண்ணைத் தோன்றிய வெண்ணான்கு பொருளுங்
கண்ணிய புறனே நானான் கென்ப.

என்பது சூத்திரம்.

இவ்வோத்து என்ன பெயர்த்தோ எனின், மெய்ப்பாட்டியல் என்னும் பெயர்த்து; மெய்ப்பாடு உணர்த்தினமையாற் பெற்ற பெயர். அஃதியாதோ எனின், முன்னர்க் கூறுதும்.

இச்சூத்திரம் என்னுதலிற்றோ வெனின், பிறர் வேண்டுமாற்றாற் சுவையுஞ் சுவைக் குறிப்பும் உணர்த்துதல் நுதலிற்று.

பண்ணைத் தோன்றிய என்பது—விளையாட்டாயத்தின்கண் தோன்றிய என்றவாறு. பண்ணையுடையது பண்ணை என்றாயிற்று.

எண்ணான்கு பொருளும் கண்ணிய புறனே நானான்கென்ப என்பது—முப்பத்திரண்டு பொருளையுங் குறித்ததன் புறத்து நிகழும் பொருள் பதினாறு என்று சொல்லுவர் என்றவாறு.

புறத்து நிகழ்வதனைப் புறம் என்றார்.

பண்ணைத் தோன்றிய கண்ணிய புறன் எனப் பெயரெச்சவடுக்காகக் கூட்டுக. அன்றியும், எண்ணான்கு பொருளுங் கண்ணிய புறன் என ஒருசொன்னடையாக ஒட்டித் தோன்றிய என்னும் பெயரெச்சத்திற்கு முடிபாக்கினும் அமையும். புறன் என்னும் எழுவாய் நானென்கென்னும் பயனிலைகொண்டு முடிந்தது.

ஈண்டுச் சொல்லப்படுகின்ற பதினாறு பொருளும் கற்று நல்லொழுக்கு ஒழுகும் அறிவுடையா ரவைக்கண் தோன்றுமையாற் பண்ணைத் தோன்றிய என்றார். என்னை? நகைக்குக் காரணமாகிய எள்ளல் அவர்கண் தோன்றாமையின். பிறவும் அன்ன.

மூப்பத்திரண்டாவன.—நகை முதலானவற்றிற் கேதுவாம் எள்ளல் முதலாக விளையாட்டீறாக முன்னெடுத் தோதப்படுகின்றன. அவற்றைக் குறித்த புறனாவன சுவையும் குறிப்பும். வீரம், அச்சம், [1]இழிப்பு, வியப்பு, காமம், அவலம், உருத்திரம், நகை, நடுவுநிலைமை என்றும்; வீரக்குறிப்பு, அச்சக் குறிப்பு, இழிப்புக்குறிப்பு, வியப்புக்குறிப்பு, காமக்குறிப்பு, அவலக்குறிப்பு, உருத்திரக் குறிப்பு, நகைக்குறிப்பு, நடுவுநிலைமைக் குறிப்பு என்றும்: சொல்லப்பட்ட பதினெட்டினும் நடுவுநிலைமையும் அதன் குறிப்பும் ஒழித்து ஏனைய பதினாறுமாம்.

வியப்பெனினும் அற்புதமெனினும் ஒக்கும். காமமெனினுஞ் சிங்காரமெனினும் ஒக்கும். அவலம் எனினும் கருணையெனினும் ஒக்கும். உருத்திரம் எனினும் வெகுளியெனினும் ஒக்கும். நடுவுநிலைமை எனினும் மத்திமம் எனினும் சாந்தம் எனினும் ஒக்கும். வீரம் என்பது மாற்றாரைக்குறித்து நிகழ்வது. அச்சம் என்பது அஞ்சத்தகுவன கண்டவழி நிகழ்வது. இழிப்பென்பது இழிக்கத்தக்கன கண்டுழி நிகழ்வது. வியப்பென்பது வியக்கத்தக்கன கண்டுழி நிகழ்வது. காமம் என்பது இன்ப நிகழ்ச்சியான் நிகழ்வது. அவலம் என்பது இழவுபற்றிப் பிறப்பது. உருத்திரம் என்பது அவமதிப்பாற் பிறப்பது.

(பிரதி)—1. இளிப்பு.

சுவையென்பது இகழ்ச்சி முதலாயினவற்றாற் பிறப்பது. நடுவுநிலைமையென்பது யாதொன்

றானும் விகாரப்படாமை.

அவை இற்றாக, [1]மத்திமமென்பதனை ஈண்டொழித்தது என்னையெனின்;

"மத்திம மென்பது மாசறத் தெரியிற்
சொல்லப் பட்ட வெல்லாச் சுவையொடு
புல்ல தாகிய பொலிவிற் றென்ப."

"நகையுடைமரபி

ளிதன்பய மியாதெனிற்
சேர்த்தி யோர்க்குஞ் சார்த்துபடு
வோர்க்கு மொப்ப நிற்கு நிலையிற்
றென்ப."

"உய்ப்போ ரிதனை யாரெனின் மிக்கது
பயக்குந் தாபதர் சாரணர் சமணர்
கயக்கறு முனிவ ரறிவரொடு பிறருங்
காமம் வெகுளி மயக்க நீங்கிய
வாய்மை யாளர் வகுத்தனர் பிறரு
மச்சுவை யெட்டு மவர்க்கில வாதலி
னச்சுவை யொருதலை யாதலி னதனை
மெய்த்தலைப் படுக்கவிதன் மிகவறிந் தோரே."

என்பது செயிற்றியச் சூத்திரம்.
உணர்க.

இதனானே இது வழக்கிலக்கணம்

---

அன்று 1ன

இனி, சுவை என்பது காணப்படு விகாரம்.

பொருளாற் காண்போரகத்தின்

வருவதோர்

"இருவகை நிலத்தி

னியல்வது சுவையே." என்றும்,

"நின்ற சுவையே ...

... ஒன்றிய நிகழ்ச்சி சத்துவ மென்ப."

என்றும்,

"சத்துவ மென்பது சாற்றுங் காலை

மெய்ம்மயிர் குளிர்த்தல் கண்ணீர் வார்த
னடுக்கங் கடுத்தல் வியர்த்த றேற்றங்
4கொடுங்குரற் சிதைவொடு நிரல்பட வந்த
பத்தென மொழிப சத்துவந் தானே."

5என்றுஞ் சார்பொருள் உரைப்ப.

அவைவருமாறு:—

பேயானும் புலியானும் கண்டானொருவன் அஞ்சியவழி மயக்கமுங் காத்தலும் ...க்கமும் வியர்ப்பு முளவாகின்றே. அவற்றுள் அச்சத்திற் கேதுவாகிய புலியும் பேயும் எனச்.

(பிரதி)—1. மத்திபம். 2. ளிதனே. 3. பிறவு. 4. கொடுகுரல்குண வத்ளெ.

# பொருளதிகாரம் - மெய்ப்பாட்டியல்

ஙா ருரு

சுவைப்படுபொருள். அவற்றைக் கண்ட காலத்தொட்டு நீங்காது நின்ற அச்சம் சுவை. அதன்கண் மயக்கமுங் கரத்தலும் குறிப்பு. நடுக்கமும் வெயர்ப்புஞ் சத்துவம். இவற்றுள் நடுக்கமும் வியர்ப்பும் பிறர்க்கும் புலனாவது என்று கொள்க; ஏனைய மனநிகழ்ச்சி. பிறவு மன்ன. இவற்றின் பிரிவை நாடகநூலிற் காண்க. (௪)

உாசசு. நாலிரண் டாகும் பாலுமா ருண்டே. | ௨. திரு.3.

என்-னின், மேலதற்கோர் புறனடை.

மேற்சொல்லப்பட்ட பதினாறு பொருளும் எட்டென வரும் பக்கமு முண்டு என்ற வாறு.

அவையாவன குறிப்புப் பதினெட்டனையுஞ் சுவையு ளடக்கிச் சுவை யெட்டுமாக்கி நிகழ்தல்.

(உ)

உாசஎ. நகையே யழுகை யிளிவரன் மருட்கை
யச்சம் பெருமிதம் வெகுளி யுவகையென்
றப்பா லெட்டா மெய்ப்பா டென்ப.

என்-னின், மெய்ப்பாடு ஆமாறு உணர்த்துதல்நுதலிற்று.

நகைமுதலாகச் சொல்லப்பட்டஎட்டும் மெய்ப்பாடு என்று சொல்லுவர் என்றவாறு.

# மெய்ப்பாடென்பது யாதோவென்னின்,

"உய்ப்போன் செய்தது காண்போர்க் கெய்துதன்
மெய்ப்பா டென்ப மெய்யுணர்ந் தோரே."

## எனச் செயிற்றியனார் ஓதுதலின்,

அச்சமுற்றான் மாட்டு நிகழும் அச்சம் அவன்மாட்டுச் சத்துவத்தினாற் புறப்பட்டுக் காண்போர்க்குப் புலனாகுந் தன்மை மெய்ப்பாடெனக் கொள்ளப்படும். மெய்யின்கண் தோன்றுதலின் மெய்ப்பாடாயிற்று. அஃதேல், இவ் விலக்கணங் கூத்தினுட் பயன்படல் உண்டாதலின் ஈண்டு வேண்டாவெனின், ஈண்டுஞ் செய்யுட் செய்யுங்காற் சுவைபடச் செய்யவேண்டுதலின் ஈண்டுங் கூறவேண்டு மென்க.

"உய்த்துணர் வின்றித் தலைவரு பொருளின்
மெய்ப்பட முடிவது மெய்ப்பா டாகும்." [செய்யுளியல் - ககூ]

என இவ்வாசிரியர் மெய்ப்பாடுஞ் செய்யுளுறுப்பென ஓதினமை உணர்க.

நகை என்பது இகழ்ச்சியிற் பிறப்பது. அழுகை என்பது அவலத்திற் பிறப்பது. இளிவரல் இழிப்பிற் பிறப்பது. மருட்கை வியப்பிற் பிறப்பது. அச்சம் அஞ்சத் தகுவன வற்றாற் பிறப்பது. பெருமிதம் வீரத்திற் பிறப்பது. வெகுளி வெறுக்கத் தக்கனவற்றாற் பிறப்பது. உவகை சிங்காரத்திற் பிறப்பது. (௩)

உாசஅ. எள்ள லிளமை பேதைமை மடனென்
றுள்ளப் பட்ட நகைநான் கென்ப.

என்-னின், நகையும் நகைப்பொருளும் ஆமாறு உணர்த்துதல் நுதலிற்று.



எள்ளற்பொருண்மை முதலாகச் சொல்லப்பட்ட நான்கும் நகைப்பொருளாம் என்றவாறு.

எனவே காரணம் பற்றி நகையும் நான்காயின.

"நகையெனப் படுதல் வகையா தெனினே
நகையெனச் செய்வோன் செய்வகை நோக்கு
நகையொடு நல்லவை நனிமகிழ் வுறுமே."

என்பதனான் நகைபடுபொருள் கண்டதன்வழி முறுவலோடு வரும் மகிழ்ச்சிப் பொருளாமாறு நகையாவது என்று கொள்க.

"உடனிவை தோன்று மிடமியா
தெனினே

முடவர் செல்லுஞ் செலவின் கண்ணு
மடவோர் சொல்லுஞ் சொல்லின் கண்ணும்

கவர்சி பெரிதூற் 1 றுரைப்போர்க்
கண் ணும்
பிதற்றிக் கூறும் பித்தர் கண் ணுஞ்

சுற்றத் தோரை யிகழ்ச்சிக் கண் ணு
மற்று மொருவர்கட் பட்டோர்க் கண் ணுங்
குழவி கூறு மழலைக் கண் ணு

மெலியோன் கூறும் வலியின் கண் ணும்
வலியோன் கூறும் மெலியின் கண் ணும்
ஒல்லார் மதிக்கும் வனப்பின் கண் ணுங்
கல்லார் கூறுங் கல்விக் கண் ணும்
பெண்பிரி தன்மை யலியின் கண் ணு

மாண்பிரி பெண்மைப் பேடிக் கண் ணுங்
களியின் கண் ணுங் காவாலி கண் ணுங்

தெளிவிலா ரொழுகுங் கடவுளார்
கண்ணு
உமாரியர் கூறுந் தமிழின் கண்ணுங்
காரிகை யறியாக் காமுகர் கண்ணுங்
கூனர் கண்ணுங் குறளர் கண்ணு
ர

மூமர் கண்ணுஞ் செவிடர் கண்ணு
மான்ற மரபி னின்னுழி யெல்லாந்
தோன்று மென்ப துணிந்திசி னோரே.”

என இவ்வகையெல்லா
முளவெனச் செயிற்றியனார் ஓதுதலின்,
அவை நான்கா

யெவாறு என்னையெனின், மூடவர் செல்லுஞ் செலவு எள்ளுதற் பொருண்மை யாயிற்று; மடவோர் சொல்லுஞ் சொல் மடமைப்பொருண்மை யாயிற்று; கவற்சி பெரிதுற்றுரைப் போர் கூற்றுப் பேதைமையாயிற்று; குழவிகூறு மழலை இளமைப் பொருளாயிற்று; ஏனைய வெல்லா மிவற்றின்பாற் படுதல் காண்க. புணர்ச்சி நிமித்தமாகக் கூற்று நிகழ்ந்துழி வரும் நகை இளமை என்பதனுற் கொள்க. இப் பொருண்மை செயிற்றியத்தில் ‘வலியோன் கூறும் மெலிவு’ என்பதனுற் கொள்க.

* மடம் என்பதற்கும் பேதைமை என்பதற்கும் வேறுபாடு என்னை யெனின், மடம் என்பது பொருண்மை யறியாது திரியக் கோடல்: பேதைமை யென்பது கேட்டதனை உய்த்துணராது மெய்யாகக் கோடல்.

(பிரதி)—1. நரைப்போர். 2. மறியார்.

# பொருளதிகாரம்.

## பேய் ட்டாட் டிய ல்

௲௱௫௭

என்னல் இளமை எனப் பொதுப்பட்டு நின்றமையால் தன்மாட்டு நிகழும் வழியுங் கொள்க.

[உதாரணம்:—]

"நகையா கின்றே தோழி" என்னும் நெடுந்தொகைப் பாட்டினுள்,

தண்டுறை யூரன் றண்டா ரகலம்

வதுவை நாளணிப் புதுவோர்ப் புணரிய
பரிவொடு வரூஉம் பாணன் றெருவிற்
புனிற்றுப் பாய்ந்தெனக் கலங்கி யழிபட்
டெம்மனைப் புகு[த]ந் தோனே யவற்கண்டு

மெய்ம்மலி
யுவகையென் மறையினெ னெதிர்சென்
றிம்மனை யன்றஃ தும்மனை யென்ற
வென்னுந் தன்னு நோக்கி
மம்மர் நெஞ்சினன் றொழுதுநின்
றதுவே" [அகம் - ௫௬]

எனக்கூறி 'நகையாகின்றே தோழி' என்றமையின் எள்ளல்பற்றி நகைதோன்றியது.

எனவும் வந்தவழிக் காண்க. (௪)

௨௫௬. இழிவே யிழவே யசைவே வறுமையென
விளிவில் கொள்கை அழுகை நான்கே. ?

என்-னின், இது அழுகையாமாறும் அதற்குப் பொருளு முணர்த்துதல் நுதலிற்று.

இழிவு முதலாகச் சொல்லப்பட்ட நான்கு பொருண்மையும் அழுகைக்குப் பொரு

ளாம் என்றவாறு.

ஃ இழிவு என்பது—பிறர்
தன்னை யெளிய னாக்குதலாற் பிறப்பது.

ஃ இழவாவது—உயிரானும்
பொருளானும் இழத்தல்.

ஃ அசை யென்பது—தளர்ச்சி.
அது தன்னிலையிற் றாழ்தல்.

ஃ வறுமை என்பது—நல்குரவு.

ஃ இவை ஏதுவாக
அழுகைபிறக்கும் என்றவாறு.

ஃ இதுவுந்
தன்மாட்டுற்றனவும்
பிறர்மாட்டுற்றனவும் பிறக்கும்.

"கவலை கூர்ந்த கருணையது பெயரே

யவல மென்ப வறிந்தோ ரதுதா

னிலைமை யிழந்து நீக்குதுணை யுடைமை
தலைமை சான்ற தன்னிலை யழிதல்

சிறையணி துயரமொடு செய்கையற் றிருத்தல்
குறைபடு பொருளொடு குறைபா டெய்தல்
சாப மெய்தல் சார்பிழைத் தலக்கல்
காவ லின்றிக் கலக்கமொடு திரிதல்
கட்கத் தொட்டகை கயிற்றொடு கோடல்

முடியுடைச் சென்னிபிற ரடியுறப் பணித
லுளப்பரி பெருங்களி றூர்ந்த சேவடி

கூாருஅ

தொல்காப்பியம் - இளம்பூரணம்

"ஐயோ வெனயான் புலியஞ் சுவலே
அணைய்த்தனன் கொ[ளி]னே மார்பெடுக் கல்லேன்
என்போற் பெருவிதுப் [1]புறுக நின்னை
யின்னா துற்ற வறனில் கூற்றே
நிரைவளை முன்கை பற்றி
வரைநிழற் சேர நடத்திசிற் சிறிதே." [புறம் - ௨௫௫]

இது இழிவுபற்றி வந்த அழுகை.

ஏனையவும் வந்தவழிக் கண்டுகொள்க. (௫)

௨௱௫௰. மூப்பே பிணியே வருத்த மென்மையொ
டியாப்புற வந்த விளிவர னான்கே.

என்-னின், இளிவரலாமாறும் அதற்குப் பொருளும் உணர்த்துதல் நுதலிற்று.

மூப்பு முதலாகச் சொல்லப்பட்ட நான்கு பொருண்மையும் இளிவரலுக்குப் பொருளாம் என்றவாறு.

இவைநான்குந் தன்மாட்டுத் தோன்றினும் பிறர்மாட்டுத் தோன்றினும் நிகழும்.

[உதாரணம்:—]

"தாழாத் தளராத் தலைநடுங்காத் தண்டூன்றா
வீழா விறக்கு மிவண்மாட்டுங்-காழிலா
மம்மர்கொண் மாந்தர்க் கணங்காகுந் தன்கைக்கோ
லம்மனைக்கோ லாகிய ஞான்று." [நாலடி - ௰௪]

என்றது பிறர்மாட்டு மூப்புப்பற்றி இழிப்புப் பிறந்தது.

பிணியென்பது பிணியுறவு கண்டு இழித்தல். அதனானே உடம்பு தூயதன்றென இழித்தலுமாம்.

"மாக்கேழ் மடநல்லா யென்றரற்றுஞ் சான்றவர்
நோக்கார்கொ னொய்யதோர் புக்கிலை-யாக்கைக்கோ

(பிரதி)—1. பிறுதி.

ரீச்சிற கன்னதோர் தோலறினும் வேண்டுமே
காக்கை கடிவதோர் கோல்." [நாலடி - சக]

இது உடம்பினை யருவருத்துக் கூறுதல்.

வருத்த மென்பது—தன்மாட்டும் பிறர்மாட்டும் உளதாகிய வருத்தத்தானும் இழிப்புப் பிறக்கும் என்றவாறு.

[உதாரணம்:—]

"செற்றார்பின் செல்லா பெருந்தகைமை காமநோ
யுற்றா ரறிவதொன் றன்று" [குறள் - ௩௨௫௫]

இது பிறன் வருத்தங் கண்டு இழிப்புப் பிறந்தது.

[உதாரணம்:—]

"தொடர்ப்படு ஞமலியி [1]னிடர்ப்படுத் திரீஇய
கேளல் கேளிர் [2]வேளாண் சிறபத
மதுகை யின்றி வயிற்றுத்தீத் [3]தணியத் தாமிரந்
துண் ணு [4]மளவை
[5]யீன்ம ரோவிவ் வுலகத் தானே"

# இது தன்மாட்டு
# வருத்தத்தான் இழிப்புப் பிறந்தது.
# மென்மை
# என்பது—நல்குரவு.

"அறஞ்சாரா நல்குர வீன்றதா யானும்
பிறன்போல நோக்கப் படும்" [குறள் - ௲௪௭]

"இற்பிறந்தார் கண்ணேயு மின்மை யிழிவந்த
சொற்பிறக்குஞ் சோர்வு தரும்." [குறள் - ௲௪௪]

என வரும்.

இன்னும் ['யாப்புற'] என்பதனுன் இழிக்கத்தக்கன பிறவுங் கொள்க. அவை காற்றத்தானுந் தோற்றத்தானும் புல்லியன. இவற்றிற்கெல்லாஞ் செய்யுள் வந்தவழிக் (௧)
காண்க.

உ.ராருக புதுமை பெருமை சிறுமை யாக்கமொடு
மதிமை சாலா மருட்கை நான்கே.

என்-னின், இது மருட்கை யாமாறும் அதன்பொருண்மையும் உணர்த்துதல் நுத

விற்று.

புதுமை முதலாகச் சொல்லப்பட்ட நான்கினும் மருட்கைபிறக்கும் என்றவாறு. மதிமை சாலா மருட்கை என்றமையால் அறிவுடையார் இப்பொருட்கண் வியவார் என்று கொள்க.

(பிரதி)—1. இடர்ப்படத்திய. 2. வேளன. 3. தணியோர். 4. மனைவயி. 5. ஞம.

---



# தொல்காப்பியம் - இளம்பூரணம்

புதுமை யாவது—யாதொன்றானு மெய்விடத்தினு எக்காலத்தினும் தோன்றாததோர் பொருள்தோன்றியவழி வியத்தல். அது கர்திருவர் அந்தரம் போவதுகண்டு வியத்தல் போல்வன.

பெருமை யென்பது பண்டு கண்ட பொருள்கள் போலாத பொருள்கள் அவ்வளவிற் பெருத்தன கண்டு வியத்தல். அவை-மலையும் யானையும் செல்வமும் முன்கண்ட அளவின் மிக்கன கண்டவழி வியப்பு வரும்.

சிறுமை என்பது—பிறவும் நுண்ணியன கண்டு வியத்தல். அது 'கடுகின்கட் பல துளை' போல்வன.

ஆக்கம் என்பது—ஒன்றன் பரிணாமங்கண்டு வியத்தல். அது தன்னளவின்றி தன்னிலஞ் சார்பாகத் தோன்று மரமுதலாயின. ஆகியவழி வியத்தலும், கல்லார்க்தான் யாதொன்று மிலாதான் ஆக்கமுற்றானுபின், அதற்குக் காரண முணராதான் அது

கண்டு வியத்தலும், இளையான்

வீரங்கண்டு வியத்தலுமாம். பிறவும்

உலகத்து வியக்

கத்தகுவன வெல்லாம்

இவற்றின்பாற் படுத்திக் கொள்க.

அகப்பாட்டினுள்,

“ ... ... ... பெருந்தேர் யானு
[1]மேறிய தல்லது வந்த வாறு நனியறிந்
தன்றோ விலனே தாவு முயற்பற ழுகளு
முல்லையம் புறவிற் கவைக்கதிர் வரகின்
சீறூ ராங்கண் மெல்லிய லரிவை யில்வயி
னிறீஇ

‘இருந்தவேந்தன்’ என்னும்

உயிழிமினிலனென்ற நின்மொழி
மருண்டிசினே” [அகம் - ௩௮௬]
என்றது வியந்தவாறு.

“பொலம்பூ வேங்கை நலங்கிளர்
கொழுநிழ
லொருமுலை யிழந்தாளோர் திருமா
பத்தினிக்
கமரர்க் கரசன்
றமர்வந் தீண்டியவள்
காதற் கொழுநனைக் காட்டி யவளொடு
கட்புலங் காணா விட்புலம் போகிய
இறும்பூது போலு
மறிந்தரு ளீயென.” [சிலப் - பதிகம்]

எனறது புதுமை. 

உாடுஉ. அணங்கே விலங்கே கள்வர்தம் மிறையெனப்
பிணங்கல் சாலா வச்ச நான்கே.

என்-னின், அச்சமாகிய மெய்ப்பாடும் அதன் பொருளும் உணர்த்துதல்நுதலிற்று.

அணங்குமுதலாகச் சொல்லப்பட்ட நான்கினும் பிறக்கும் மாறுபடுதல் அமையாத அச்சம் நால்வகைப்படும் என்றவாறு.

பிணங்கல் சாலுமாயின் நடுக்கம் முதலாயின உளவாகா; அவை பிணங்கல் சாலாத வழியே உளதாவதென்று கொள்க.

அவை நாலச்சமும் வருமாறு:—

கொலை களவு கட்காமம் பொய் யென்பனவற்றை 3இகழ்த்தினவர்க்கு அரசனல் அச்சம் வருதலின் அவனும் அஞ்சப்படும்பொருளாயினன்.

(பிரதி)—1. மெய்சரி. 2. மிழிவினில். 3. நிகழ்த்தவர்க்கு.

பொருளதிகாரம் - மெய்ப்பாட்டியல்

உதாரணம்:—

"மையல் வேழ மடங்கலி னெரிதர

வுய்விட மறியே மாகி யொய்யெனத்
திருந்துகோ லெல்வளை தெளிர்ப்ப நாண்மறந்து
விதுப்புறு மனத்தேம் விரைந்தவற் பொருந்திச்
சூருறு மஞ்ஞையி னடுங்கி" [குறிஞ்சிப்.- ௱௩௫ - ௱௩௧]

என வரும். பிறவு மன்ன.

௨௱௫௩. கல்வி தறுகண் புகழ்மை கொடையெனச்
சொல்லப் பட்ட பெருமித நான்கே.

(அ)

என்-னின், பெருமிதமாமாறும் அதன்பொருண்மையும் உணர்த்துதல்நுதலிற்று.

கல்வியானுந் தறுகண்மையானும் புகழ்மையானுங் கொடையானும் பெருமிதம் நால்வகைப்படும் என்றவாறு.

இவைநான்கும் பிறரொருவனின் மிகுத்தவழிப் பிறக்கு மகிழ்ச்சி பெருமிதம் என்று கொள்க.

பெருமிதமாவது—தன்னைப் பெரியனாக நினைத்தல்.

"உறுசுடர் வாளோ டொருகால் விலங்கிற்
சிறுசுடர்முற் பேரிருளாங் கண்டா-யெறிசுடர்வேற்
றேங்குலாம் பூந்தெரியற் றேர்வேந்த நின்னொடு
பாங்கலா வீரர் படை." [புறப் - வெ - எ,அ]

இது வீரம்பற்றி வந்தது. பிறவு மன்ன. (சு)

உாடுசு. உறுப்பறை குடிகோ ளலைகொலை யென்றஆ
வெறுப்ப வந்த வெகுளி நான்கே.

என்-னின், வெகுளியாமாறும் அதற்குப் பொருளும் உணர்த்துதல் நுதலிற்று.

உறுப்பறை முதலாகச் சொல்லப்பட்ட நான்கினானும் வெகுளி பிறக்கும் என்றவாறு.

இப்பொருள் நான்கும் தான் பிறரைச் செய்யுங்காலும் வெகுளி பிறக்கும்; தன்னைப் பிறர் செய்யுங்காலும் வெகுளி பிறக்கும் என்றுகொள்க.

உறுப்பறையாவது—அங்கமாயினவற்றை [1]அறுத்தல்.

குடிகோளாவது—கீழ்வாழ்வாரை நலிதல்.

அலை என்பது—வைதலும் புடைத்தலும்.

கொலை என்பது—கொல்லுதற் கொருப்படுதல்.

இவை நான்கும் வெகுளி தோற்றுமால் எனின், அஃது இன்பத்திற்குக் காரணமாடற்கண்ணும் வெகுளி தோற்றுமால் எனின், அஃது இன்பத்திற்குக் காரண மாதலால் தலைமகள் புருவநெரிவும் வாய்த்துடிப்பும் கண்ட தலைமகற்கு வெகுட்சி பிறவாது உவகை பிறக்கும். தலைமகன் வெகுளுவனாயின் அதன்பாற் படும்.

"உறுதுப் பஞ்சா துடல்சினஞ் செருக்கிச்
சிறுசொற் சொல்லிய சினங்கெழு வேந்தரை

(பிரதி)—1. யுறுத்தல்.

பெருஞ்சமர் ததையத் தாக்கி முரசமொ
டொருங்கப் [1]படே[அ]னாயின்" [புறம் - எ௨]

என்பது வெருளிபற்றி வந்தது. பிறவு மன்ன. (ii)

௨௱௫௫. செல்வம் புலனே புணர்வு விளையாட்டென
அல்லல் நீத்த உவகை நான்கே.

என்-னின், உவகை யாமாறும் அதன் பொருளும் உணர்த்துதல் நுதலிற்று.

செல்வ நுகர்ச்சியானும், கண்டுகேட் [1]டுண்டுயிர்த் துற்றறியும் ஐம்புலன்களான் நுகர்தலானும் மகளிரொடு புணர்தலானுஞ் சோலையும் ஆறும் புகுந்து விளையாடும் விளையாட்டினானும் உவகைபிறக்கும் என்றவாறு.

"ஒத்த காமத் தொருவனு மொருத்தியு
மொத்த காமத் தொருவனொடு பலரு
மாடலும் பாடலுங் கள்ளுங் [2]களியு
மூடலு முணர்தலுங் கூடலு மிடைந்து
புதுப்புனல் பொய்கை பூம்புன
லென்றிவை
விருப்புறு மனத்தொடு [3]விழைந்து நுகர்தலும்
பயமலை மகிழ்தலும் பனிக்கட லாடலும்

நயனுடை மரபி னன்னகர்ப்
பொலிதலுங்

குளம்பரிந் தாடலும் கோலஞ்
செய்தலுங்
கொடிநகர் புகுதலுங் கடிமனை
விரும்பலுந்
துயிற்க ணின்றி
யின்பந் துய்த்தலு
மயிற்கண் மடவா ராடலுங் மகிழ்தலு
நிலாப்பயன் கோடலு நிலம்பெயர்ந்
துறைதலுங்
கலம்பயில் சாந்தொடு
கடிமல ரணிதலு
மொருங்கா ராய்ந்த வின்னவை
பிறவுஞ்
சிறுங்கா ரம்மென
வேண்டுப விதன்பயன்
றுன்ப நீங்கத்
துகளறக் கிடந்த
வின்பமொடு

புணர்ந்த வேக்கழூத் தர்மே."

எனச் செயிற்றியனர்

விரித்தோதினு ராயினும்

இவையெல்லாம் இந் நான்கினுள் அடங்கும்.

"தம்மி லிருந்து தமதுபாத் துண்டற்றா
லம்மா வரிவை முயக்கு." [குறள் - ११०७]

என்றவழித் தம்மிலிருந்து தமது

பாத்துண்ட செல்வநுகர்ச்சி.

முயக்கம்-புணர்வு.

"வையை வருபுன லாட லினிதுகொல்

செவ்வேற்கோ குன்ற நுகர்த லினிநுகொல்
வைவ்வே றுதியன்ன கண்ணார் துணையாக
எவ்வாறு செய்வாங்கொல் யாமென நாளும்
வழிமயக் குற்று மருட னெடியா
னெமொடக் கூடத் தியல்பு." [பரிபாடல்?]

என வரும். பிறவு மன்ன.

(பிரதி)—1. பட்டே. 2. கனியு. 3. விழைத்து.

# பொருளதிகாரம்

## மெய்ப்பாட்டியல்

உ.ாறுசூ. ஆங்கவை, ஒருபா லாக வொருபா லாக
வுடைமை யின்புற லடுவுநிலை [1]யருள
றன்மை யடக்கம் வரைத லன்பெனுஅக்
கை[ம்]மிக லலிதல் சூழ்ச்சி வாழ்த்த
னா நாணுதல் துஞ்சல் லரற்றுக் கனவெனுஅ
முனித னினைதல் வெரூஉதன் மடிமை
கருத லாராய்ச்சி விரைவுயிர்ப் பெனுஅக்
கையா றிடுக்கண் பொச்சாப்புப் பொறாமை
வியர்த்த லைய மிகைநடுக் கெனுஅ
வவையு முளவே யவையலங் கடையே.

என்-னின், மேற்சொல்லப்பட்ட எண்வகைமெய்ப்பாடு மொழிய வேறுபட்டுவரு வன சில மெய்ப்பாடு உணர்த்துதல் நுதலிற்று.

மேற்சொல்லப்பட்டன

ஒருபக்கயாக, ஒருபக்க [முடைமை]

முதலாகச் சொல்லப்

பட்ட முப்பத்திரண்டும்; உள:

அவையல்லாத விடத்து: என்றவாறு.

எனவே, ஆமிடத்து இவை

யங்க மாகும்.

உடைமையாவது—யாதானு

மொருபொருளை உடையனுயினுல்

வருதலாகும் மன

நிகழ்ச்சி.

"நெடுநெ லியானையுந் தேரு மாவும்

படையமை மறவரு முடையம்

யாமென்

றுறுதுப் பஞ்சாது" [புறம் - எஉ]

என வரும்.

இன்புறலாவது—நட்டாராகிப் பிரிந்துவந்தோரைக் கண்டவழி வருவதோர் மன நிகழ்ச்சி போல்வது.

"கெடுத்தெடுபய நன்கல மெடுத்துக் கொண்டாங்கு" [நற்றிணை-௩௮௨]

"... ... உள்ளிய
வினைமுடித் தன்ன வினியோள்"
[நற்றிணை-௩]

"விட்டகன்
றுறைந்த நட்டோர்க் கண்ட
நாளினு மினிய நல்லாள்"

எனக் காம நுகர்ச்சியின்றி வரும் இன்புறுதல்.

நடுவுநிலைமையாவது—ஒருமருங் கோடாது நிகழும் மனநிகழ்ச்சி.

"சமஞ்செய்து சீர் தூக்குங் கோல்போ லமைந்தொருபாற்
கோடாமை சான்றோர்க் கணி." [குறள் - ௱௰௮]

என வரும்.

அருளாவது—எல்லாவுயிர்க்கும் அளிசெய்தல்.

"அரிதாய வறனெய்தி யருளியோர்க் களித்தலும்" [கலித் - ௰௧]

என்றாற்போல வருவது.

தன்மை யென்பது—சாதியியல்பு. பார்ப்பார் அரசர் இடையர் குறவர் என்றின்னோர்மாட்டு ஒருவரை யொருவர் ஒவ்வாமற் கிடக்கும் இயல்பு. அது மெய்க்கடமையின்கண் வேறுபட்டுவருதலின் மெய்ப்பாடாயிற்று.

(பிரதி)—1. யருட. 2. மறுவரு.

௩௰௬
தொல்காப்பியம் - இளம்பூரணம்

"¹யலைக் கொடியின் வாடிய
மருங்கின் ²லுயவ லூர்திப்
பயலைப் பார்ப்பான்" [புறம் - ௩௱௰௫]

என்றும்,

"³புலிநிறக் கவசம் பூம்பொறி சிதைய
வெய்கணை கிழித்த பகட்டெழின் மார்பின்
மறலி யன்ன களிற்றுமிசை யோனே"

[புறம் · ௰௩ ]

என்றும்,

"காயாம்பூக்

கண்ணிக் கருந்துவ ராடையை

மேயு நிரைமுன்னர்க் கோலூன்றி நின்றுயோ

ராயனை யல்லை." [கலித் - ௱அ]

என்றும்,

"தேனொடு நீடு

மயிர்குற மாக்கள்"

என்றும் வரும்.

அடக்கம் என்பது—மனமொழிமெய்யி னடங்குதல். தானைமடக்கலும் வாய்புதைத்தலும் போல்வன.

அது பணிந்த மொழியு௱

என்றும்,

"ஒருமையு ளாமைபோ லைந்தடக்க லாற்றின்"

[குறள் - ௱உ௬]

... என்றும்,

"யாகாவா ராயினும் நாகாக்க"

[குறள் - ௱உ௭]

"நிலையிற் றிரியா தடங்கியான் றோற்றம்" [குறள் - ௱உ௪]

என்றும் வருவன. இதுவும் அடங்காமைபோலாமையின் மெய்ப்பாடாயிற்று.

வரைவு என்பது—செய்யத் தகுவனவும் தவிரத் தகுவனவும் வரைந்து ஒழுகும் ஒழுக்கம். அது

"பெண்விழைந்து பின்செலினும் தன்செலவிற் குன்றாமை
கண்விழ்ந்து கையறினுங் காதல் பொருட்கின்மை" [திரிகடுகம்-உக]

என்றாற்போல வருவன. முன் [illegible] வாழ் [illegible] மதியாமை [illegible] நோக்கு.

அன்பு என்பது—பயின்றார்மாட்டுச் செல்லுங் காதல்.

"புறத்துறுப் பெல்லா மெவன்செய்யும் யாக்கை
யகத்துறுப் பன்பி லவற்கு." [குறள் - ௭௧]

என்பதனான் அறிக.

கைம்மிகல் என்பது—குற்றமாயினுங் குணமாயினும் அளவின் மிகுதல். அது நிலையின் வேறுபடுதலின் மெய்ப்பாடாயிற்று. கையென்பது அளவுகுறித்த தோர் இடைச் சொல்.

"காதல் கைம்மிகல்" [தொல். மெய்ப்பாட்டியல் - உ௩]
என்றும்,

"குணனிலனாய்க் குற்றம் பலவாயின்" [குறள்-அ௬௮]
என்றும் இவ்வாறு வருவன.

(பிரதி)—1. வைய. 2. புதகீரச். 3. நின்றுநீ-டாராவை. 4. வையறிஞக்.

# பொருளதிகாரம் - மெய்ப்பாட்டியல்

௫௭௨௫

நலிதல் என்பது—பிறரை நெருக்குதல். அதன்கண் நிகழும் மனநிகழ்ச்சி நலிதலாயிற்று. இதுவும் மேற்சொல்லப்பட்ட எட்டும் இன்மையின் ஈண்டு ஓதப்பட்டது. போலாவ —
"பகைநலியப் பாசறையு ளான்" [நெடுநல் - இறுதிவெண்பா]
[என வரும்.] பிறவும் அன்ன.

சூழ்ச்சி என்பது—எண்ணம்.

"சூழ்வார்கண் ணாக வொழுகலான் மன்னவன்
சூழ்வாரைச் சூழ்ந்து கொளல்." [குறள் - சூ௪௫]

இதுவுமோர் மனநிகழ்ச்சி.

வாழ்த்தல் என்பது—பிறனை வாழ்த்துதல். அதுவும் மேற்கூறப்பட்டன போலாமையான் வேறோர் மெய்ப்பாடாக ஓதப்பட்டது.

"வாழி யாதன் வாழி" [ஐங்குறு - க] என்றும் "எங்கோ வாழிய குடுமி" [புறம் - கூ] என்றும் இவ்வாறு வருவழி, ஆண்டு வரும் மனநிகழ்ச்சி மெய்ப்பாடாம். அஃதேல் வைதலும் மெய்ப்பாடாதல் வேண்டும் எனின் அது வெகுட்சியின் முதிர்வு. இது அன்பின் முதிர்வாகாதோ எனின், அன்பின்றியும் அரசன் முதலாயினாரைச் சான்றோர் வாழ்த்துதலின் அடங்காதென்க.

நாணல் என்பது—தமக்குப் பழிவருவன செய்யாமை.

"பிறர்பழியுந் தன்பழியும் நாணுக் நாணுக்
குறைபதி யென்னு முலகு." [குறள் - ௧௰௩]

"நாணா லுயிரைத் துறப்ப
ருயிர்ப்பொருட்டா
னாண்டுறவார்
நாணுள் பவர்." [குறள் - ௧௰௭]
என வரும்.

துஞ்சல் என்பது—உறக்கம்.
அதுவும் உறங்காமை போலாமையின்
மெய்ப்பா டாயிற்று.

— " ... ...
முனிவின்றி
னைந்தலை யுலகமுந் துஞ்சும்" [குறந் -
௬]

என வரும்.

அரற்று

என்பது—உறக்கத்தின்கண் வரும் வாய்ச்சோர்வு. அதுவும் வினைச்சொல்லின் வேறுபடுதலின் அரற்றென ஒரு மெய்ப்பாடாயிற்று. முன் உறக்கம் வைத்தலானும் பின் கனவு வைத்தலானும் இப்பொருள் உரைக்கப்பட்டது.

"பாயல்கொண்
டென்றோட் கனவுவா [1]ராய்கோற்
றொடிநிரை முன்கையாள் கையாறு கொள்ளாள்
கடிமனை காத்தோம்ப வல்லுவள் கொல்லோ
விடுமருப்பி யானை யிலங்குதேர்க் கோடும்
நெடுமலை வெஞ்சுரம் போகி [2]நடுநின்று
செய்பொருள்
முற்று மளவு" [கலித் - உச]

என வரும்.

[இது] களவியலின் பாற்படுமெனின் அரற்றென்பது ஒருபொருளைப் பலகாற் கூறுதல்; அஃது அப்பொருண்மேற் காதலாற் கூறுதலின் அதுவுமோர் மெய்ப்பாடாயிற் றெனவுமாம்.

---

(பிரதி)—1. ஞய்கோற். 2. யடுநின்னே.

வெறுத்தல்.

"காலை யெழுந்து கடுந்தேர்ப் பண்ணி
[illegible]

வாலிழை மகளிர்த் தழீஇச் சென்ற
மல்ல லூரன் எல்லினன் பெரிதென
[illegible]
[illegible]

மறுவருஞ் சிறுவர் தாயே
தெறுக வம்மவித் திணைப்பிறத் தல்லே." [குறுந் - சரு]

எனக் குடிப்பிறத்தலை

வெறுத்தவாறு [காண்க].

1 நினைத்தல் என்பது—கழிந்ததனை நினைத்தல். அது மறந்தாங்கு மறவாது பின்புந் தோற்றுதலின் மெய்ப்பாடாயிற்று.

"நினைப்பவர் போன்று நினையார்கொ
றும்மல்
சினைப்பது போன்று கெடும்."

[குறள் : ௲௨௱௩]

வெருஉதல் என்பது—அச்சம் போல நீடுநில்லாது சடுமெனத் தோன்றிமாய்வ தோர் குறிப்பு. அதனைத் துணுக்கு என்றுமென்பது.

"ஒருவுநீ யெங்கூந்தல் கொள்ளல்யா
நின்னை
வெருவுதுஉங் காணுங் கடை" [கலித் -
௮௭]

என்றவழி அஞ்சத்தகுவது கண்டு அஞ்சுதலின்மையும் அதன் பின் நிகழாமையுங் காண்க.

அஞ்சினார்க் குள்ள வேறுபாடு

# மடி என்பது—சோம்புதல்.

"மடிமை குடிமைக்கட் டங்கிற்றன் னொன்னார்க்
கடிமை புகுத்தி விடும்." [குறள் - ௬௱அ]

என்றவழி மடி யென்பதோர் மெய்ப்பாடுண்மை யறிக.

கருதல் என்பது— குறிப்பு.

"குறிக்கொண்டு நோக்காமை யல்லா லொருகண்
சிறக்கணித்தாள் போல நகும்." [குறள் - ௲௯௫]

என்றவழி குறிக்கோள் என்பதோர் மெய்ப்பாடுண்மை யறிக.

ஆராய்ச்சி என்பது—ஒருபொருளைக்குறித்து அதன் இயல்பு எத்தன்மைத் தெனவாராய்தல். ஆராய்தல் எனினுந் தெரிதல் எனினுந் தேர்தலெனினும் நாடலெனினும் ஒக்கும்.

## பொருளதிகாரம் - மெய்ப்பாட்டியல்

௩௱௯௰

'நன்மையும்
தீமையும் நாடி நலம்புரி' [குறள் - ௫௱௰௧]

'ஆயு மறிவினர்' [குறள் - ௯௱௰அ]

'தேரான் பிறனைத் தெளிந்தான்' [குறள் - ருாஅ]

எனவும் ஆராய்தலென்பது தோற்றியவாறு காண்க.

விரைவு என்பது—ஒருபொருளைச் செய்யும் வினைத்தான் அது தாழ்க்கில் அப்பயன் எய்தான் கடிதின் முடித்தல் வேண்டுமெனக் குறித்த மனநிகழ்ச்சி.

"கன்றமர் கறவை மான
முன்சமத் தொழிந்ததன் தோழற்கு வருமே." [புறம் - உஎரு]

"போழ்துன்
சேயின் விரைந்தன்று மாதோ" [புறம் - அஉ]

எனவரும். பிறவு மன்ன.

உயிர்ப்பு என்பது—முன்புவிடும் அளவினன்றிச் சுவாதம் நீள விடுதல்.

" ... ... பாளுட்

பள்ளி யானையி னுயிர்த்தெ
னு[ள்ள]மின்னுந் தன்னுழை யதுவே." [குறுந் - ௱௪௨]

என வரும்.

கையாறு என்பது—காதலர் பிரிந்தால் வருந் துன்பமும் அந்நிகரனவும் வருவது.

"தொடிநிரை முன்கையாள் கையாறு கொள்ளாள்
கடிமனை காத்தோம்ப வல்லுவள் கொல்லோ" [கலித் - ௨௭]

என்றவழிக் கையாறென்பதும் ஓர் மெய்ப்பாடாயிற்று.

இடுக்கண் என்பது—துன்பமுறுதல். மேலதனோடு இதற்கிடைவேறுபாடு என்னை யெனின், கையாறு என்பது இன்பம் பெறாமையான் வருந் துன்பம்; இடுக்கணாவது துன்பமாயின வந்துறுதல்.

"அடுக்கி வரினு மழிவிலா னுற்ற
விடுக்க ணிடுக்கட் படும்." [குறள் - ௬௨௫]

என்றவழி இடுக்கணென்பது வருவதொன்றாகக் கூறியவாறு காண்க.

ஐயாறென்பது மனத்தின்கண் நிகழ்வதோர் மெய்ப்பாடு. இடுக்கணென்பது மெய்யானுந் தோற்றுவதோர் மெய்ப்பாடு.

பொச்சாப்பு என்பது—[1]மறத்தல்.

> "பொருடீர்ந்த [3]பொச்சாந்துஞ் சொல்லார் மருடீர்ந்த
> மாசறு காட்சி யவர்" [குறள் - ௱௯௯]

என்பதனாற் பொச்சாப்பு மறத்தலாயிற்று.

பொறாமை என்பது—பிறர்க்கு ஆக்க முதலாயின கண்டவழி யதனைப் பொறாது நடக்கும் மனநிகழ்ச்சி. அதனை அழுக்காறு என்ப.

(பிரதி)—1. சிகவாத. 2. மறைத்தல். 3. பொருடீர்ந்து பொச்சார்ந்து.

௧௱௬௮

# தொல்காப்பியம் - இளம்பூரணம்

"அழுக்காறெனவொரு பாவி திருச்செற்றுத்
தீயுழி யுய்த்து விடும்." [குறள் - ௱௬௮]

என்றவழி அழுக்காறு என
ஒருமெய்ப்பாடு உளதாகியவாறு
கண்டுகொள்க.

வியர்த்தல் என்பது—தன்மனத்தின் வெகுட்சி தோன்றியவழிப் பிறப்பதோர் புழுக்கம்.

"பொள்ளென வாங்கே புறம்வேரார் காலம்பார்த்
துள்வேர்ப்ப
ரொள்ளி யவர்." [குறள் - ௪௮௭]

இதன்கண் உள்வேர்ப்பர் என்றதனான் மனநிகழ்ச்சி ஆகியவாறு காண்க.

ஐயம்

என்பது—ஒருபொருளைக் கண்டவழி யிதுவெனத் துணியாதநிலைமை.

"அணங்குகொ லாய்மயில் கொல்லோ
கனங்குழை மாதர்கொல் மாலுமென்
னெஞ்சு." [குறள் - ௲௮௧]

[என்றவழி] ஐயம் மனத்தின்கண் நிகழ்ந்தவாறு காண்க.

மிகை என்பது—ஒருவனை நன்குமதியாமை.

"மிகுதியான் மிக்கவை செய்தாரைத்
தாந்தம்
தகுதியான் வென்று விடல்." [குறள் - ௱௫௮]

இதனுள் மிகுதி யென்பது

என்குமதியாமையாம்.

நடுக்கம்

நிகழ்ச்சி.

என்பது—யாதானும் ஒரு பொருளை இழக்கின்றோமென வருமன

"கொடுங்குழாய் [துற]க்குந [ர]ல்லர் கடுங்குதல்

காண்மார் நகைகுறித் தனரே" [கலித் - ௰௩]

எனவரும். இத்துணையும் கூறப்பட்டன அகத்திற்கும் [புறத்திற்கும்] பொது வென்று கொள்க.

(௰௨)

உருநி௭. புகுமுகம் புரிதல் பொறிநுதல் வியர்த்தல்
நகுநய மறைத்தல் சிதைவுபிறர்க் கின்மையொடு
(...ம். துணிவு) தகுமுறை நான்கே யொன்றென மொழிப.

என்-னின், மேல் அகத்திணைக்கும் புறத்திணைக்கும் பொதுவாகிய மெய்ப்பாடு உணர்த்தி, இனி அகத்திற்கே யுரியன உணர்த்துகின்றார்; முற்பட்ட அவத்தை பத்தினும் முதலவத்தைக்கண் பெண்பாலார் குறிப்பினால் வரும் மெய்ப்பாடு உணர்த்துதல் நுதலிற்று.

புகுமுகம் புரிதல் என்பது—தலைமகன் புணர்ச்சிக் குறிப்பினனாய்ப் புகுத முகத்தினை மாறுபடாது பொருந்துதல். அஃதாவது

"கூற்றமோ கண்ணோ பிணையோ மடவர
னோக்கமிம் மூன்று முடைத்து." [குறள்-௲௮௫]

என்றாற்போலக் கூறியவழி ஒருவாது நிற்றல்.

(பிரதி)—1. புறம்பேரார். 2. ருள்ளியவர். 3. வெயர்த்த.



போறிநுதல் வியர்த்தல் என்பது—அவ்வழி முகம்புக்கு அவனைப் பொருந்திய தலைமகள் உட்கும் நாணும் வந்துழி வரும் நுதல்வியர்ப்பு.

நகுநய மறைத்தல் என்பது—அதன்பின்னர்த் தலைமகன் கூறுவன கேட்டு வகை வந்துழி நயத்தலாகிய விருப்பத்தினைப் புலனாகாமை மறைத்தல்.

சிதைவுபிறர்க் கின்மை என்பது—தன் மனனழிவு பிறர்க்குப் புலனாகாமை நிற்றல். ஒடு எண்ணின்கண் வந்தது.

தகுமுறை நான்கே யொன்றென மொழிப என்பது—இவ்வாறு தகுதியுடைத் தாய் முறைபட வருவன நான்கும்

முதல் அவத்தைக்கண் நிகழும் மெய்ப்பாடு என்ற .

வாறு. (ம.ந)

உ௬அ. கூழை விரித்தல் காதொன்று களைத
லூழணி தைவர லுடைபெயர்த் துடுத்தலொடு
கெழீஇய நான்கே யிரண்டென மொழிப. 2.(வேட்கை)

என்-னின், இரண்டாம் அவத்தையாமாறு உணர்த்துதல் நுதலிற்று.

கூழைவிரித்தல் முதலாகச் சொல்லப்பட்ட முறைமையுடைய நான்கும் இரண்டாம் அவத்தைமெய்ப்பாடு என்றவாறு.

கூழைவிரித்தலாவது—மேல் நகுநயமறைத்தாள் காதன்மேல் வேட்கை செல்லுமாயின் வாளாது நிற்றலாற்றாது மயிரினைக் குலைத்தல்.

காதொன்று களைதல்

என்பது — காதிலணிந்த தொன்றை விழப்பண்ணி யதனைத் தேடுகின்றார் போல நிற்றல்.

ஊழணி தைவரல் என்பது—முறைமுறையாக அணிந்தவணியைத் தைவருதல்

என்றவாறு.

## உடைபெயர்த் துடுத்தல்

என்பது—ஆடையைக் குலைத்துடுத்தல்.

அவைநான்கும் காமத்திற்குறிபிலாதார் தலைமக்கள்முன் செய்யாமையாற் றனது காமக் குறிப்பினானும் அவள் வாளாது நிற்பின் இதற்குக் காரணம் என்னையெனப் பிறர் ஐயப்படாமற் சிறிது பொழுதாயினும் இவ்விடைநிற்கலாகும் எனவும் இவைநிகழ்த்தும் என்றவாறு. (௰௭)

உாறுகூ. அல்கு றைவர லணிந்தவை திருத்த
லில்வலி யுறுத்த லிருகையு மெடுத்தலொடு
சொல்லிய நான்கே மூன்றென மொழிப. (3)

என்-னின், மூன்றும் அவத்தைக்கண் நிகழுமெய்ப்பாடு உணர்த்துதல்நுதலிற்று.

அல்குல் தைவரல் முதலாகச் சொல்லப்பட்ட நான்கும் மூன்றும் அவத்தை

மெய்ப்பாடென்க என்றவாறு.

அல்குல் தைவரல் என்பது—மேல் உடைபெயர்த்துடுத்தவள் அதனைப் பேணும் மதிப்பு உள்வழி தம்மைப்பேணுதற் பெண்டிர்க்கு அழகு.

அணிந்தவை திருத்தலும் அவ்வாறே கொள்க.

இல்வலி யுறுத்தல் என்பது—தமது இல்லதோர் வலியுறுத்தல். அது சாரதிணைத் தாரைத் தமது இற்பிறப்புச் சொல்லி நிலைசெல்லாரைப்போல மறுத்துக்கூறுதல்.

42

# ௲எ௰

# தொல்காப்பியம் - இளம்பூரணம்

இருகையு மெடுத்தல் என்பது—அவ்வழி மறுத்த வாய்பாட்டாற் கூறினும் இரண்டு கையினையும் பிரிந்தார் காரணம்பற்றித் தெளர்த்தல். தலைமக்கள் முன்னர்ப் பெண்டிர் கைக்கெளர்த்தாராதலாற் புணர்ச்சிக் கொருப்பட்ட வுள்ளத்தாள் தெளர்த்தற் மென்க. இதனாற் பயன் காண்கேகல். (மறு)

உ௭௬. பாராட் டெடுத்தல் மடத்தப வுரைத்த
ஈரமில் கூற்ற மேற்றலர் நாணல்
கொடுப்பவை கோட லுளப்படத் தொகைஇ
பெடுத்த நான்கே நான்கென மொழிப.

மலிதல்

என்-னின், நான்காம் அவத்தைக்கண் வரும் மெய்ப்பாடு உணர்த்துதல் நுதலிற்று.

பாராட்டெடுத்தல் முதலாகச் சொல்லப்பட்ட நான்கும் நான்காமவத்தைக்கண்

நிகழும் மெய்ப்பாடென்க.

பாராட்டெடுத்த லாவது—தலைமகன் நின்றநிலையுங் கூறியகூற்றையும் தனித்த வழியும் எடுத்துமொழிதல்.

மடந்தப வுரைத்தல் என்பது—பெண்டிரது இயல்பாகிய மடப்பங் கெடச் சில கூறுதல். அது தலைமகன் கூற்று[நிகழும்]வழி யதற்கு மாற்றங் கொடுத்தலன்றித் தன் வேட்கை தோன்றக் கூறுஞ் சொல்.

ஈரமில் கூற்ற மேற்றலர் நாணல் என்பது—ஊராருஞ் சேரியாருங் கூறும் அருளில்லாத கூற்றைக் கேட்டு அலர் ஆயிற்றென நாணுதல்.

இச் 7 மெய்ப்பாடு [illegible].

கொடுப்பவை கோடல் என்பது—கன்னியாயினுந் தலையாயினும் பிறவாயினுந் தலைமகன் கொடுத்தவற்றைக் கோடல். மனத்தினன் உரிமை பூண்டானல்லது பிறன் பொருள் வாங்காமையின் இதுவுமோர் மெய்ப்பாடாக ஓதப்பட்டது. (௰௬)

உரசுக. தெரிந்துடம் படுதல் திளைப்புவினை மறுத்தல்
கரந்திடத் தொழிதல் கண்டவழி யுவத்தலொடு
பொருந்திய நான்கே யைந்தென மொழிப.

என்-னின், ஐந்தா மவத்தைக்கண் வரு மெய்ப்பாடு நிகழுமிடம் உணர்த்துதல் நுதலிற்று.

## தெரிந்துடம்படுதல் முதலாகச் சொல்லப்பட்ட மெய்ப்பாடாம் என்றவாறு.

# நான்கும் ஐந்தாம் அவத்தைக்கு

தெரிந்துடம் படுதலாவது—தலைமகன் கொடுப்பவை கொண்ட தலைமகள் ஆராய்ந்து உடம்படுதல் என்றவாறு. ஆற்றாமை பெருகுகின்ற காதலின் இத்துணையும் மறுத்தவன் உடம்படுதல் என்றார். அவ்வழியுந் தெரிந்துடம்படுதல் என்றமையால் ஆராய்தல்லது புணர்ச்சிக்கு உடம்படாமை கொள்க.

திளைப்புவினை மறுத்தல் என்பது—விளையாட்டாயமொடு திரிவாள் வேட்கை கலிதலான் அவ்விளையாட்டு வினையை மறுத்தல் என்றவாறு.

கரந்திடத்தொழிதல் என்பது—தலைமகனைக் காண்டல் வேட்கையால் ஒளித்துப் படத்தினின்று மொழிதல் என்றவாறு.

கண்டவழி யுவத்தல் என்பது—தலைமகனைக் கண்டவழி மகிழ்தல் என்றவாறு. (௰௭)

௨௱௬௨. புறஞ்செயச் சிதைதல் புலம்பித் தோன்றல்
கலங்கி மொழிதல் கையற வுரைத்தல்
விளம்பிய நான்கே யாறென மொழிப. ௧௮

என்-னின், ஆறும் அவத்தைக்கண்வரும் மெய்ப்பாடு நிகழுமாறு உணர்த்துதல் நுதலிற்று.

புறஞ்செயச் சிதைதல் முதலாகச் சொல்லப்பட்ட நான்கும் ஆறும் அவத்தைக் கண் மெய்ப்பாடாம் என்றவாறு.

புறஞ்செயச் சிதைதலாவது—தலைமகன் கோலஞ் செய்யுமிடத்து அதற்கு மகிழ்ச்சியின்றிச் சிதைவுடையளாதல்.

புலம்பித் தோன்றலாவது—பொலிவழிந்து தோன்றல்.

கலங்கி மொழிதல் என்பது—கூறுங்கூற்றுக் கலக்கமுற்றுக் கூறுதல்.

கையறவுரைத்த லாவது—செயலறவு தோன்றக் கூறல்.

இச் சொல்லப்பட்ட ஆறு அவத்தையும் பெண்பாலார் அல்லார்க்கும் பொது. இவை புணராதவழித் தோன்றுதல் பெரும்பான்மை. (௰அ)

உாகூ௩. அன்ன பிறவு மவற்றொடு சிவணி
மன்னிய வினைய நிமித்த மென்ப.

என்-னின், மேலதற்கோர் புறனடை யுணர்த்துதல் நுதலிற்று.

மேற் சொல்லப்பட்டனவும் அத்தன்மைய பிறவும் நிலைபெற்ற வினையுடைய நிமித்தமாம் என்றவாறு.

வினை என்பது—கற்பிற்குரிய கரணமாம். இவையெல்லாம் கற்பிற்குரிய கர[ண]த்து...தற்கு நிமித்தமாம் என்றவாறு.

அன்னவை பிறவுமாவன: நோக்காநோக்கி யின்புறுதல், தனியிடைநகுதல், நோக்குங் காலைச் செற்றார்போல் நோக்குதல், மறைந்துகாண்டல், தற்காட்டுறுத்தல்.

இக்கிரன அவத்தை பற்றி நிகழ்ந்தனவாயின் ஏழாவது முதலாகப் பத்தாவது ஈறாகக் கூறவெனின், ஏழாமவத்தை நாண் நீக்கிய காதலிற் றேறுதலொழிந்த காமத்து மிகுதியாகிய பெருந்திணைப்பாற்படும்; ஒத்தகாமத்து ஏழாவது: எட்டாவது உன்மத்தம்; ஒன்பதாவது மயக்கம்; பத்தாவது சாக்காடு; ஆதலான் கைக்கிளைத்திணைக்கண் ஒருவன் ஆறு எனக் கூறினர் என்று கொள்க. (௰க)

உாகூ௪. வினையுயிர் மெலிவிடத் தின்மையு முரித்தே.

என்-னின், மேலதற்கோர் புறனடை யுணர்த்துதல் நுதலிற்று.

கரணநிகழ்ச்சி உயிர்மெலிந்தவிடத்து இன்மையும் உரித்து என்றவாறு.

எனவே இயற்கையும் நிகழும் என்றவாறும். உம்மை எதிர்மறை யாகலான், கரண நிகழ்தல் பெரும்பான்மை. உயிர் மெலிவிடம் என்றமையால் ஐந்தாவது முதலாக இயற்கை

௩.௧௭௨

தொல்காப்பியம் - இளம்பூரணம்

நிகழும் என்று கொள்க. அதனானேயன்றே யவ்வழி தெரிந்துடம்படுதல் என ஓதுவாரா யிற்றென்க. (௨௰)

௨௱௬௰. அவையு முளவே யவையலங் கடையே.

என்-னின், கைக்கிளைக் குரியதோர் மரபு உணர்த்துதல் நுதலிற்று.

மேற்சொல்லப்பட்ட புகுமுகம்

புரிதல் முதலாயின உள: நடுவணைந்திணை யல்லாத

கைக்கிளைப் பொருண்மைக்கண்

என்றவாறு.

அவையலங்கடை என்றமையாற் பாடாண்பாட்டிற் கைக்கிளையும் கொள்ளப்படும். அஃதேல், ஆண்டுப் புகுமுகம் உளதோ வெனின், தலைமகள் காட்சி மாத்திரத்தைத் தனது வேட்கை மிகுதியாற் புதுமுகமாய்க் கொள்ளும் என்க. பிற்கூறிய அவை என்பன களவும் கற்பும்; முற்கூறிய அவை என்பன புகுமுகம் புரிதல் முதலாயின. அவையலங்கடை யவையு முளவே என மாறிக் கூட்டுக. (உக)

உாகூகூ. இன்பத்தை வெறுத்த றுன்பத்துப் புலம்ப
லெதிர்பெய்து பரித லேத மாய்தல்
பசியட நிற்றல் பசலை பாய்த
லுண்டியிற் குறைத லுடம்புநனி சுருங்கல்
கண்டுயின் மறுத்தல் கனவொடு மயங்கல்
பொய்யாக் கோடன் மெய்யே யென்ற
லையஞ் செய்த லவன்றம ருவத்த
லறனழிந் துரைத்த லாங்குநெஞ் சழித
லெம்மெய் யா[யி]னு மொப்புமை கோட
லொப்புவழி யுறுத்த லுறுபெயர் கேட்ட
லலத்தக னாடிற் கலக்கமு மதுவே.

என்-னின், மேல் நடுவ ணைந்திணைப் பகுதியாகிய களவிற்கும் கற்பிற்கு முரிய மெய்ப்பாடு உணர்த்தி, அதன்பின் கைக்கிளைக்குரியவாமாறு உணர்த்தினர். இனி இச்சூத்திரத்தாற் பெருந்திணைக் குரிய மெய்ப்பாடு உணர்த்துதல் நுதலிற்று.

இன்பத்தை வெறுத்தன் முதலாகச் சொல்லப்பட்ட இருபதும் ஐந்திணை யல்வழி வரும் என்றவாறு.

ஆராயின் நடுவ

அது என்பது—'அவையு முளவே யவையலங் கடையே' என்பதைச் சுட்டி நின்றது. கலக்கமும் காடின் என மாறுக. ஏற்புழிக்கோடல் என்பதனாற் பெருந்திணைப்பாற் கொள்ளப்படும். இது களவிற்கும் கற்பிற்கும் ஒக்கும். இவை தேறுதலொழிந்த காமத்தின்பாற் படுவனவும், மிக்க காமத்தின் மிடலின்பாற் படுவனவுமாம் [அகத்திணை - ௫௪].

இன்பத்தை வெறுத்தல் என்பது—கோலஞ்செய்தல் முதலாயினவற்றை வெறுத்தலும் தென்றலும் நிலவு முதலாயினவற்றை வெறுத்தலும். இவ்வாறு களவின்கண் வரிற் பிறர்க்கும் புலனும். கற்பின்கண் வரிற் பிறர் இயல்வழி மயங்கல மின்றாம்.

"கண்ணுள்ளார் காத லவராகக் கண்ணு
மெழுதேம்
கரப்பாக் கறிந்து" [குறள் - ௧௱௨௰௭]

௲௨௭௩.

"சிறுகுழ லோசை செறிதொடி[இ] வேல்கொண்
டெறிவது போலு மெமக்கு."

என வரும்.

துன்பத்துப் புலம்ப

லாவது—துன்பத்தின் கண்ணே

புலம்புறுதல்.

"இன்பங் கடலற்றுக் காம மதுவடுங்காற்
றுன்ப மதனிற் பெரிது." [குறள் - ௲௧௬௬]

என வரும.

எதிர்பெய்து பரிதல்

என்பது—தலைமகன் முன்னின்றி
அவனின்றாகப் பெய்து கொண்டு
வருந்துதல்.

"கண்ணுள்ளிற் போகா ரிமைப்பிற்
பருவரார்
நுண்ணியரெங் காத லவர்." [குறள் - ௲௱உ௬]

என வரும்.

ஏதமாய்தல்

என்பது—குற்றமாராய்தல்.

"துப்பி னெவனாவர்
மற்கொ றுயர்வரவு
நட்பினு ளாற்று பவர்." [குறள் - ௲௱௬௫]

என வரும்.

## பசியட நிற்றல்

என்பது—உண்ணாமை.

"நெஞ்சத்தார் காத லவராக வெய்துண்ட
லஞ்சுதும் வேபாக் கறிந்து." [குறள் - ௲௨
அ]

## பசலைபாய்தல்

என்பது—பசலை பரத்தல்.

'பசந்தா
ளிவளென்ப தல்லா லிவளைத்
துறந்தா
ரவரென்பா ரில்." [குறள் - ௲௮௮]

என வரும்.

உண்டியிற் குறைதல் என்பது—உணவு சுருங்குதல்.

"பாலு முண்ணாள் பழங்கண் கொண்டு" [அகம் - ௪அ]

என வரும்.

*உடம்பு நனி சுருங்கல்

என்பது—[உண்ணாமை காரணமாகத் தன்னுடம்பு மிகச் சுருக்கமுறுதல்.]

"பணைநீங்கிப் பைந்தொடி சோருந் துணைநீங்கித்
தொல்கவின் வாடிய தோள்." [குறள் - ௲௨௩௪]

என வரும்.

கண்டுயின் மறுத்தல் என்பது—உறங்காமை.

---

(பிரதி)—1. யாதல். *இதன் உரை பிரதியிற்காணப்படவில்லை.

"மன்னுயி ரெல்லாந் துயிற்றி
யளித்திரா
வென்னல தில்லைத் துணை." [குறள் -
௲௱௬௮]

என வரும்.

கனவொடு மயங்கல்

என்பது—கனவை நனவென
மயங்குதல்.

"நனவினு னல்காக் கொடியார்
கனவினு
னென்னெம்மைப் பீழிப் பது." [குறள்
- கூஉாயஎ]
[என வரும்.]

போய்யாக் கோடல்

என்பது—தலைவன் கூற்றைத்தன்னைப்

பொய்யாகக்கோடல்.

"வாயல்லா வெண்மை யுரையாது
சென்றீநின்
மாய மருள்வா ரகத்து." [கலித் -
அஅ]

மெய்யே யென்றல்

ஏகாரம் வினா.

என்பது—உரைத்த மாற்றத்தை மெய்யெனக் கூறுதல்.

"மெய்யே வாழி தோழி சாரன்
மைப்பட் ட[ன்]ன மாமுக முசுக்கலை
யாற்றப் பாயத் த[ப்ப] லேற்ற
கோட்டொடும் போகி யாங்கு நாடன்
றான்குறி வாராத் தப்பற்குத்
தாம்பசந் தனவென் றடமென் றோளே." [குறுந் - ௱௨௧]

இதனுட் 'கூறியது' என ஒரு சொல் வரவேண்டும்.

ஐயஞ் செய்தல் என்பது—தலைவன் குறிப்புக் கண்டு ஐயப்படுதல்.

"ஒன்றுத னிவவர் காதலர் மற்றவர்
கண்ணுவ தெவன்கொலோ வறியே னென்னும்" [கலித் - ௬]

என வரும்.

அவன்றம நுவத்தல் என்பது—தலைவன் தமரைக் கண்டவழி உவத்தல்.

"செல்வஞ் சிறப்பிற் சிறப்பச்செய் தீவாரா
வெம்மொடு சேர்ந்துசென் றீவாயாய் செம்மால்
கலம்புதி துண்டேள்ளா நாணிலி செய்த
புலம்பெலாந் தீர்க்குவெ மன்." [கலித் - அ௫]

என வரும்.

அறனழித் துரைத்தல் என்பது—அறத்தினை யழித்துக் கூறுதல்.

"விளியுமெ னின்னுயிர் வேறல்ல மென்பா
ரளியின்மை யாற்ற நினைந்து." [குறள் - ௲௨௱௯]

[என வரும்.]

ஆங்குநெஞ்சழிதல் என்பது—அறனழிந்துரைக்குமிடத்து நெஞ்சழிந்து கூறுதல்.



"பெறாஅமை யஞ்சும் பெறிற்பிரி வஞ்சு
மறாஅ விடும்பைத்தென் னெஞ்சு" [குறள் - ௧௨௯௫]

என வரும்.

௩.௱ எ௫

எம்மெய் யாயினும் ஒப்புமை கோடல் என்பது—யாதானுமோர் உடம்பாயினுந் தன்னோடு ஒப்புமை கோடல் என்றவாறு.

"புன்கண்ணை வாழி
மருண்மாலை யெங்கேள்போல்
வன்கண்ண
தோநின் றுணை." [குறள் - ௧௨௨௨]

[என வரும்.] அளியின்மை
[1]யறனின்மை கூறினுமாம்.

## ஒப்புவழி யுவத்தல்

என்பது—தலைமகனோடு ஒக்குமெனப் பிறிதொன்று கண்ட.
வழி யுவத்தல்.

"யாவருங் காணாந
ரின்மையிற் செத்தனன் பேணி"
என வரும்.

## உறுபெயர் கேட்டல்

என்பது—தலைவன் பெயர்கேட்டு மகிழ்தல். "நசைஇயர் நல்கா ரெனினு மவர்மாட்
டிசையு மினிய செவிக்கு." [குறள் - ௲௨௯]
[என வரும்.]

கலங்கும் என்பது—மனங்க

லங்குதல். மேற் 'கலங்கிமொழிதல்'
என்பது ஒருகாற்
சொல்லின்கண் வந்து பெயர்வது.
இது மனங்கலங்கி நிற்கும் நிலே.

"பொங்கிரு முந்நீர்
கலமெல்லா நோக்கினே
திங்களுட் டோன்ற விருந்த
குறுமுயா
லெங்கே ளிதனகத்
துள்வழிக் காட்டிமோ
காட்டினே. யாயிற் கதநாய்
கொளுவுவென்
வேட்டுவ ருள்வழிச்
செப்புவெ ளுட்டி
மதியொடு பாம்பு
படுப்பென் மதிதிரிந்
தென்னல்ல றீரா

வெனின்." [கலித் - ௱௪௨]

"கோடுவாய் கூடாப் பிறையைப் பிறிதொன்று
நாடுவென் கண்டேனென் சிற்றிலுட் கண்டாங்கே
யாடையான் மூடி
யகப்படுப்பென் சூடி
காணான் றிரிதருங் கொல்லோ மணிமிடற்று
மாண்மாலைக் கொன்றை யவன்." [கலித் - ௱௪௨]

என வரும்.

இச் சூத்திரத்துள் 'நலத்தக நாடி' எனக் கலக்கத்தைப் பிரித்துவைத்தமையாற் சொல்லப்பட்ட பத்தொன்பதினும் முதிர்ந்துவந்த நிலை என்று கொள்ளப்படும். இச் சூத்திரம் பொதுப்படக் கூறினமையாற் றலைமகற்கு ஏற்ப வருவன கொள்க. (௨௨)

உரசூஎ. முட்டுவயிற் கழறன் முனிவுமெய்ந் நிறுத்த
லச்சத்தி னகற லவன்புணர்வு மறுத்த
றூதுமுனி வின்மை துஞ்சிச் சேர்தல்

(பிரதி)—1. யறனின்றமை.

காதல் கைம்மிகல் கட்டுரை யின்மையென்
றாயிரு நான்கே யழிவில் கூட்டம்.

என்-னின், மேற் கூறப்பட்டன வெல்லாம் மண[னழிவு]நிகழ்ந்தவழி நிகழ்வன வாதலின், இவை மணன் அழியாதவழி நிகழ்வன என உணர்த்துதல் நுதலிற்று.

முட்டுவயிற் கழறல் என்பது—களவு இடையீடுபட்டொழி யதற்கு வருந்தாது இவ்வாறாகி நின்றதென அவனைக் கழறியுரைத்தல் என்றவாறு.

முனிவு மெய்ந்நிறுத்தல் என்பது—வெறுப்பினைப் பிறர்க்குப் புலனாகாமல் மெய்

யின் கண்ணே நிறுத்தல்.

அச்சத்தின் அகறல் என்பது—இவ்வொழுக்கம் [1]பிறர்க்குப்

புலனும் எனக் கூட்டத்

தின் அகன்றொழுகல்.

அவன்புணர்வு மறுத்தல்

என்பது—இது தலைமகன்

புணர்ச்சிக்கண் வாராக்

காலத்துத்தானும் மனனழியாது

நிற்கும் நிலை.

தூதுமுனி வின்மை

என்பது—தூதுவிட்டவழி வெறுமை.

துஞ்சிச் சேர்தல்

என்பது—கவற்சியான்

உறங்காமையன்றி யுரிமைபூண்டமை

யான் உறக்கம் நிகழ்தல்.

காதல் கைம்மிகல்

எ　　ன்பது—அவ்வழியும்

அன்பின்மையின்றிக் காதல் கைமிக்கு

வருதல.

கட்டுரை யின்மை

மறைத்தமர்ந்திருத்தல்.

என்பது—கூற்று　　நிகழ்த்துதலன்றி

யுள்ளக் கருத்தினை

இவை நடுவணைந்திணைக் குரிய. இவற்றிற்குச் செய்யுள் களவியலுட் காட்டப்பட்டது: வரைந்தோதாமையான். (உங)

உாகூஅ. தெய்வ மஞ்சல் புரையறத் தெளித
லில்லது காய்த லுள்ள துவர்த்தல்
புணர்ந்துழி யுண்மை பொழுதுமறுப் பாத
லருண்மிக வுடைமை யன்புமிக நிற்றல்
பிரிவாற் றுமை மறைத்தவை யுரைத்தல்
புறஞ்சொன் மாணுக் கிளவியொடு தொகைஇச்
சிறந்த பத்துஞ் செப்பிய பொருளே.

என்-னின், இஃது அழிவில் கூட்டத்திற் குரியபொருள் உணர்த்துதல் நுதலிற்று.
தெய்வ மஞ்சல்'என்பது—தெய்வத்தினை யஞ்சுதல்.

"மன்ற மராஅத்த பேமுதிர் கடவுள்
கொடியோர்த் தெறூஉ மென்ப" [குறுந் - அஎ]

எனவும்,

"நீகூறும் பொய்ச்சூ ளணங்காகி மற்றினி
யா[ர்]மேல் விளியுமோ கூறு" [கலித் - அஅ]

எனவும் வரும்.

(பிரதி)—1. கூபத்தன்.

போருளதிகாரம் - மெய்ப்பாட்டியல்
ந௱௭௭

என்றும் வரும்.

புரையறந் தெளிதல் என்பது—'கடன்மிக்கனவே' என்றவழிப் பரத்தைமை கண்டு புலவாது '[1]இதனைப்போற்றல் 'இல்லுறைமகளிர்க் கியல்பென்னும் அறத்தினானே' எனக்கூறியவாறு கண்டுகொள்க.

இல்லது காய்தல் என்பது— தலைமகன்[கணி]ல்லாத குறிப்பினை உளதாகக் கொண்டு காய்தல்.

யவன்மாட்டு

"யாரினும் காதல

மென்றேமா வூடினாள்

யாரினும்

யாரினு மென்று." [குறள் - ௧௩௱௰௪]

இதனுள் சொன்னமாற்றத்தை

சொல்லிக் காய்ந்தவாறு காண்க.

வேறாகப் பொருள்கொண்டு

இல்லாததனைச்

உள்ளதுவர்த்தல்

என்பது—உள்ளதனை யுவர்த்துக் கூறுதல். அது தலைவன்
செய்கின்ற தலையளியை வெறுத்தல்.

"வெய்யாரும்

வீழ்வாரும் வேறாகக் கையின்
முகையலர்ந் தன்ன முயக்கின்
றொகையின்றே
²தண்பனி வைக லெமக்கு." [கலித் - எஅ]

[எனவரும்.]

புணர்ந்துழி யுண்மை

என்பது—புணர்ந்தவழி யூடலுள் வழி
மறைத்துக்கூறாது

அவ்வழி மனநிகழ்ச்சியுண்மை

கூறுதல்.

"[த]ளிரும் பருவத்தே [த]ம்மானுந்
தென்றல்
வளியெறியின் மெய்யிற்
கினிதா-மொளியிழா
யூடி யிருப்பினு,மூரா னறுமேனி
கூட லினிதா மெமக்கு." [ஐந்திணையைம் .. ரு௰]

[எனவரும்.]

## பொழுதுமறுப்பாதல்

என்பது—தலைவன் வரும்பொழுது நியமமின்றி மறுப்பு வந்துழிப் பொழுதினைப் பற்றி நிகழும் மனநிகழ்ச்சி.

"புல்லிய கேளிர் புணரும் பொழுதறியே
னல்லியா கெல்லையென் றூங்கே பகன்முனிவே.

னெல்லிய காலை யிராமுனிவேன் யானுற்ற

வல்லல் களைவா

ரிலேன்." [கலித் - ௱௪௪]

எனவரும்.

இது பெருந்திணைக்கு உரியதன்றோ எனின், ஆண்டு 'மரபுநிலை திரியா மாட்சிய வாகி விரவும் பொருளும்' [அகத்திணை - ௪௮] விரிந்ததெனக் கொள்க.

அருண்மிக

வுடைமையாவது—தலைமகன்மாட்டு

அருள்புலப்பட நிற்கும் நிலை.

'முதைச்சுவற்கலித்த' என்னும்

அகப்பாட்டினுள்,

"நடுங்குதுயர் களைந்த நன்னராளன்

சென்றனன் கொல்லோ தானே ...

உடுவோழ் புற்றின வழக்கறு நெறியே" [அகம் - அஅ]

(பிரதி)—1. இதனைப்பொத்தல். 2. கண்பனி.

எனவரும். அவன் போனபி[ன்பு]
இடையூறின்றிப்
பெயர்ந்தான்கொல்லென

அருள் மிகுத்தவாறு காண்க.

அஃ்டுமிக நிற்றல்

என்பது—அன்பு புலப்பட நிற்றல்.

“கொடிய னு[யிது மா]க
வலனே தோழி என்னு[யிர்கா வலனே]” [சிற்றெட்டகம்]

என்றவழி, அன்புதோன்ற

நின்றவாறு காண்க.

பிரிவாற்றமை

என்பது—பிரிவின்கண் ஆற்ருமை.

“செல்லாமை யுண்டே லெமக்குரை

மற்றுநின்

வல்வரவு வாழ்வார்க் குரை.” [குறள் -

தூாடுக]

என வரும்.

மறைத்தவை யுரைத்த

# புறஞ்சொன் மாணாக் கிளவியோடு

# தொகைஇ

என்பது—1மறைத்த ஒழுக்கத்தைக் கூறிய புறஞ்சொல் லாகிய அலர் மாட்சிமைப் கிளவியோடுகூட என்றவாறு.

படாக்

மறைந்தவை யுரைத்த பு[ற]ன்சொல்லாவது—அலர். மாணாமையாவது—அவ்வலர் மாட்சிமைப்படாமற் கற்புக்கடம் பூண்டல். அன்றியும்

"மாணா மறந்துள்ளா

நாணிலி" [கலித் - ௮௯]

என்றாற் போல மாணாமை என்பது மிகாமை எனவுரைப்பினும் அமையும். அலர் மிகாமைக் கூறாக் கூற்றினும் கற்புக்கடம் பூண்டு கூறுதல்.

"கடுநான் வருஉ மியறேர்க் கொண்கனொடு
செலவயர்ந் திசினால் யானே

என வரும்.

யலர்சுமந் தொழிகவிவ் வழுங்க லூரே." [நற்றிணை - ௱௪௩]

# அலர்மிகாக் கிளவி

யாவது—அதற்கு உள்ளம் நாணுதல்.

"களிறுகவர் கம்பலை
போல
வலரா கின்றது பலர்வாய்ப் பட்டே." [அகம் - கூசு]

என வரும்.

சிறந்த பத்துஞ் செப்பிய பொருளே என்பது—இச்சொல்லப்பட்ட பத்தும் மேற்சொல்லப்பட்ட அழிவில் கூட்டப்பொருள் என்றவாறு. என்றவழி நடுவணைந்திணைக் குரிய பொருள் என்றவாறு.

(உச)

உாசுகூ. பிறப்பே குடிமை யாண்மை யாண்டோ
டுருவு நிறுத்த காம வாயி
னிறையே யருளே யுணர்வொடு திருவென
முறையுறக் கிளந்த வொப்பினது வகையே.

என்-னின், இது களவியலுட் கூறப்பட்ட தலைவற்குந் தலைவிக்கும் உளதாகும் ஒப்புப்பாகுபாடு உணர்த்துதல் நுதலிற்று.

இதற்குப் பொருள் களவியலுள் உரைத்தாம்.

(உ௫)

(பிரதி)—1. மறைந்த.

உ௱எ௰. [1]நிம்பிரி கொடுமை வியப்பொடு புறமொழி
வன்சொற் பொச்சாப்பு மடிமையொடு குடிமை
யின்புற லேழைமை மறப்போ டொப்புமை
யென்றிவை யின்மை யென்மனார் புலவர்.

என்-னின், இது தலைமக்கட்காகாத குணம் வரையறுத்து உணர்த்துதல் நுதலிற்று.

நிம்பிரி என்பது—அழுக்காறு. அவ்வியம் என்பதும் அது.

கொடுமை என்பது—[2]அறனழியப் பிறரைச் சூழும் சூழ்ச்சி.

வியப்பென்பது—தம்மைப் பெரியராக நினைத்தல்.

புறமொழி என்பது—புறங்கூறுதல்.

வன்சொல் என்பது—கடுஞ்சொற்கூறல்.

பொச்சாப்

பென்பது—தம்மைக் கடைப்பிடியாமை.

அது சோர்வு.

மடிமை என்பது—முயற்சி

யின்மை.

குடிமை யின்புறல் என்பது—தன்குலத்தினானுந் தன்குடிப்பிறப்பினானுந் தம்மை மதித்து இன்புறுதல்.

ஏழைமை

என்பது—பேதைமை.

மறப்பு என்பது—யாதொன்றாயினுங் கற்றதனையுங் தனையும் மறத்தல். ஒடு எண்ணின்கண் வந்தது.

கேட்டதனையும் பயின்ற

ஒப்புமை

என்பது—ஆண்பாலாயினும்

பெண்பாலாயினுந் தான் காதலிக்கப் பட்

டாரைப் போ[ல்]வாரைக் கண்டவழி

அவர்போல்வர் என ஆண்டு நிகழும்

உள்ளநிகழ்ச்சி.

அது உலகின்கட் கீழ்மக்கண்மாட்டுங்

கண்ணிலோர்மாட்டும் நிகழ்தலின் அது

தலைமக்கட்

காகாதென விலக்கப்பட்டது.

என்றிவை யின்மை

யென்மனார் புலவர்

என்பது—இச்சொல்லப்பட்டன இல்லை

யாதலும் வேண்டும்: மேற்

சொல்லப்பட்டவற்றோடுங் கூட்ட

என்றவாறு.

மேற்

சொல்லப்பட்டவற்றொடுங்கூடுதல்

அதிகாரத்தான் வந்தது.

இவ்விரண்டு சூத்திரத்தானும்

ஒருமுகத்தானாய இலக்கணங் கூறியவாறு.

உ௱எக. கண்ணினுஞ் செவியினுந் திண்ணிதி னுணரு
முணர்வுடை மாந்தர்க் கல்லது தெரியி
[னன்]னயப் பொரு[ள்கோ] ளெண்ணருங் குரைத்தே. 58

என்-னின், இது அதிகாரப்புறனடை.

ஈண்டுச் சொல்லப்பட்ட நல்ல நயத்தினையுடைய மெய்ப்பாடெல்லாம் ஆராயுங்காற் கண்ணானுஞ் செவியானும் விளக்க உணரும் அறிவுடைமாந்தர்க் கல்லது கருதல் அரிது என்றவாறு. (உஎ)

# ஆறுவது மெய்ப்பாட்டியல் முற்றும்.

(பிரதி)—1. நிம்புரி. 2. அதன்வழிப்.

# ஏழாவது - உவமையியல்.

—⊰⊱—

உா௭௨. வினைபயன் மெய்யுரு வென்ற நான்கே
வகைபெற வந்த வுவமைத் தோற்றம்.

என்பது சூத்திரம்.

இவ்வோத்து என்ன பெயர்த்தோ எனின், உவமையியல் என்னும் பெயர்த்து.

ஒருபுடை ஒப்புமைப்பற்றி யுவமை உணர்த்தினமையாற் பெற்ற பெயர். மெய்ப்பாடு

பற்றித் தோன்றி வழக்குவது.

இதனைப் பயன் என்னையெனிற் பதோவெனின், புலன் அல்லாதன புலனாதலும் அலங்காரமாகிக் கேட்டார்க்கின்பம் பயத்தலும். ஆப்போலும் ஆமா என வுணர்த்தியவழி, அதனைக் காட்டகத்துக் கண்டான் முன்கேட்ட ஒப்புமைபற்றி இஃது ஆமாவென்று அறியும். “தாமரைபோன் வாண்முகத்துத் தையலீர்” என்றவழி அலங்காரமாகிக் கேட்டார்க்கு இன்பம் பயக்கும். அஃதாவது மேற்சொல்லப்பட்ட எழுதிணையினும் யாதனுள் அடக்கும் எனின், அவையெல்லாவற்றிற்கும் பொதுவாகிப் பெரும்பான்மையும் அகப் பொருள் பற்றிவரும்.

மேற் குறிப்புப்பற்றி வரும் மெய்ப்பாடு வருதலின் அதன்பின் கூறப்பட்டது.

கூறினார்; இது பண்புந்தொழிலும்பற்றி

இதன் தலைச்சூத்திரம் என்னுதலிற்றோ வெனின், உவமத்தினை யொருவாற்றாற் பாகுபாடு உணர்த்துதல் நுதலிற்று.

வினைபயன் மெய்யுரு என்ற நான்கே வகைபெற வந்த உவமைத் தோற்றம் என்பது—தொழிலும் பயனும் வடிவும் நிறனும் என்று சொல்லப்பட்ட நான்குமே அப் பாகுபட வந்த உவமைக்கண் புலனும் என்றவாறு.

எனவே கட்புலமல்லாதனவு முள என்றவாறும். அவை செவியினானும் நாவினானும் மூக்கினானும் மெய்யினானும் மனத்தினானும் அறியப்படுவன. இவ்விருவகையும் பாகுபட வந்த உவமையாம்.

அவற்றுள், கட்புலனாகியவற்றுள் வினையாவது நீட்டல் முடக்கல் விரித்தல் குவித்தல் முதலாயின. பயனாவது நன்மையாகவும் தீமையாகவும் பயப்பன. வடிவாவது வட்டம் சதுரம் கோணம் முதலாயின. நிறமாவன வெண்மை பொன்மை முதலாயின. இனிச் செவிப்புலனாவது ஓசை. நாவினான் அறியப்படுவது கைப்பு காழ்ப்பு முதலிய சுவை. மெய்யினான் அறியப்படுவன வெம்மை தண்மை முதலாயின. மூக்கால் அறியப்படுவன நன்னாற்றம் தீநாற்றம். மனத்தால் அறியப் படுவன இன்பதுன்ப முதலியன.

உதாரணம்:—

"புலிபோலப் பாய்ந்தான்" என்பது வினை.
"மாரி யன்ன வண்கை" [புறம் - ௱௩௩.] என்பது பயன்.
"துடி போலும் இடை" என்பது வடிவு.



"தளிர் போலும் மேனி" என்பது நிறம்.

"குயில்போன்ற மொழி"

"வேம்புபோலக் கைக்கும்"
"தீப்போலச் சுடும்"
"ஆம்ப னூறுந் துவர்வாய்" [குறுந் - ௩௱]
"தம்மி லிருந்து தமதுபாத் துண்டற்றா
லம்மா வரிவை
முயக்கு." [குறள்-௲௱௭] பிறவு
மன்ன.

௨௱௭௩. விரவியும் வரூஉம்
மரபின வென்ப.

என்-னின், மேலதற்கோர்
புறனடை யுணர்த்துதல்

[செவியாலறியப்பட்டது.]
[நாவினாலறியப்பட்டது.]
[மெய்யினாலறியப்பட்டது.]

[மூக்காலறியப்பட்டது.]

[மனத்தானறியப்பட்டது.]

(க)

நுதலிற்று.

மேற்சொல்லப்பட்ட உவமைகள் ஒரோவொரு பொருளான் வருதலின்றி இரண்டும் பலவும் விரவி[யும்] வரும் மரபினையுடைய என்றவாறு. உம்மை இறந்தது தழீ[இ]யிற்று.

"இலங்குபிறை யன்ன விலங்குவால் வையெயிற்று" [அகம்-கடவுள்வாழ்த்து]

என்றவழி வடிவும் நிறனும் விரவிவந்தது. பிறவும் அன்ன. இன்னும் "விரவியும் வரூஉம் மரபின" என்றதனாற் பலபொருள் விரவிவந்தது.

['அடைமரை யாயிதழ்ப் போதுபோற் கொண்ட
குடைநிழற் றோன்றுநின் செம்மலைக் காணூஉ'] [கலித் - அ௧]

[என்றவழித்] தாமரையிலையும் பூவும் குடைக்கும் புதல்வற்கும் உவமையாயினும் தோற்றத்திற் கிரண்டும் ஒருங்குவந்தமையான் வேறோதப்பட்டது. இன்னும் "விரவியும் வரூஉம் மரபின" என்றதனால் 'தேமொழி'எனத்தேனின்கண் உளதாகிய நாவிற்கினிமையும் மொழிக்கண் உளதாகிய செவிக்கினிமையும் உவமிக்கவருதலுங் கொள்க. பிறவும் இந்நிகரனவெல்லாம் இதுவே யோத்தாகக்கொள்க. (உ)

உ௭௪௪. உயர்ந்ததன் மேற்றே யுள்ளுங் காலை.

என்-னின், மேலதற்கோர் சிறப்புவிதி யுணர்த்துதல் நுதலிற்று. மேற்சொல்லப்

பட்ட உவமை ஆராயுங்காலத்து உயர்ந்ததன் மேலன என்றவாறு.

ஈண்டு உயர்ச்சியாவது—வினைமுதலாகச் சொல்லப்பட்டன உயர்தல்.

"அரிமா வன்ன

வணங்குடைத் துப்பின்" [பட்டினப்.

உ௯அ]

என்றவழி[த்] துப்புடையன

பலவற்றினும் அரிமா உயர்ந்ததாதலின்

அதனை

உவமையாகக் கூறப்பட்டது.

"தாமரை புரையுங் காமர் சேவடி" [குறுந்-கடவுள்வாழ்த்து]

என்றவழி சிறப்புடையன பலவற்றினும் தாமரை உவமையாகக் கூறப்பட்டது. அஃதே தல்

யுயர்ந்ததாகலின் அதனை

மேற்சொல்லப்பட்ட உவமை தம்மின் உயர்ந்தவற்றொடு உவமிக்கப்பட்டனவேனும், சிறப்பாதல் நலனுதல் காதலாதல் வலியாதல் நிலைக்களனாக வரும் என்றவாறு. இவையிற்றைப்பற்றித் தோன்றுமென்பது கருத்து.

"முரசு முழங்கு தானை மூவருங் கூடி
யரசவை யிருந்த தோற்றம் போலப்
பாடல் பற்றிய பயனுடை யெழாஅல்"
[பொருநராற் - ௫௪ - ௫௫]

எனச் சிறப்புப்பற்றி வந்தது.

"துவத் தன்ன வியறுடை யகரைப்பின்" [புறம் - ௨௫௧]
என்பது நலம்பற்றி வந்தது.

"கண்போல்வா னொருவ னுளன்"
என்பது காதல்பற்றி வந்தது.

"அரிமா அன்ன அணங்குடைத் துப்பின்" [பட்டினப் - ௨௯௮]
என்பது வலிபற்றி வந்தது.

முதலுஞ் சினையுமென்று சொல்லப்பட்ட இருவகைப்பொருட்கும் கருதிய மரபி னான் அவற்றிற்கேற்பவை உரியவாம் என்றவாறு.

சொல்லதிகாரத்துட் "செப்பினும் வினாவினுஞ் சினைமுதற் கிளவிக் கப்பொரு ளாகு முறழ்துணைப் பொருளே" என்றார். அவ்வாறன்றி யுவமைக்கு நியமமில்லை என்ற வாறாயிற்று.

"ஒருகுழை யொருவன்போ லிணர்சேர்ந்த மராஅமும்" [கலித் - உ௬] 36

என்பது முதற்கு முதல் உவமமாயிற்று.

"அடைமரை யா[யி]தழ்ப் போதுபோற் கொண்ட
குடைநிழற் றோன்றுநின் செம்மலைக் காணூஉ" [கலித் - அ௪]

என்பது முதற்குச் சினை யுவமமாயிற்று.

"தாமரை புரையுங் காமர் சேவடி" [குறுந் - கடவுள்வாழ்த்து]

என்பது சினைக்குச் சினை யுவமமாயிற்று.

"நெருப்பி னன்ன சிறுகட் பன்றி" [அகம் - அ௪]

என்பது சினைக்கு முதல் உவமமாயிற்று.

௨௭௮. சுட்டிக் கூறா வுவம மாயிற்
பொருளெதிர் புணர்த்துப் புணர்த்தன கொளலே. || 58.

என்-னின், இதுவுமோர் வேறுபாடு உணர்த்துதல் நுதலிற்று.

சுட்டிக் கூறா வுவமை என்பது—உவமிக்கப்படும் பொருட்கு உவமை இது வெனச் சுட்டிக்கூறாமை. அவ்வாறு வருமாயின் உவமச்சொல்லொடு பொருந்த உவமிக்கப்படும் பொருளொடு புணர்த்து உவமவாய்பாடு கொள்க என்றவாறு. இதனுற் சொல்லிபது உவமவாய்பாடு தோன்று[1]உவமம் பொருட்குப் புணராக்கண்ணும் உவமை உள என்றவாறாம்.

"மோப்பக் குழையு மனிச்ச முகந்திரிந்து
நோக்கக் குழையும் விருந்து." [குறள் - கூ0]

இதன்கண் 'அதுபோல' எனச் சுட்டிக்கூறா வுவமை யாயினவாறு கண்டுகொள்க. (எ)

௨௭௯. உவமமும் பொருளு மொத்தல் வேண்டும். ||

என்-னின், இஃது உவமைக்குரியதோர் மரபு உணர்த்துதல் நுதலிற்று.
இரட்டைக் கிளவியாயினும், நிரனிறுத்தமைத்த நிரனிறைச்சுண்ணமாய் வரினும்,
மிக்குக்குறைந்தும் வருதலன்றி யுவமை யடையடுத்து வரினும், தொழிற்பட்டு வரினும்,
ஒன்றும் பலவுமாகி வரினும், வருமொழிபு மவ்வாறே வருதல் வேண்டும் என்றவாறு. அவ்
வழி வாராது மிக்குக்குறைந்தும் வருவது குற்றம் என்றவாறும்.

உ௱அ௰. பொருளே யுவமஞ் செய்தனர் மொழியினு *
மருளறு சிறப்பினஃ துவம மாகும்.

என்-னின், இதுவும் உவமைக்கண் வருவதோர் வேறுபாடு உணர்த்துதல் நுதலிற்று.

(பிரதி)—1. உவமப் பொருட்குப் புணர்க்கினும்.

௨௱அ௰

தொல்காப்பியம் - இளம்பூரணம்

உவமிக்கும் பொருடன்னை யுவமமாக்கிக் கூறினும் மயக்கமற்ற சிறப்பு நிலைமையான் எய்தும் உவமையாகு மென்றவாறு.

* ஒருசாராசிரியர் ரூபகம் என்று சொல்லப்பட்டது உவமைபற்றி வருதலின் இஃது உவமையின்பாகுபாடு என்பது இவ்வாசிரியர் கருத்து.

"இரும்புமுகஞ் செறித்த வேந்தெழின்
மருப்பிற்
பெருங்கை யானை கொண்மூ வாக
நீண்மொழி
மறவ ரெறிவன ருயர்த்த
வாண்மின் னாக
வயங்குகடிப் பமைந்த
குருதிப் பல்லிய
முரசுமுழக் காக

வரசர்ப் பணிக்கு மணங்குறு பொழுதின்
வெவ்விசைப் புரவி வீசுவளி யாக
விசைப்புறு வல்வில் வீங்குநா ணுதைத்த
கணைத்துளி பொழிந்த கண்ணகன் கிடக்கை
யீரச் செவ்வியிற் றேரே ராக
விடியல் புக்கு நெடிய நீட்டிநின்

செருப்படை மிளிர்த்த திருத்துறு பைஞ்சால்
பிடித்தெறி வெள்வேல் கணையமொடு வித்தி
யிருந்தலை சாய்த்த வெருவரு பைங்கூழ்ப்
பேஎ யெற்றிய பிணம்பிறங்கு பல்போர்க்
கானநரி யொடு கழுகுகளம் படுப்பப்

பூதங் காப்பப் பொருகளந் தழீஇப்
பாடுநர்க் கிருந்த பீடுடை யாளன்” [புறம் - ௩௬௯]

என வரும்.

"பாசடைப் பரப்பிற் பன்மல ரிடைநின்
றொருதனி யோங்கிய விரைமலர்த் தாமரை
யரச வன்ன மாங்கினி திருப்பக்
கரைநின் றாடு மொருமயி றனக்குக்
கம்புட் சேவற் கனைகுரன் முழவாக்
கொம்ப ரிருங்குயில் விளிப்பது காணாய்" [மணிமே - ச, அ - ௰௩]

என்பதும் அது. இவ்வாறு வருவனவெல்லாம் இச்சூத்திரத்தாற் கொள்க. (௬)

உ௱அக. பெருமையுஞ் சிறுமையுஞ் சிறப்பிற் றீராக்
குறிப்பின் வரூஉ நெறிப்பா டுடைய.

என்-னின், இதுவும் உவமைக்குரியதோர் மரபுணர்த்துதல் நுதலிற்று.

உவமையும் பொருளும் ஒத்தனகூறலே யன்றிப் பெருகக்கூறலுஞ் சிறுகக்கூறலும் மேற்சொல்லப்பட்ட சிறப்பென்னும் நிலைக்களத்து நீங்காச் சிறப்பின்வரூஉம் வழக்கப் பாட்டினையுடைய என்றவாறு. எனவே வழக்கின்கட் பயின்று வாராத இறப்பவுயர்தலும் இறப்பவிழிதலும் ஆகா வென்றவாறு.

"அவாப்போ லகன்றத னல்குன்மேற் சான்றோ
ருசாஅப்போல வுண்டே மருங்குல்"

(பிரதி)—1. சாய்த்த.

# பொருளதிகாரம் - உவமையியல்

என்றவழி அல்குல் பெரிதென்பான் ஆசையோடுவமித்தலின் இது தக்கதாயிற்று; மருங்குல் நுண்ணிதென்பான் சான்றோருசாவொடு உவமித்தலின் அதுவும் தக்கதாயிற்று. அவை சிறப்புப்பற்றி வந்தன.

இனி நெறிப்பாடின்றி வருவன இறப்ப வுயர்தலும் இறப்ப இழிதலும் என இருவகைப் படும்.

"இந்திரனே போலு மிளஞ்சாத்தன்...நாறுமிணர்" [யாப். வி. ஒழி.]

இஃது இறப்பவுயர்ந்தது. வழக்கிறந்துவருதலின் இவ்வாறு வரும் உவமை கூறப் படாது.

"வள்ளெயிற்றுப் பேழ்வாய் ஞமலிக்கு மான்குழா
மெள்ளி யிரிவதுபோ லெங்கெங்கும் - வள்ளற்கு
மாலார் கடல்போல மண்பரந்த வாட்டானை
மேலாரு மேலார் விரைந்து." [யாப். வி. ஒழி.]

இஃது இறப்ப இழிதலின் இதவு மாகாது.

அஃதேல் "நாயனையார் கேண்மை தழீஇக் கொளல்வேண்டும்" [நாலடி - உகந] என வருமால் எனின், அது நாயின்கட் கிடக்தோர் நற்குணம்பற்றி வருதலின் இறப்ப இழிதல் ஆகாது. (ம)

யாஅ௨. அவைதாம்
அன்ன வேய்ப்ப வுறழ வொப்ப
வென்ன மான வென்றவை யெனாஅ
வொன்ற வொடுங்க வொட்ட வாங்க
வென்ற வியப்ப வென்றவை யெனாஅ
வெள்ள விழைய விறப்ப நிகர்ப்பக்
கள்ளக் கடுப்ப வாங்கவை யெனாஅக்
[காய்ப்ப மதிப்பத் தகைய மருள
மாற்ற மறுப்ப வாங்கவை யெனாஅப்
புல்லப் பொருவப் பொற்பப் போல
வெல்ல வீழ வாங்கவை யெனாஅ]
நாட நளிய நடுங்க நந்த
வோடப் புரைய வென்றவை யெனாஅ
வாறு றுவமையு மன்னவை பிறவுங்
கூறுங் காலைப் பல்குறிப் பினவே.

என்-னின், இஃது உவமையுணர்த்துஞ் சொற்களை வரையறுத்து உணர்த்துதல் நுதலிற்று.

மேற்சொல்லப்பட்ட உவமைச்சொற்கள்தாம் அன்ன என்பது முதலாகப் புரைய என்பதீறாக வந்தனவும் அன்னவை பிறவுமாகிச் சொல்லுங்காலத்துப் பல குறிப்பினையுடைய என்றவாறு.

சொல்லுங்காலத்து என்றமையிற் சொல்லென்பது கொள்க.

அன்னபிறவாற் கொள்ளப்படுவன: நோக்க, நேர, அனை, அற்று, இன், எந்து, ஏர், சீர், கெழு, செத்து, ஏர்ப்ப, ஆர என்றித் தொடக்கத்தன கொள்க.

'பல்குறிப்பின' என்றதனான் இச்சொற்கள் பெயரெச்ச நீர்மையவாய் வருவனவும் வினையெச்ச நீர்மையவாய் வருவனவும் முற்று நீர்மையவாய் வருவனவும் இடைச்சொல் நீர்மையவாய் வருவனவும் எனக்கொள்க. 'புலிபோன்ற சாத்தன்' 'புலிபோலுஞ் சாத்தன்' என்பன பெயரெச்சம். 'புலிபோன்று வந்தான்', 'புலிபோலப் பாய்ந்தான்' என்பன வினையெச்சம். 'புலிபோலும்' 'புலிபோன்றனன்' என்பன முற்று. அன்ன, இன்ன [என்பன] இடைச்சொல்.

இன்னும் 'பல்குறிப்பின' என்றதனான் விரிந்தும் தொக்கும் வருவனவுங்கொள்க. 'தேன்போல இனியமொழி' இது விரிந்தது. 'தேன்போலும் மொழி' இது உவமை விரிந்து ஒப்புமை குறித்துத் தொக்குநின்றது. 'தேமொழி' என்பது எல்லாந்தொக்கது. பிறவு மன்ன.

ஈண்டு எடுத்தோதப்பட்ட முப்பத்தாறினும் ஒன்ற, என்ற, மாற்ற, பொற்ப, நாட, நடுங்க என்பனவொழித்து நின்ற முப்பதும் அன்ன பிறவாற் கொள்ளப்பட்டவற்றுள் நோக்க என்பதும் நேர என்பதுஞ் சிறப்புவிதி யுடைத்தாதலின் அதற்கு உதாரணம் ஆண்டுக் காட்டுதும். ஏனைய ஈண்டுக் காட்டுதும்.

'வேலொன்று கண்'

'கயலென்ற கண்'

'மணிநிற மாற்றிய மாமேனி'

'மதியம் பொற்ப மலர்ந்த வாண்முகம்'

'வேயொடு நாடிய தோள்'

'படங்கெழு நாகம் நடுங்கு மல்குல்'

'குன்றி னனையாருங் குன்றுவர்' [குறள்

'இறந்தாரை யெண்ணிக்கொண் டற்று' [குறள் - உ௨.]
'மருப்பிற் றிரிந்து மறிந்துவீழ் தாடி' [கலித் - ௱௫]
'துணைமல ரெழினீலத் தேர்ந்தெழின் மலருண்கண்' [கலித் - ௱௪]
'முத்தேர் முறுவலாய்' [கலித் - ௯௩]
'எச்சிற் கிமையாது பார்த்திருக்கு மச்சீர்' [நாலடி - ௩௬௫]
'யாழ்கெழு மணிமிடற் றந்தணன்' [அகம் - கடவுள்வாழ்த்து]
'இளைசெத்து மொய்த்த தும்பி' [நற் - ௩௫]

எனவரும். பிறவுமன்ன. (௰௪)

உ௯அ. அன்ன வாங்கு மான விறப்ப
என்ன வுறழத் தகைய நோக்கொடு
கண்ணிய வெட்டும் வினைப்பா லுவமம்.

என்-னின், மேற்சொல்லப்பட்ட வற்றுள் சிறப்புவிதியுடையன உணர்த்துவான் எடுத்துக்கொண்டார்: அவற்றுள் வினையுவமத்திற்குரிய சொல் வரையறை யுணர்த்துதல் நுதலிற்று.

அன்னமுதலாகச்

சொல்லப்பட்ட எட்டும் வினையுவமத்திற்

குரிய சொல்லாம்

என்றவாறு.

'கொன்றன்ன வின்னா செயினும்' [குறள் - ௱க]

'பலர்புகழ் ஞாயிறு கடற்கண்

டாங்கு' [திருமுருகாற் - உ]

'புலவுநுனைப் பகழியுஞ் சிலையு

மானச்

செவ்வரிக் கயலொடு

பச்சிறாப்பிறழும்' [பெரும்பாணர்-உ௬க

'புலியிறப்ப வொலித்தாற்றலின்'
'[புலி] யென்னக் கலிசிறந் துரா[அ]ய்'

'செறுநர்த்
தேய்த்த செல்லுறழ் தடக்கை'
[திருமுருகாற் - ுட]

'பொருகளிற்றெருத்தின் புலிதகையப்
பாய்ந்து'
'மா[?]ஞக்கு
நோக்கு மடநடை யாயத்தார்'
எனவரும்.
(யஉ)

அன்னவென்

கிளவி பிறவொடுஞ் சிவணும். ||

என்-னின், எய்தாதது

எய்துவித்தல் நுதலிற்று.

மேற்சொல்லப்பட்டவற்றோடு

அன்ன என்னுஞ் சொல்

ஒழிந்த பொருளொடுஞ் செல் லும்

என்றவாறு.

'மாரி யன்ன வண்கை

[புறம் - ௱௩௩] [இது] பயம்

'பரியரைக் கமுகின் பாளை யம் பசும்பூண் [illegible]

கருவிருந் தன்ன கண்கூடு செறிதுளை' [பெரும்பாணாற் - ௭ - ௮]

[இது] மெய்.

'செவ்வா னன்ன மேனி'

[அகம் - கடவுள் வாழ்த்து]

‘பாலன்ன பென்மொழி’

[இவை]

உரு பிறவுமன்ன.
(யரு)

உதாஅறி. எள்ள விழையப் புல்லப் பொருவங்
கள்ள மதிப்ப வெல்ல விழ
வென்றுங் கெட்டே பயனிலை யுவமம்.

என்-னின், பயனிலையுவமைக்குரியசொல் வரையறுத்துணர்த்துதல் நுதலிற்று.

எள்ள என்பது
முதலாகச் சொல்லப்பட்ட
எட்டும் பயனிலையுவமைக்குச் சொல்

லாம் என்றவாறு.

'[1]எழிலி வான மென்னி[ன]ன் றருஉங்
கவிகை [வ]ண்கைக் கடுமான் றோன்றல்,'
'மழைவிளை தடக்கை [2]வாய்வா ளெவ்வி'
'புத்தே ளுலகிற் பொன்மரம் புல்ல'
['விண்பொருபுகழ் விறல்வஞ்சி'] [புறம் - 11]

(பிரதி)—1. எழில. 2. வாய்வாள் வெவ்வி.

காஅஅ

தொல்காப்பியம் - இளம்பூரணம்

'கார்கள்ள [1]வுற்ற பேரிசை யுதவி'
'இருநிதி மதிக்கும் பெருவள் ளீகை'
'வீங்குசு[ரை]ர நல்லான் வென்ற வீகை'

'விரிபுனற் பேர்யாறு வீழ யா[வ]தும்
வரையாது [2]சுரக்கு [முரைசா றோன்றல்]'

என வரும். (யஅ)

உரஅசு. கடப்ப வேய்ப்ப மருளப் புரைய
வொட்ட வொடுங்க வோட்ட நிகர்ப்பவென்
றப்பா லெட்டே மெய்ப்பா லுவமம்.

என்-னின், மெய்யுவமத்திற் குரியசொல் உணர்த்துதல் நுதலிற்று.

கடுப்ப என்பது முதலாகச் சொல்லப்பட்ட எட்டும் மெய்யுவமத்திற்குரிய சொல் லாம் என்றவாறு.

'விண்ணதி ரிமிழிசை கடுப்ப' [மலைபடு - உ]
'அகலிரு விசும்பிற் குறைவி லேய்ப்ப'
'வேய்மருள் பணைத்தோ ளணிஇழ'
[அகம் - க]
'வேய்புரை மென்றோள்' [கலித் - ௩க]
'முத்துடை வான்கோ டொட்டிய
முலைமிசை வியப்பன தழீஇ'
'பாம்புரு வொடுங்க வாங்கிய நுசுப்பின்'
'செந்தீ யோட்டிய வஞ்சுடர்ப் பருதி'
'கண்ணொடு நிகர்க்குங் கழிப்பூங் குவளை'

என வரும். (மகூ)

உஎஅஎ. போல மறுப்ப வொப்பக் காய்த்த
நேர வியப்ப நளிய நந்தவென்
றொத்துவரு கிளவி யுருவி னுவமம்.

என்-னின், உருவத்திற் குரிய சொல் உணர்த்துதல்நுதலிற்று.

போல என்பது முதலாகச்

லாம் என்றவாறு.

சொல்லப்பட்ட எட்டும்

உருவுவமத்திற் குரியசொல்

'தன்சொலுணர்ந்தோர் மேனி

பொன்போற் செய்யு மூர்கிழ வோனே' [ஐங்குறு - சக]
'மணிநிற மறுத்த மலர்ப்பூங் காயா'
'ஒண்செங் காந்த ளொக்கு நின்னிறம்'
'கணைக்கா லாம்பல் காய்த்திய கண்ணியம்'

'கார்விரிகொன்றைப் பொன்னேர்புதுமலர்' [அகம்-கடவுள் வாழ்த்து]
'தண்டளிர் வியப்பத் தகைபெறு மேனி'

[எனவரும்.] நளிய நந்த என்பன வந்தவழிக் கண்டுகொள்க. (மகூ)

உஎஅஅ. தத்த மரபிற் றோன்றுமன் பொருளே.

(பிரதி)—1. வுழற. 2. காக்கு.

என்-னின், மேலனவற்றிற்
கோர் புறனடை உணர்த்துதல்
நுதலிற்று.

1மேற்பாகுபடுத்துணர்த்தப்பட்ட
சொற்கள் கூறியவாற்றானன்றித்
தத்தமரபில் தோன்றும் பொருளும் உ
ளவாமென்றவாறு.

[மன்] ஆக்கக்குறித்துவந்தது. ஈண்டுமரபென்றது பயிற்சியை. இதனுனே நூல் செய்கின்றகாலத்து விளைமுதலாகிய பொருள்கள் ஓதிய வாய்பாட்டான் வருதல் பெரு
வழக்கிற்றென்று கொள்ளப்படும்.

'முழவுறழ்
தடக்கையி னியல வேந்தி'

[திருமுருகாற் - உா - ரு]

'மாவென்ற மடநோக்கின்' [கலித் - ருஎ]

'வேய்வென்ற தோள்' [கலித் - ாங அ]

'மாரிவீ ழிருங்கூர்தல்' [கலித் - யச]

'பொன்னுரை கடுக்குந் திதலையர்' [திருமுருகாற் - ாசரு]

'குறுந்தொடி யேய்க்கு மெலிந்துவீங்கு திவவின்' [பெரும்பாண் - யரு]

'செயலையந் தளிரேய்க்கு மெழினலம்' [கலித் - யரு]

2'பாஅன்மருண் மருப்பி னுரல்புரை பாவடி' [கலித் - உக] 'வலம்புரி புரையும் வானரை முடியினர்' [திருமுருகாற் - ாஉஎ]

'ஒளித்தியங்கு மரபின் வயப்புலி போல' [அகம் - உஉ]

'தாமரைபோல் வாண்முகம்' [திணைமாலை - க]

'காரவர்போ னேக்கினு நோக்கும்'

# ஒழுகு நோன்பக டொப்பக்

# குழீஇ' [அகம் - ௩.॥]

(௰எ)

என வரும். பிறவுமன்ன.

உா அசு. நாலிரண் டாகும் பா லுமா ருண்டே.

என்-னின், எய்தியதன்மேற் சிறப்புவிதி வகுத்தல் நுதலிற்று.

மேற்சொல்லப்பட்ட உவமை நான்குவகை யாதலேயன்றி எட்டாம் பக்கமும்

உண்டு என்றவாறு.

அவையாவன வினையும் வினைக்குறிப்பு மென இருவகையாம். பயன் என்பது நன்மைபயத்தலும் தீமைபயத்தலும் என இருவகையாம். மெய்யென்பது—வடிவும் அளவும் என இருவகையாம். உருவென்பது நிறமுங்குணமுமென விருவகையாம். இவ்வகை

யினுலெட்டாயின.

'பொன்னன்ன செல்வத்தன்'—[இது] வினைக்குறிப்பு.
'ஞாயி றனையைநின் பகைவர்க்கு' [புறம்-௫௬]—இது தீப்பயன்.
'நெடுவரை மிசையிற் பாம்பென விழிதருக்
கடுவரற் கலுழி'—என்பது அளவு.
'பாலன்ன மொழி'—[இது] குணம்

(௰அ)

எனைய மேற் காட்டப்பட்டன.

உா கூ௰. பெருமையுஞ் சிறுமையு மெய்ப்பா டெட்டன்
வழிமருங் கறியத் தோன்று மென்ப.

---

(பிரதி)—1. மெய். 2. பாலன் மருண் மருப். புரல்புரை.

௩.॥ கூ௰

தொல்காப்பியம் - இளம்பூரணம

என்-னின், இதுவுமோர் மரபுணர்த்துதல்றுதலிற்று.

பெருக்கவுஞ் சிறக்கவுங் கூறுதல் மெய்ப்பாட்டின் வழிப்பக்கம் புலப்படத் தோன்றும் என்றவாறு.

எனவே மெய்ப்பாடு தோற்றுதல்வழி இப்புணர்ப்பிறுற் பயனின்றும்.

"அவாப்போ லகன்றதன் அல்குன்மேற் சான்றோ
ருசாஅப்போல வுண்டே மருங்குல்."

என்பது பெருமையுஞ்

சிறுமையும்பற்றி உவமை நிகழ்ந்தது.

"கலங்கவிழ்த்த நாய்கன்போற் களைதுணைப் பிறிதின்றி"
[யா - வி - ப - ௩௭அ]

என்பது துன்பப்பெருக்கம் சொல்லி

யவலம் வந்தது.

"பெருஞ்செல்வ ரில்லத்து நல்கூர்ந்தார் போல
வருஞ்செல்லும் பேருமென் னெஞ்சு." [முத்தொள் - அஅ]

இது பெருக்கம்பற்றி இளிவரல் வந்தது.

பிறவுமன்ன.

உ௱சுஞ.

உவமப் பொருளி னுற்ற றுணருந்
தெளிமருங் குளவே திறத்திய லான.

என்-னின், இதுவும் உவமைக்குரிய வேறுபாடுணர்த்துதல் நுதலிற்று.

உவமப்பொருளாலே சொல்லுவான் குறிக்கப்பட்ட பக்கமும் உள கூறுபாட்டியலான் என்றவாறு.

பொருளை யுணருந் தெளியும்

தெளிமருங்காவது துணிவுபக்கம். எனவே துணியாமை உவமத்தின்கண்ணே வந்தது. அவ்வாறு வரினும் இதுவேயெனத் துணிதலின் றுணிபக்கமாவது.

ஃ "ஐதேய்ந்தன்று
பிறைநுமன்று
[1]மைதீர்ந்தன்று
மதியுமன்று
வேயமன்றன்று மலையுமன்று
[2]பூவமன்றன்று சுனையுமன்று
மல்லலவியலு மயிலுமன்று,
சொல்லத்தளருங்
கிளியுமன்று" [கலித் - ருரு]

என்றவழித் துணியாது நின்றன நுதலும் முகனும் மொழியு மெனத் துணிந்தவாறு கண்டுகொள்க.

தோளுங் கண்ணும் சாயலு

இன்னும் இரவனே,

''கயலெழுதி வில்லெழுதிக் காரெழுதிக் காமன்
செயலெழுதித் தீர்ந்தமுகந் திங்களோ காணீர்'' [சிலப்-கானல்.௫
என்றவழிக் கண்புருவக் கூந்தலை [யுவம]ப் பெயரான்வழங்குதலுங் கொள்க.(௰)

உாசஉ. உவமப் பொருளை யுணருங் காலை
மருவிய மரபின் வழக்கொடு வருமே.

---

(பிரதி—)1. மெய்நீர்க். 2. வருவான்றன்று.

# பொருளதிகாரம் - உவமையியல்



என்-னின், மேலதற்கோர் புறனடையுணர்த்துதல் நுதலிற்று.

உவமப்பொருளை உவமிக்கப்படும் வழக்கொடுவரும் என்றவாறு.

பொருளாக உணருங்காலை மருவிய மரபினானே

எனவே மருவாதன அவ்வாறு

கயல்சிலை என்றாற்போலக் கூ

* "விலங்கொடு மக்க ளனைய

இலங்குநூற்

கற்றாரோ டேனை யவர்." [குறள் - ௪௱௰]

ஏற்கு உதாரணம்

இதனை வேறுபாடு அறிக.

(௨ ௨)

௨௱௯௪. பிறிதொடு படாது பிறப்பொடு நோக்கி
முன்ன மரபிற் கூறுங் காலைத்
துணிவொடு வரூஉந் துணிவினோர் கொளினே.

என்-னின், இதுவும் ஒருவமை வேறுபாடு உணர்த்துதல் நுதலிற்று.

பிறிதென்பது—உவமைப்பொருள் தானன்மையான் உவமைப்பொருளொடுபடாது பொருள்தோற்றிய விடத்தொடு நோக்கி முன்னமரபிற்றுச் சொல்லுங்காலத்துத் துணிவுடையோர் கொளின் அவர் துணிந்த துணிவின்கண்ணே வரும் உவமை என்றவாறு.

முன்னமாவது

"இவ்விடத் திம்மொழி யிவரிவர்க் குரியவென்
றவ்விடத் தவரவர்க் குரைப்பது முன்னம்"

[தொல். செய்யு-௧௯௯]

என்பதாகலின் இடத்தொடுபார்த்து
எற்கும் பொருட்கட் கூறுவது.

மேலைச்சூத்திரத்தளவும் பிறிதுபொருளோடு உவமைகூறிப் போந்தார். இனிப் பொருள் தன்னோடேயுவமை கூறுகின்றார் என்று கொள்க.

"நிலவுக்காண் பதுபோல அணிமதி
யேர்தர" [கலித் - ௱௰௯]

என்றவழிக் காணப் பிறிதாகிய பொருளொடு உவமை கூறுமையிற் பிறிதொடுபடாதா யிற்று. மதியினது எழுச்சியை நோக்குதலிற் பிறப்பொடுநோக்கிற்று. அவ்விடத்திற் கேட்பக் கூறுதலின் முன்னமாயிற்று. அம் மதியினது தோற்றம் இத்தன்மைத்தெனத் துணிதலின் அதன்கண் உவமைச்சொல் வந்தது.

"வள்ளிதழ் கூம்பிய மணிமரு ளிருங்கழிப்
பள்ளிபுக் கதுபோலும் பரப்புநீர்த் தண்சேர்ப்ப" [கலித் - ௱௨௰]

என்பதும் அது. (௨௩)

ந ॥ சூ௨

தொல்காப்பியம் - இளம்பூரணம்

** உவமப் போலி யைந்தென மொழிப. ||

என்-னின், இதுவுமோர் உவமைவிகற்பம் கூறுதல் நுதலிற்று.

உவமைப் போலியாகி வருவன ஐந்தென்று சொல்லுவர் என்றவாறு.

அவையாவன இதற்குவமையில்லை எனவும், இதற்கிதுதானே யுவமை எனவும், பலபொருளினு முளதாகிய வுறுப்புக்களைத் தெரிந்தெடுத்துக்கொண்டு சேர்த்தின் இதற்குவமையாம் எனவும், பலபொருளினு முளவாகிய கவின் ஒருங்கு திரட்டினும் இதற்குவமையாம் எனவும், கூடாப்பொருளோடு உவமித்து வருவன எனவும்.

உதாரணம்:—

"நின்னோ ரன்னோர் பிறரிவ ணின்மையின்
மின்னெயின் முகவைக்கு வந்திசிற் பெரும." [புறம் - ௩௭௩]

என்றும்,

"மன்னுயிர் முதல்வனை யாதலி
னின்னோ ரனையைநின் புகழொடு பொலிந்தே." [பரிபா - ௧]

என்றும்,

"நல்லார்க ணல்ல வுறுப்பாயின தாங்க [ணுங்க]
வெல்லா முடனாதுமென் றன்ன வியந்த வீட்டாற்
சொல்வாய் முகக்கண் முலைதோளிடை யல்குல் கைகால்
பல்வார் குழலென் றிவற்றாற்படிச் சந்த மானுள்"

என்றும்,

"நாள்கோ டிங்கண் ஞாயிறு கனையழல்
ஐந்தொருங்கு புணர்ந்த விளக்கத் தனைய" [பதிற்றுப் - ௧௪]

என்றும்,

வாரா தமைவானோ வாரா தமைவானோ
வாரா தமைகுவ னல்லன் மலைநாட

னீரத்து ஈன்னவை தோன்றி னிழற்கயத்து
நீருட் குவளை வெந்தற்று.[கலித் - சக]
என்றும் வரும்.

(உச)

உாஎசு. தவலருஞ் சிறப்பினத் தன்மை நாடின்
வினையினும் பயத்தினு முறுப்பினு முருவினும்
பிறப்பினும் வரூஉந் திறத்த வென்ப.

என்-னின், மேலதற் கோர் புறனடை.

மேற்சொல்லப்பட்ட ஐந்தும்
உரைத்த வாய்பாட்டாற் கூறும்வழிச்

சொல்லப்பட்ட ஐந்தினும் ஏதுவாகச் சொல்லிப் பின்னர்க் கூறவேண்டும் என்றவாறு.

நினக்குவமையில்லை என்னும் வழிச் செயலானுதல், பயனானுதல், உறுப்பானுதல். உருவானுதல், பிறப்பானுதல் ஒப்பாரில்லையெனல் வேண்டும் என்பது கருத்து. பிறவு மன்ன.

உரு)

௨௱௬௨. கிழவி சொல்லி னவளறி கிளவி.

என்-னின், மேற்சொல்லப்பட்ட உவமைகூறுவார் பலருள்ளுந் தலைமகட்குரிய தோர் பொருள் வரையறுத்துணர்த்துதல் நுதலிற்று.

பொருளதிகாரம்.

உவமையியல்

௩௱௫௩.

உவமைப்பொருளைத்
கூறப்பெறும் என்றவாறு.

தலைமகள்கூறில்

அவளறிந்த, பொருட்கண்ணே உவமை
எனவே தானறியாத
என்றவாறு.

பொருட்கண் கூறினளாகச் செய்யுட்

செய்தல் பெறாது

உதாரணம் தலைமகள்கூற்றுட் கண்டுகொள்க. (௨௪)

௨௱௯௮. தோழிக் காயி னிலம்பெயர்த் துரையாது.

என்-னின், இது தோழி யுவமை கூறுமாறு உணர்த்துதல் நுதலிற்று.

தோழி உவமைசொல்லின் அந்நிலத்தினுள்ளனவன்றிப் பிறநிலத்துள்ளன கூறப் பெறும் என்றவாறு.

உரையாது உவமம் என ஒருசொல் வருவிக்க. உதாரணம் தோழிகூற்றுட் காண்க. (உஎ)

உ௱கூ௬. கிழவோற் காயி னுரனொடு கிளக்கும். ||

என்-னின், இது தலைமகன் உவமை கூறுமாறு உணர்த்துதல் நுதலிற்று.

தலைவன் உவமை கூறுவானாயின் அறிவொடு கிளக்கப்படும் என்றவாறு.

அன்றியும் உரனொடு கிளக்கு முவமையெனப் பெயரெச்சமாக்கிப் பெயர்வருவித் தலுமாம். உதாரணம் தலைவன்கூற்றுட் காணப்படும். (உஅ)

௩௱. ஏனோர்க் கெல்லா மிடம்வரை வின்றே. ||

என்-னின், மேற்சொல்லப்பட்ட மூவருமல்லாதனோர்க்கு உவமைகூறு மிடம் வரையறுக்கப்படா தென்றவாறு.

நற்றாய் செவிலி முதலாயி

(உகூ)

௩௱க. இனிதுறு கிளவியுந் துனியுறு கிளவியு
முவம மருங்கிற் றோன்று மென்ப. || ஜூ17.

என்-னின், இது தலைவற்குத் தலைவிக்குந் தோழிக்கு முரியதோர் மரபு உணர்த்துதல் நுதலிற்று.

மகிழ்ச்சி பயக்குங் கூற்றும் புலவிபயக்குங் கூற்றும் உவமப்பக்கத்தால் தோன்றும் என்றவாறு.

"மாரி யாம்ப லன்ன கொக்கின்

1பார்வ லஞ்சிய பருவரல் 2ஈர்ஞெண்டு

[கண்]ட[ல்]

3வேரளைச் செலீ[இ]ய ரண்டர்

கயிறிரி யெருத்திற் கத[ழ்]பூந் துறைவ.”

[குறு- ௱௰௭]

என்றது தலைமகள் உவமை

கூறியவழி நின்ற பெண்டிர் தடுப்பக்

கயிறிரி யெருது

போலப் போர்தனை யெனத் துனியுறு

கிளவி வந்தது.

“ ... ... வானத்

தணங்கருங் கடவு ளன்னோணின்

மகன்றா யாதல் புரைவதா லெனவே.” [அகம் - ௰௬]

என மகிழ்ச்சிபற்றி வந்தது. பிறவும் அன்ன. (௩.௰)

௩௭௨. கிழவோட் குவமை யீரிடத் துரித்தே. || ௧௬

(பிரதி)—1. மார்ம. 2. வீர்ஞெ. 3. லேரளச்.
45

௩௭௩

# தொல்காப்பியம் - இளம்பூரணம்

என்-னின், தலைமகன் உவமை கூறுமிடன் உணர்த்துதல் நுதலிற்று.
தலைமகன் உவமை கூறக்கால் மேற்சொல்லப்பட்ட இரண்டிடத்தும் உரித்து என்றவாறு.

எனவே இரண்டும் அல்வழி உவமை கூறப்பெறுள் என்றவாறும்.

௩௭௩. கிழவோற் காயி னிடம்வரை வின்றே. ||

என்-னின், தலைமகற்குரிய தோர் மரபு உணர்த்துதல் நுதலிற்று.
தலைமகன் உவமை கூறுதல் எப்பொருட்கண் ணுமாம் என்றவாறு.

(௩௧)

(௩௨)

௩௱௪. தோழியுஞ் செவிலியும் பொருந்துவழி நோக்கிக்
கூறுதற் குரியர் கொள்வழி யான.

என்-னின், தோழியுஞ் செவிலியும் உவமைகூறுங்காற் பொருந்து மிடம்பார்த்துக் கூறுதற்குரி[யர்] கேட்டோர் கொள்ளுநெறியான் என்றவாறு.

"பருதியஞ் செல்வன் விரிகதிர்த் தானைக்
கிருள்வளை வுண்ட மருள்படு பூம்பொழில்."

என வரும். பிறவுமன்ன மேற்காட்டினவற்றுள் கண்டுகொள்க.

(௩௫)

௩௱௫. வேறுபட வந்த வுவமைத் தோற்றங்
கூறிய மருங்கிற் கொள்வழிக் கொளாஅல்.

என்-னின், மேலனவற்றிற் கெல்லாம் புறனடை யுணர்த்துதல் நுதலிற்று.

ஈண்டு எடுத்தோதப்பட்ட
இலக்கணத்தின் வேறுபட்டுவந்த
உவமைத்தோற்றம்

எடுத்தோதிய நெறியிற்
கொள்ளும்வழிக் கொளுவுக என்றவாறு.

"பருதியஞ் செல்வன் விரிகதிர்த்
தானைக் —
இருள்வளை வுண்ட மருள்படு
பூம்பொழில்"
என வரும். பிறவுமன்ன.

(௫௪)

௫௱௬. ௩ ஒரீஇக் கூறலு மரீஇய பண்பே. ||

என்-னின், இதுவு முவமைக் குரியதோர் மரபு உணர்த்துதல் நுதலிற்று.
உவமையை உவமிக்கப்படும் பொருளின் நீக்கிக் கூறலும் மருவிய இயல்பு என்ற

வாறு.

"[1]கடந்தடு தானைச் சேர லாதனை
யாங்கன மொத்தியோ வீங்குசெலன் மண்டிலம்
பொழுதென வரைதி புறக்கொடுத் திறத்தி
மாறி வருதி மலைமறைந் தொளித்தி
யகலிரு விசும்பி [2]ஞனும்
பகல்விளங் குதியாற் பல்கதிர் விரித்தே." [புறம் - அ]

என வரும்.

---

(பிரதி)—1. கடாததோளைச் சொல்லாத்தானை. 2. னனும்.

பொருளதிகாரம்.

உவமையியல் ௫

"அனிச்சமு மன்னத்தின் றூவியு மாத
ரடிக்கு நெருஞ்சிப் பழம்." [குறள் - ௲௱௨௰]

என்பது மது.

(௫௫)

உவமைத் தன்மையு முரித்தென மொழிப
பயனிலை புரிந்த வழக்கத் தான.

என்-னின், இதுவு மது.

உவமிக்கப்படும் பொருளோடு
உவமைதோன்ற வருதலேயன்றி
யுவமையது தன்மை
கூறலு முவமையாதற் குரித்து:
பயனிலை பொருந்திய வழக்கின்கண்
என்றவாறு.

எனவே இவ்வாறுவருவது
பயனிலை யுவமைக்கண் என்று கொள்க.

"பாரி பாரி யென்றுபல வேத்தி
[1]ஒருவற் புகழ்வர் செந்நாப் புலவர்
பாரி யொருவனு மல்லன்
மாரியு[மு]ண் டீண் டுலகுபுரப் பதுவே. [புறம் - ௱எ]

இது மாரி போலும் பாரியது கொடை என்றது இவ்வாறுகூறும் பொருண்மையும் உவமமாம் என்றவாறு. (௩௧)

நூ௨அ. தடுமாறு வரலுங் கடிவரை வின்றே.

என்-னின், இதுவு முவமைக்குரியதோர் மரபு உணர்த்துதல் நுதலிற்று.

உவமைக்கண் தடுமாறு வருதல் நீக்கப்படாது என்றவாறு.

தடுமாறுத லாவது—ஐயமுறுதல். எனவே ஐயநிலையுவ[ம]முங் கண்டுகொள்க.

"கூற்றமோ கண்ணோ பிணையோ மடவரல் னோக்கமிம் மூன்று முடைத்து." [குறள் -

தசகு]

என்றும்,

"ஈங்கே வருவா

ளிவள்யார்கொ லாங்கேயோர்

வல்லவன் றைஇய பாவைகொ னல்லார்
குறுப்பெலாங் கொண்டியற்றி யாள்கொல் வெறுப்பினால்
வேண்டுருவங் கொண்ட தோர் கூற்றங்கொல்" [கலித் - ௫௬]

என்றும் வரும். பிறவுமன்ன. (௩௭)

௩௱௬௰. அடுக்கிய தோற்றம் விடுத்தல் பண்பே
நிரனிறுத் தமைத்த னிரனிறை சுண்ணம்
வரன்முறை வந்த மூன்றலங் கடையே.

என்-னின், உவமைபல வந்தவழி வருவதோர் வேறுபாடு உணர்த்துதல் நுதலிற்று.

அடுக்கிய தோற்ற மாவது—உவமைபல அடுக்கித் தோற்றுதல்.

நிரனிறுத்தமைத்த லாவது—ஒரு பொருளொடு தோற்ற தொடரையுடைத்தா

கப் பலவுவமை வருதல்.

(பிரதி)—1. ஒருவர்ப்.

கூ ா ரு. சு

# தொல்காப்பியம் - இளம்பூரணம்

நிரனிறை யர்வது—உவமைபலவற்றை யுஞ்

சேரநிறுத்தி யுவமிக்கப்படும் பொரு

ளையுஞ் சேரநிறுத்தல்.

சுண்ணமென்பது—உவமையையும் பொருளையுந் துணித்து ஒட்டுதல்.

வரன்முறை வந்த மூன்றலங் கடையே ]என்பது—அடுக்கியலுவமை கடியப்படும்; ஆமென்று [வ]ரையப்பட்ட நிரனிறுத்தன் முதலிய மூன்றும் அல்லாதவழி என்றவாறு.

அவற்றுள், கடியப்பட்டது உவமைக் குவமையாக அடுக்கிவருவது.

"வெண்டிங்கள் டோன்றுளது வெண்சங்கம் வெண்சங்கின்

வண்டிலகு

தாழை வளர்கோடு"

என்றவழி அவ்வாறு உவமைக்குவமையாகக் கூறியவதனாற் போதுவதோர் பயன் இன்மையின் ஆகாதென்றுகொள்க.

நிரனிறுத்தமைத்தல்

வருமாறு:—

"நிலநீர் [வளி]விசும் பென்ற நான்கி

னளப்பரி யையே" [பதிற்றுப் . ௰௪]

“மதி போலுந் தாமரை போலும்”

என வரும்.

நிரனிறை வருமாறு:—

“கொடிகுவளை கொட்டை நுசுப்புண்கண்
[மதிபவள முத்த முகம்வாய் முறுவல்

மேனி
பிடிபிணை மஞ்ஞை நடைநோக்குச்
சாயல் வடிவினளே வஞ்சி மகள்.”]

[யாப். வி. பக் - ௩௫௧]

என வரும்.

சுண்ணம் ஆவது:—

"*களிறுங் கந்தும் போல நளிகடற்
கூம்புங் கலனுந் தோன்றும்
[தோன்றன் மறந்தோர் துறைகெழு

நாட்டே.]"

[அகத்திணை - ௧௧ - ௩௭.]

என்றவழி நிரனிறையன்றிக்

'களிறுபோலுங் [1] கலன்' எனத்

துணிக்க வேண்டிய

வாறு கண்டுகொள்க.

(௩௮)

## ஏழாவது - உவமவியல் முற்றும்.

---

(பிரதி)—1. கூம்பு. * இச்செய்யுளை மயக்கநிரனிறைக்கு உதாரணமாக இவ்வுரையாசிரியரே காட்டினர் (தொல். சொல். 399, இளம்.).

## எட்டாவது - செய்யுளியல்.

௩௱௰. மாத்திரை யெழுத்திய லசைவகை யெனாஅ
யாத்த சீரே யடியாப் பெனாஅ
மரபே தூக்கே தொடைவகை யெனாஅ
நோக்கே பாவே யளவிய லெனாஅ
திணையே கைகோள் பொருள்வகை யெனாஅ
கேட்போர் களனே காலவகை யெனாஅ
பயனே மெய்ப்பா டெச்சவகை யெனாஅ
முன்னம் பொருளே துறைவகை

பெறு அ

மாட்டே வண்ணமோ டியாப்பியல்

வ!கையி

ஞறு தலையிட்ட வைந்காலைந்து

உ௬ •

மம்மை யழகு

தொன்மை தோலே

விருந்தே யியைபே புலனே

யிழைபெனப்

பொருந்தக்

கூறிய வெட்டொடுந் தொகைஇ

நல்லிசைப் புலவர் செய்பு

ளூறுப்பென

வல்லிதிற் கூறி

: 34.

என்பது சூத்திரம்.

இவ்வோத்து என்ன பெயர்த்தோ வெனின்,

செய்யுளியலென்னும் பெயர்த்து:

செய்யுளிலக்கண முணர்த்தினமையாற் பெற்றபெயர். மேலுணர்த்தப்பட்ட பொருண்மை யெல்லாவற்றிற்கும் இஃதிடமாதலின் அவற்றின்பிற் கூறப்பட்டது.

இதன் றலைச்சூத்திர மென்னுதலிற்றோ வெனின்,

செய்யுளுறுப்பெல்லாந் தொகுத்துணர்த்துதல்.நுதலிற்று.

மாத்திரைமுதலாகச் சொல்லப்பட்ட முப்பத்துநான்குஞ்

செய்யுட்கு உறுப்பென்ற

வாறு.

பிற்கூறிய வெட்டு மேற்கூறிய விருபத்தாறினோடும் ஒருங்கெண்ணவன்மையின், வேறுதொகை கொடுக்கப்பட்டது. அவையாமாறு தத்தஞ் சூத்திரத்துட் காட்டுதும். (௧)

௩௱௰௧. அவற்றுள்,

மாத்திரை வகையு

மெழுத்தியல் வகையு

மேற்கிளந் தனவே

யென்மனார் புலவர்.

என்-னின், மேற்சொல்லப்பட்ட வற்றுள் மாத்திரைவகையு மெழுத்தியல் வகையு மேல் எழுத்ததிகாரத்துச் சொல்லப்பட்டன வென்று சொல்லுவர் புலவரென்றவாறு.

ஈண்டு வேறுபாடில்லை யென்றவாறு. அவையாவன குற்றெழுத் தொருமாத்திரை; நெட்டெழுத்து இரண்டு மாத்திரை; உயிரளபெடை மூன்றுமாத்திரை; குற்றிய லிகரமுங்

குற்றியலுகரமும் ஆய்தமு மெய்யும் ஓரோவொன்று அரைமாத்திரை; ஒற்றளபெடை ஒரு மாத்திரை; ஐகாரக்[குறுக்]க மொருமாத்திரை; மகரக்குறுக்கம் கான்மாத்திரை; ஏறிய வுயிரி னளவே உயிர்மெய்க்களவு.

எழுத்தியலாவது—உயிரெழுத்து, மெய்யெழுத்து, சார்பெழுத்தென மூவகைப் படும். உயிரெழுத்து குற்றெழுத்து, நெட்டெழுத்து, அளபெடையென மூவகைப்படும். மெய்யெழுத்து வல்லினம், மெல்லினம், இடையின மென மூவகைப்படும். சார்பெழுத்து குற்றியலிகரம், குற்றியலுகரம், ஆய்தமென மூவகைப்படும். மெய்யினுட் சிலவும் ஆய்தமும் அளபெடுக்கப்பெறும்.

குற்றெழுத்து அ, இ, உ, எ, ஒ. நெட்டெழுத்து ஆ, ஈ, ஊ, ஏ, ஐ, ஓ, ஔ. அளபெடை ஆஅ, ஈஇ, ஊஉ, ஏஎ, ஐஇ, ஓஒ, ஔஉ. வல்லினம் க ச ட த ப ற. மெல்லினம் ங ஞ ண ந ம ன. இடையினம் ய ர ல வ ழ ள. குற்றியலுகர மாவது நெட்டெழுத்தின் பின்னரு மூன்றெழுத்து முன்னான மொழியினும் வல்லெழுத்தை யூர்ந்து வந்த உகரம். நாகு நாக்கு: காசு-காச்சு: காடு-காட்டு: காது-காத்து: காபு-காப்பு: காறு-காற்று: என இக்

நிகரனை. குற்றியலிகரமாவது ?இவ்வு

கரந்திரிந்து மகர

மூர்ந்து யகரமோடியைந்து வரும்.

காகியாது உ கரந்திரிந்தது; கேண்மியா

மகரமூர்ந்தது. பிரவு மன்ன.

ஆய்தமாவது குற் றெழுத்திற்கும்

வல்லெழுத்திற்கு மிடைவரும்:

அஃதாவது எஃகு எனவரும். ஒற்றள

பெடையாவதுமெல்லினமும் வ ய ல ள

வும் ஆய்தமும் அளபெடுக்கும். அவை

மங்கலம், மஞ்சு எனவரும்.

இனி உயிருமெய்யுங் கூடி உயிர்மெய்யெழுத்தாம். அவை ககரமுதல் னகரவீறாகிய இருநூற்றொருபத்தாறும். இன்னும் ஐகாரக்குறுக்கமும் மகரக்குறுக்கமு மென்பவுமுள.

ஐகாரக்குறுக்கம் அளபெடையுந் தனியு மல்லாதவழிக் குறுகும். மகரக்குறுக்கம் ணகர, னகர மொற்றின் பின்வரும். புணர்மொழிக்கண் வகரத்தின் மேனின்ற மகரங் குறுகும்.

இவையெல்லாம் எழுத்ததிகாரத்துட் காண்க.

(உ)

சூ. ௩௰௨. குறிலே நெடிலே குறிலிணை குறினெடி
லொற்றொடு வருதலொடு மெய்ப்பட நாடி,
நேரு நிரையு மென்றிசிற் பெயரே.

என்பது நிறுத்தமுறையானே

அசையாமாறு உணர்த்துதல்

நுதலிற்று.

குறிலும் நெடிலுங் குறிலிணையுங் குறினெடிலுந் தனியேவரினும் ஒற்றொடுவரினும், ஆராயுங்காலத்து நேரசையு நிரையசையுமா மென்றவாறு.

இதுவு மொரு நிரனிறை: முன்னுற்ற நான்கு மொருபொருளாய்ப்,பின்னிரண்டாகி வரினும்,முற்பட்டவையு மிரண்டாகப் பகுத்தலான். கோழிவேந்தன், என நான்குநேரசையும். வெறிசுறுநிறம் குரால் என நான்குநிரையசையும். (ந)

௩௱௰௩. இருவகை யுகரமோ டியைந்தவை வரினே
நேர்பு நிரைபு மாகு மென்ப
குறிலிணை யுகர மல்வழி யான.

இதுவு மது.

மேற்சொல்லப்பட்ட விரண்டசையுங் குற்றியலுகரமு,மல்லாத முற்றியலுகரமும் பொருந்திவரின், நேர்பசையும் நிரைபசையு மெனப் பெயராகும்: அவ்வழிக் குற்றெழுத்தொடு பொருந்தின வுகர மல்லாத விடத்தென்றவாறு.

# பொருளதிகாரம் - செய்யுளியல்

௩௱௫௬

வகு,

காது, காற்று, கன்று: காவு, சார்வு, கல்லு: என்பன நேர்பசை. வரகு, அரக்கு, மலாடு, பனாட்டு, கதவு, புணர்வு, உருமு, விறவு: என்பன நிரைபசை. தொகுத்து நோக்கு[ழி]

நேர், நிரை, நேர்பு, நிரைபு: என்பன தாமே யுதாரணமாம். அஃதேல் நேர்பசை நிரைபசை யெனக் காக்கைபாடினியார் முதலாகிய ஒருசாராசிரியர் கொண்டிலரா லெனின், அவர் அதனை யிரண்டசையாக்கி யுரைத்தாராயினும் அதனை முடிய நிறுத்தாராது, வெண்பா வீற்றின்கண் வந்த குற்றுகரநேரீற்றியற்சீரைத் தேமா புளிமா என்று முதாரணத்தான் ஓசையூட்டிச் செப்பலோசை குன்றுமென்றஞ்சி, காசு பிறப்பென உகரவீற்று முதாரணங்காட்டினமையானும், சீருந்தளையுங் கெடுவழிக் குற்றியலுகரம் அலகுபெறுதென்றமையானும், வெண்பா வீற்றினு முற்றுகரமுஞ் சிறுபான்மை வருமென வுடன்பட்டமையானும், நேர்பசை நிரைபசை யென்று வருதல் வலியுடைத்தென்று கொள்க. அவை செய்யுளீற்றின்

கண் வருமாறு:

'பிறவிப் பெருங்[கட னீந்துவர் நீந்தார்
இறைவனடி சேரா] தார்' [குறள் - ம]
'வேண்டுதல் வேண்[டாமை யில்லா னடிசேர்ந்தார்க்
கியாண்டு
மிடும்]பை யில' [குறள் - ச]
'இருள்சே ரிரு[வினையுஞ் சேரா விறைவன்
பொருள்சேர் புகழ்புரிந்தார்] மாட்டு' [குறள் - ரு]
'தனக்குவமை [யில்லாதான் றாள்சேர்ந்தார்க் கல்லான்
மனக்கவலை மாற்]ற லரிது' [குறள் - எ]

எனவரும். பிறவு மன்ன.

அலகிடுங்கால் நேரசை ஓரலகு; நிரையசை யிரண்டலகு; நேர்பசை மூன்றலகு; நிரைபசை நான்கலகு பெறும். (ச)

நூற்பா. இயலசை முதலிரண் டேனவை யுரியசை.

என்-னின், மேற்சொல்லப்பட்ட அசைக்குப் பிறிதோர் குறியிடுதல் நுதலிற்று.

முற்பட்ட நேரசையும் நிரையசையும் இயலசையெனக் குறிபெறும். நேர்பசையும் நிரைபசையும் உரியசையெனக் குறிபெறு மென்றவாறு. (௪)

நூ௩௨௫. தனிக்குறின் முதலசை மொழிசிதைத் தாகாது.

என்-னின், இதுவும் அசைக்குரியதோர் மரபுணர்த்துதல் நுதலிற்று.

தொடர்மொழிக்கண் மொழி சிதைந்து தனிக்குறில் நேரசை யாகா தென்றவாறு.

மொழிசிதைத்தலாவது—ஒற்றுமைப் பட்டிருக்கின்றதனைப் பிரித்தல். அஃதாவது புளிமா என்றவழி நிரைநேராக அலகிடாது முதனின்றதனை நேரசையாக்கி யிடைநின்றதுஉ மிறுதிநின்றதுஉம் நிரையசையாதல். அவ்வழிப் புளி யென்னுஞ் சொல்லைப் பிரிக்கவேண்டுதலின் நிரையசையாகவே கோடல்வேண்டு மென்றவாறு. இனி, மொழி சிதையாக்கால் நேரசையாம். அது விட்டிசைத்து நிற்றல். "அஉ மறியா...ஞட்டை" [யாப். வி. பக் - ௱௬௨] எனவும், "அஆ இழந்தானென் றெண்ணப் படும்" [நாலடி - ௯] வருவன முதலெழுத்[து] நேரசையாம். (௫)

நூ௩௨௬. ஒற்றெழுத் தியற்றே குற்றிய லிகரம்;

என்-னின், இதுவுமது. குற்றியலிகரம் ஒற்றெழுத்து இயல்பிற்று என்றவாறு.

[அடி]யினிடைக்கண் ஒற்றுமைப்பட்ட சொல்லின்கண் நேரசை என்று [......] எனவே அலகுபெறுதென்றவாறும்.

“பேதை யென்ப தியாதென வினவி
னேதிய விவற்றை யுணராது மயங்கி
யியற்படு பொருளாற் கண்டது மறந்து
முயற்சோ வுண்டெனக் கண்டது தெளிதல்.” (எ)

இதன்கட் குற்றியலுகரம் அலகு பெறுதவாறு காண்க.

௩௱௰௭. முற்றிய லுகரமு மொழிசிதைத்துக் கொளா[அ]
நிற்ற லின்றே யீற்றடி மருங்கினும்.

எ-னின், முற்றியலுகரத்திற் குரிய வேறுபா டுணர்த்துதல் நுதலிற்று.

முற்றியலுகரமு மொழிசிதைந்து நேர்பசை நிரைபசை யென்றுரைக்கப்படாது; அஃது ஈற்றடி மருங்கிற் றனியசையாகி நிற்றலு மின்றென்றவாறு.

எனவே அடியின திடைக்கண் ஒற்றுமைப்பட்ட சொல்லின்கண் நேர்பசை நிரைபசை யெனக் காட்டப்படாது. அது ஈற்றடி மருங்கிற் றனியசையாகி நில்லா தென்பதூஉம், ஒற்றுமைப்படாத சொல்லின்கண் தனியசை யாமென்பதூஉம், ஈற்றடிக்கண் எவ்வழியானும் தனியசை யாகாதென்பதூஉ முணர்த்தியவாறும்.

“அங்கண் மதிய மரவுவாய்ப் பட்டென” [அகத்திணை. பக் - ௨௰] என்றவழி அரவென்பது மொழிசிதையாமையின் நிரைபசை யாயிற்று.

“பெருமுத் தரையர் பெரிதுவந் தீயும்.” [நாலடி-௨௱] என்றவழி பெரு முன்னர்க் குறித்துச்சேராக்கவேண்டுமாயி னீண்டு மொழிசிதைத்தலின் நிரைபசை யாகாதாயிற்று.

‘தூமலர்க் [கோதா யிலக்குநேர்ச் சேர்ப்பன்
பூணமலர்த் தாரகலம்] புல்லு’ [யாப். வி. பக். ௨௱௰௯]
‘மஞ்சரும் [சோலை மலைநாட மூத்தாலும்
அஞ்சொன் மடவாட்] கருளு’ [யாப். வி. பக். ௨௱௯]

என்பதனாற் கொள்[ளற்]க. இவை புல்லு அருளு எனவருமாலெனின்: “நிற்றலின்றே யீற்றடிமருங்கினும்” என்பதனான் ஈற்றடியிறுதியினு மிடையடியிறுதியினு முற்றியலுகரம் நில்லாதெனவும் பொருளாம்; இதனானே அவ்வாறு வருதலுங்கொள்க.] முற்றியலுகரமு மென்ற வும்மை இறந்தது தழீஇய எச்சவும்மை. (அ)

௩௱௰௮.

குற்றிய லுகரமு முற்றிய லுகரமு
மொற்றொடு தோன்றி நிற்கவும் பெறுமே.

என்-னின், எய்தியது விலக்கல்
நுதலிற்று.
இருவகை யுகரமு மொற்றொடு
தோன்றித் தனியசையாகிநிற்கவும்
பெறுமென்று

வாறு.
உம்மை யிறந்தது தழீஇயிற்று.
உதாரணம்:—
"படுகிளி யாவும் பசுங்குர லேனல்
கடிதின் மறப்பித்தா யாயி னினிநீ
நெடிதுநன் னீரோம்புதல் வேண்டும்"
[கலித் - ருய]

இதன்கட் குற்றியலுகர
மொற்றொடுவருதலான் நேரசையாயிற்
று.

"கன்றும் படுமோ வென்றிசின் யானே"

[நற்றிணை - ௧௧]

' இதன்கண் முற்றியலுகர மொற்றொடு வருதலான் நேரசையாயிற்று.

(பிரதி)—1. வந்தீற்றடி. 2. நிரையசை.

பொருளதிகாரம் - செய்யுளியல்
௫௱௬௧

௫௱௰௬. *அசையுஞ் சீரு
மிசையொடு சேர்த்தி
வகுத்தன
ருணர்த்தல் வல்லோ ராறே.
என்-னின், வகையுளி

யுணர்த்துதல் நுதலிற்று.

அசையையுஞ் சீரையும்

ஓசையோடு சேர்த்திப் பாகுபாடுணர்த்தல்

வல்லோர்கள்; நெறி யென்றவாறு.

அஃதாவது பொருளொடு

சொல்லை யறுத்தவழித் தளையுஞ் சீருஞ்

சிதையின்

அவ்வழி ஓசையை நோக்கி அதன்வழிச்

சேர்த்துக வென்றவாறு.

அது வருமாறு:

'மலர்மிசை

[யேகினான் மாணடி சேர்ந்தார்

நிலமிசை நீடு வாழ்வார்.'] [குறள் - ௩]

என்றவழி வாழ்வாரெனப் பொருணோக்கிச் சீராமாயின் ஓசைகெடும். அதன்கண் 'வாழ்' என்பதனை முதனின்ற சீரோடொட்டக் கெடாதாம். பிறவு மன்ன.

இத்துணையும் கூறப்பட்டது

அசைவகை.

(ய)

ஙூஉய.

ஈரசை கொண்டு மூவசை புணர்த்துஞ்
சீரியைந் திற்றது சீரெனப் படுமே.

என்-னின்,

நிறுத்தமுறையானே சீராமாறு
உணர்த்துதல் நுதலிற்று.

1இரண்டசைகொண்டு
புணர்த்தும், மூன்றசைகொண்டு
புணர்த்தும், ஓசை பொ

ருந்தி யிற்றது சீரெனப்படு
மென்றவாறு.

'தாமரை புரையுங் காமர் சேவடி' [குறுந் - கடவுள்வாழ்த்து]

என்றவழி நான்குசொல்லாகி ஓசை [2]யற்றநின்றவாறு கண்டுகொள்க.



'எந்நன்றி கொன்றார் [க்குமுய்வுண்டா முய்வில்லை
செய்ந்நன்றி கொன்ற] மகற்கு' [குறள் - ௱௰]

என்றவழி மூன்றசையினுஞ் சீராகியவாறும் அவ்வளவினுன் [3]ஓசை யற்றநின்றவாறுங் கண்டுகொள்க.

௩௱௨௧. இயலசை மயக்க மியற்சீ ரேனை
யுரியசை மயக்க மாசிரிய வுரிச்சீர்.

என்-னின், ஈரசைச்சீர் [4]பாகுபடுமாறு உணர்த்துதல் நுதலிற்று.

மேற்சொல்லப்பட்ட அசைகளில் இயலசை மயங்கிவந்தன இயற்சீ ரெனப்படும்; உரியசை மயங்கிவந்தன ஆசிரியவுரிச்சீ ரெனப்படும் என்றவாறு.

மயங்குதலாவது ஒருங்குவருதல். நேர் நிரை நேர்பு நிரைபு: என்னு நான்கினையுந் தம்மினுறழப் பதினாறு அசைச்சீராம். அவற்றுள் இயலசையாகிய நேருநிரையுந் தம்மின் உறழ நான்கு சீராம். அவை இயற்சீர் எனப்படும்.

---

(பி-ம்)—* மேலதுஸம்ஸ்தான மகாவித்வான். ஸ்ரீ. ரா. ராகவையங்காரவர்கள் உதவிய ஏட்டுப்பிரதியில் இச் சூத்திரந் தொடங்கி உரையுள்ளது. 1. ஈரசைகொண்டு. 2. யற்றுநின்றவழிச்; பெற்று நின்றவாறு. 3. ஓசைபெற்று. 4. பாகுபாடாமாறு.

உதாரணம்:—

'தேமா, புளிமா, கருவிளம், கூவிளம்.'
என வரும்.

இனி உரியசையாகிய நேர்பு நிரைபு மென்றவற்றைத் தம்மினுறழ நான்குசீராம்.

அவை ஆசிரிய உரிச்சீர் எனப்படும்.

உதாரணம்:—

'ஆற்றநோக்கு, ஆற்றுவரவு, வரகுசோறு, வரகுகவிடு'
என வரும்.

சூ௨௨. முன்னிரை யீறினு மன்ன வாகும்.

(ம௨)

என்-னின், இதுவும்

ஆசிரியவுரிச்சீ ராமாறு உணர்த்துதல் நுதலிற்று.

நேர்பசை நிரைபசைப் பின், நிரை யிறுதியும் ஆசிரியவுரிச்சீரா மென்றவாறு.

உதாரணம்:— [illegible] யாற்றுமடை, குளத்துமடை' எனவரும்.

(மந)

௩௱௨௩. நேரவ ணிற்பி னியற்சீர்ப் பால.

என்-னின்,

இது இயற்சீர்க் குரியதோர் வேறுபாடு உணர்த்துதல் நுதலிற்று.

உரியசைப் பின்னர் நேரசை வரின்,

அது இயற்சீ ரென வரு மென்றவாறு.

உதாரணம்:—
'ஆற்றுக்கால், குளத்துக்கால்'.

எனவரும்.

நாஉச. இயலசை யீற்றுமு

னுரியசை வரினே

நிரையசை யியல வாகு மென்ப.

என்-னின், இயலசைப்

கொள்க வென்றவாறு.

பின்னர் உரியசை வரின்,

எனவே

இவையும் இயற்சீ ரென்றவாறும்.

(மசு)

நிரையசை வந்தாற்போலக்

உதாரணம்:— [illegible]

[illegible] மாங்காடு, களங்காடு, பாய்குரங்கு, கடிகுரங்கு

என வரும்.

இத்துணையுங் கூறப்பட்டது ஈரசைச் வுரிச்சீர் ஆறுமா மென்றவாறு.

சீர் பதினாறினும்

இயற்சீர் பத்தும் ஆசிரிய

(ம௩)

நூ॥ உரு. அளபெடை யசைநிலை யாகலு முரித்தே.

என்-னின், சீர்க்கண் உயிரளபெடைக் குரிய தோர் மரபுணர்த்துதல் நுதலிற்று.
உயிரளபெடை அசையாக நிற்கவும் பெறும் என்றவாறு.
உம்மை எதிர்மறையாகலான் ஆகாமை பெரும்பான்மை.

## பொருளதிகாரம் - செய்யுளியல்

நூ॥ சூ॥ங.

உதாரணம்:—

'கடாஅ வுருவொடு ... வல்லதே யொற்று' [குறள் - ருஅரு]

இது அளபெடை யலகுபெற்றது.

'இடைநுடங்க [வீர்ங்கோதை பின்றாழ

புடைபெயரப்

போழ்வாய் திறந்து—கடைகடையி

னுப்போஓ வென்வுரைத்து மீள்வா

ளொளிமுறுவற்

கொப்போநீர் வேலி] யுலகு'

இதன்கண் அளபெடை

யசைநிலையாகி யலகுபெறுதாயிற்று.

(யக)

நூஉசு. ஒற்றள

பெடுப்பினு மற்றெண மொழிப.

என்-னின், ஒற்றளபெடைக்

குரியதோர் மரபுணர்த்துதல் நுதலிற்று.

ஒற்று அளபெடுத்துவரினும்

அசைநிலையாகலு முரித்து என்றவாறு.

மொட்டேற்று
வகையான் ஆகாமை பெரும்பான்மை.

உதாரணம்:

'கண்ணொண் டண்ணெனக்
கண்டுங் கேட்டும்' [மலைபடு - ௩௫௨]

என வரும்.

(௰௮)

## ௩௱௨௭. இயற்சீ

ரிறுதிமுன் னேரவ ணிற்பி
னுரிச்சீர் வெண்பா வாகு மென்ப.

என்-னின்,
வெண்பாவுரிச்சீர் ஆமா றுணர்த்துதல்
நுதலிற்று.

மேற்சொல்லப்பட்ட ஈரசைச்சீர் பதினாறோடு நான்கசையுங் கூட்டியுறழ, அறுபத்துநான்கு மூவசைச் சீராம். அவற்றுள் இயற்சீர்நான்கின் பின் நேரசை வந்த மூவசைச் சீர் நான்கும் வெண்பாவுரிச்சீராம் என்றவாறு.

உதாரணம்:— [illegible]
'மாவாழ்கான், மாவருகான், புலிவாழ்கான், புலிவருகான்'
என்பன.

## ௩௱௨௮.

**வஞ்சிச் சீரென வகைபெற் றனவே**
**வெண்சீ ரல்லா மூவசை [2]யென்ப.**

என்-னின், வஞ்சியுரிச்சீர் ஆமா றுணர்த்துதல் நுதலிற்று.

வஞ்சியுரிச்சீரெனப் பாகுபட்டன மேற்சொல்லப்பட்ட மூவசைச்சீரவ் வறுபத்து நான்கு சீரினும் வெண்சீரல்லாத அறுபது மென்றவாறு.

உதாரணம்:—

| | | | |
|---|---|---|---|
| மாவாழ்நெறி | புலிவாழ்நெறி | பாம்புவாழ்கான் | களிறுவாழ்கான் |
| மாவாழ்காடு | புலிவாழ்காடு | பாம்புவாழ்நெறி | களிறுவாழ்நெறி |
| மாவாழ்பொருப்பு | புலிவாழ்பொருப்பு | பாம்புவாழ்காடு | களிறுவாழ்காடு |

(பி-ம்)—1. மாட்டென்னும். 2 யான.

## ௩௱௨௯

| | | | |
|---|---|---|---|
| மாவருநெறி | புலிவருநெறி | பாம்புவாழ்பொருப்பு | களிறுவாழ்பொருப்பு |
| மாவருகாடு | புலிவருகாடு | பாம்புவருகான் | களிறுவருகான் |
| மாவருபொருப்பு | புலிவருபொருப்பு | பாம்புவருநெறி | களிறுவருநெறி |
| மாபோகுகான் | புலிபோகுகான் | பாம்புவருகாடு | களிறுவருகாடு |
| மாபோகுநெறி | புலிபோகுநெறி | பாம்புவருபொருப்பு | களிறுவருபொருப்பு |
| மாபோகுகாடு | புலிபோகுகாடு | பாம்புபோகுகான் | களிறுபோகுகான் |
| மாபோகுபொருப்பு | புலிபோகுபொருப்பு | பாம்புபோகுநெறி | களிறுபோகுநெறி |
| மாவழங்குகான் | புலிவழங்குகான் | பாம்புபோகுகாடு | களிறுபோகுகாடு |
| மாவழங்குநெறி | புலிவழங்குநெறி | பாம்புபோகுபொருப்பு | களிறுபோகுபொருப்பு |
| மாவழங்குகாடு | புலிவழங்குகாடு | பாம்புவழங்குகான் | களிறுவழங்குகான் |
| மாவழங்கு பொருப்பு | புலிவழங்குபொருப்பு | பாம்புவழங்குநெறி | களிறுவழங்குநெறி |
| | | பாம்புவழங்குகாடு | களிறுவழங்குகாடு |
| | | பாம்புவழங்குபொருப்பு | களிறுவழங்குபொருப்பு |

(௬௧)

ஆக அறுபதும்.

௩௨௪. தன்பா வல்வழித் தானடை யின்றே.

என்-னின், வஞ்சி யுரிச்சீர்க்குரிய மரபு உணர்த்துதல்

நுதலிற்று.

வஞ்சியுரிச்சீர் வஞ்சிப்பாவினு ளல்லது நடைபெறாது என்றவாறு.

(௨௰)

௩௱௩௰. வஞ்சி மருங்கி னெஞ்சிய வுரிய.

என்-னின், இது வஞ்சிப்பாவிற் குரியதோர் மரபு உணர்த்துதல் நுதலிற்று. வஞ்சிப் பாவினுள் ஒழிந்த சீர்கள் வரப்பெறும் என்றவாறு. (௨௧)

௩௱௩௧. வெண்பா வுரிச்சீ ராசிரிய வுரிச்சீ ரின்பா நேரடிக் கொருங்குநிலை யிலவே.

என்-னின், வெண்பாவிற் குரியதோர் மரபு உணர்த்துதல் நுதலிற்று.

வெண்பாவுரிச்சீரும் ஆசிரியவுரிச்சீரும் வெண்பாவினது நேரடிக்கண் ஒருங்கு நிற்றலில்லை என்றவாறு.

௩௱௩௨.

கலித்தளை மருங்கிற் கடியவும் [1]பெறாஅ.

(௨௨)

என்-னின், கலிப்பாவிற் குரியதோர் மரபு உணர்த்துதல் நுதலிற்று.

கலித்தளை வரும்வழி மேற் சொல்லப்பட்ட இருவகைச்சீரு மொருங்கு நிற்க[வும்] பெறும் என்றவாறு.

(௨௯)

௩௮௩. கலித்தளை யடிவயி னேரீற் றியற்சீர்
நிலைக்குரித் தன்றே தெரியு மோர்க்கே.

(பி-ம்)—1: படாஅ.



என்-னின், இதுவுமது.

கலிப்பாவிற்குரிய
கலித்தளைக்கண் நேரீற்றியற் சீர்
நிற்றற்குரித் தன்று ஆராய் வார்க்
கென்றவாறு.

(௩௦)

௩௮௪. வஞ்சி மருங்கினு

பிறுதி [1]நில்லாது.

என்-னின், வஞ்சிக்குரிய தோர் மரபு உணர்த்துதல் நுதலிற்று.

வஞ்சிப்பாவினும்

அடியினீற்றின்கண் நில்லாது நேரீற்றியற் சீர் என்றவாறு. எனவே அடிமுதற்கண் நிற்கப்பெறும் என்றவாறும்.

(உரு)

ஙாஙரு. இசைநிலை நிறைய
[2]நிற்குவ தாயி
னசைநிலை வரையார் சீர்நிலை
பெறவே.

என்-னின், ஓரசைச்சீ ராமாறு உணர்த்துதல் நுதலிற்று.

இசை நிற்கின்றநிலை

நிரம்பாநிற்குமாயின, அசையும் சீரொத்

தன்மை போல வரை

யார் ஆசிரியர் என்றவாறு.

உதாரணம்:—

'நாள், மலர், காசு, பிறப்பு'

எனவரும்.

(உசு)

௩௱௩௬.

இயற்சீர்ப் பாற்படுத் தியற்றினர் கொளலே

தளைவகை சிதையாத் தன்மை யான.

என்னின், அவ்வோரசைச்

சீர்தளை யாமாறு உணர்த்துதல்

நுதலிற்று.

ஓரசைச்சீரைத் தளைவகை சிதையாத தன்மை வேண்டுமிடத்து [3]இயற்சீர்போலக் கொள்க என்றவாறு. (௨௭)

௲௱௲௭. வெண்சீ ரீற்றசை
நிரையசை யியற்றே.

என்-னின், இதுவுந்
தளைவழங்குந் திறன் உணர்த்துதல்
நுதலிற்று.

வெண்சீ ரீற்றசை தளைவழங்குமிடத்து இயற்சீரசை நிரையீறு போலும் என்றவாறு. இயற்சீரென்பது அதிகாரத்தான் வந்தது. (௨௮)

௲௱௲௮.

இன்சீ ரியைய வருகுவ தாயின்
வெண்சீர் வரையா ராசிரிய வடிக்கே.

என்-னின், ஆசிரியப்பாவிற்கு உரியசீர் உணர்த்துதல் நுதலிற்று.

இனிய ஓசை பொருந்திவருகுவதாயின் ஆசிரியவடிக்கு வெண்பாவுரிச்சீர் வரையார் [4]ஆசிரியர் என்றவாறு. (உக)

௫௱௫௰ம்.

அந்நிலை மருங்கின் வஞ்சி யுரிச்சீ
ரொன்றுத லுடைய வோரொரு வழியே.

என்-னின், இதுவு மது.

(பி-ம்)—1. நில்லா. 2. நிற்குபவாயி. 3. இயற்சீர் னீறுபோலக். 4. சிலர்.

௫௱௬௬

தொல்காப்பியம் - இளம்பூரணம்

இன்சீரியைய வருகுவதாயின்

வஞ்சியுரிச்சீரும் ஒரோவழி

தொடையும் அடியின்கண் என்றவாறு.

(௫௨.)

௩௭௨. அடியிறந்து

வருத லில்லென மொழிப.

என்-னின், மேலதற் கோர்

புறனடை யுணர்த்துதல் நுதலிற்று.

தளையுந் தொடையும்

யென்றவாறு.

நான்குசீரடியின் வருதலன்றி யடியி

னீங்கிவருத லில்லை

அடிவரையறை யில்லாதன வற்றிற் கொள்ளப்படாது என்றவாறும்.

௩௭௩. அடியின் சிறப்பே பாட்டெனப் படுமே.

(௩௩)

என்-னின், இதுவும் அடிக்குரியதோர் சிறப்புணர்த்துதல் நுதலிற்று. அடியின் சிறப்பினுனே பாட்டென்று சொல்லப்படு மென்றவாறு.

எனவே, பாட்டென்னுஞ் செய்யுட்கு அடி யின்றியமையாதென்று கொள்க. பாட்டாவன:—வெண்பா ஆசிரியம் கலி வஞ்சி என்பன.

இனி அவ்வடியினை எழுத்தளவினுற் குறியிடுகின்றார்.

௩௩௪. நாலெழுத் தாதி யாக வாறெழுத்
தேறிய நிலத்தே குறளடி யென்ப.

(௩௪)

என்-னின், குறளடி வரையறை யுணர்த்துதல் நுதலிற்று.

நாலெழுத்து முதலாக ஆறெழுத்தீறுக ஏறிய மூன்றுநிலத்தை யுடைத்து குறளடி யென்று சொல்லுவரென்றவாறு.

எனவே, குறளடிக்கு நிலம் நாலெழுத்து மைந்தெழுத்து மாறெழுத்துமாம். இதற்குரிய எழுத்து முன்னர்க் காட்டுதும்.

(பி ம்)—1. தொகை கூறியவாறு. 2. காட்டே.

[illegible handwriting]

௩௱௪௫. எழெழுத் தென்ப
சிந்தடிக் களவே
யீரெழுத் தேற்ற மல்வழி யான.

என்-னின், சிந்தடி யாமாறு உணர்த்துதல் நுதலிற்று.
எழெழுத்தென்று சொல்லுவர் சிந்தடிக்கு அளவு; ஒன்பதெழுத்து ஏற்றம் அல்லாத விடத்தென்றவாறு.
எனவே எழும் எட்டும் ஒன்பதுமாகிய எழுத்தினாற் சிந்தடியாம் என்றவாறும்.(௩௮)

௩௱௪௬. பத்தெழுத் தென்ப
நேரடிக் களவே
யொத்த நாலெழுத்

தேற்றலங் கடையே.

என்-னின், அளவடி யாமாறு உணர்த்துதல் நுதலிற்று.

அளவடி யெனினும் நேரடி யெனினும் ஒக்கும். பத்தெழுத்து முதலாகப் பதினன்கெழுத்தளவும் அளவடியாம் என்றவாறு.

எனவே பத்தும் பதினென்றும் பன்னிரண்டும் பதின்மூன்றும் பதினுன்மென ஐந்து நிலம்பெறும். (௩௪)

௩௱௪௪. மூவைந் தெழுத்தே நெடிலடிக் களவே

யீரெழுத்து[1] மிகுதலு
மியல்பென மொழிப.

என்னின், நெடிலடி யாமாறு
உணர்த்துதல் நுதலிற்று.

பதினைந்தெழுத்து முதலாகப்
பதினேழெழுத்தளவு நெடிலடியாம்
என்றவாறு.

எனவே பதினைந்தும் பதினாறும்
பதினேழும் என மூன்றுநிலம் பெறும்
என்றவாறும்.

(௩௪)

௩௪௮.

மூவா றெழுத்தே கழிநெடிற் களவே
யீரெழுத்து மிகுதலு மியல்பென மொழிப.

என்-னின், கழிநெடிலடி யுணர்த்துதல் நுதலிற்று.

பதினெட்டெழுத்து முதலாக இருபதெழுத்தளவுங் கழிநெடிலடியாம் என்றவாறு. எனவே பதினெட்டும் பத்தொன்பதும் இருபதும் என மூன்றுநிலம் பெறும். (௩௯)

௩௱௪௯. சீர்நிலை தானே
யைந்தெழுத் திறவா
நேர்நிரை வஞ்சிக் காறு
மாகும்.

என்-னின், சீர்க்கு எழுத்து வரையறை உணர்த்துதல் நுதலிற்று.

சீர்நிலை ஐந்தெழுத்தின் மிகாது நேர் இறுதியாம்காலத்து; நிரையீறாகிய வஞ்சியுரிச்சீர்க்கு ஆறெழுத்தும் ஆகும் என்றவாறு.

எனவே இருபதெழுத்தின் மிக்க நாற்சீரடி யில்லை யென்றவாறும்; வஞ்சிச்சீர் முச்சீரடியின்கண் வருதலின். (௪௰)

௩௱௫௰. எழுத்தள வெஞ்சினுஞ் சீர்நிலை தானே
குன்றலு மிகுதலு மில்லென மொழிப.

(பி-ம்)—1. மிகுத லிவட்பெறு மேன்றே.

௩௱௩௮

# தொல்காப்பியம் - இளம்பூரணம்

இதுவுஞ் சீர்க்குரியதோர் மரபு உணர்த்துதல் நுதலிற்று.

என்றோதப்பட்ட அடிகள் பலதொடுக்கும் வழி ஓரடிக்கோரடி எழுத்தளவு குறைத்துவரினுஞ் சீர்நிலை நான்கின் இழிதலும் மிகுதலு மில்லை என்றவாறு. (௪௧)

௩௱௫௧. உயிரில் லெழுத்து மெண்ணப் படாஅ
வுயிர்த்திற மியக்க மின்மை யான.

என்-னின், மேற் சொல்லப்பட்ட அடிக்குரிய எழுத்து வரையறை உணர்த்துதல் நுதலிற்று.

உயிரில்லாத எழுத்தும் எண்ணப்படா: உயிர்போல இயக்கமின்மையான் என்றவாறு.

உம்மை எச்சவும்மை யாதலாற் குறுகிய வுயிர்த்தாகிய குற்றியலிகரமுங் குற்றியலுகரமும் எண்ணப்படா வென்றுகொள்க. எனவே யெண்ணப்படுவன உயிரும் உயிர்மெய்யுமாகி ஒருமாத்திரையிற் குறையாதன என்று கொள்ளப்படும். (௪௨)

௩௱௪௨. வஞ்சி யடியே யிருசீர்த் தாகும்.

என்-னின், வெண்பா ஆசிரியங் கலிக் குரித்தாகிய அடியிலக்கணம் கூறினார். இனி வஞ்சிப்பாவிற் குரிய அடிவரையறை உணர்த்துதல் நுதலிற்று.

வஞ்சிப்பாவிற் குரிய அடி யிரண்டுசீரை யுடைத்து என்றவாறு. (௪௩)

௩௱௪௩. தன்சீ ரெழுத்தின் சிறுமை மூன்றே.

என்-னின், வஞ்சியுரிச்சீர்

குறைந்தநிலை யுணர்த்துதல் நுதலிற்று.

வஞ்சியுரிச்சீரின் சிறுமை

மூன்றெழுத்தென்று கொள்ளப்படும்.

எனவே, மூன்றெழுத்தும்

நான்கெழுத்து மைந்தெழுந்து

மாறெழுத்தும் வஞ்சி

யுரிச்சீ ரெழுத்தென்றவாறும்.

(௬௪)

௩௬௪. முச்சீ ரானும்

வருமிட னுடைத்தே.

என்-னின், இதுவும் வஞ்சியடி

யாமாறு உணர்த்துதல் நுதலிற்று.

வஞ்சியடி மூன்று சீரானும்

வரும் இடனுடைத்து என்றவாறு.

எனவே வஞ்சியடி

இருசீரடியானு முச்சீரடியானும் வரும்

என்றவாறும்.

உதாரணம்:—

'தூங்குகையா னோங்குநடைய

வுறழ்மணியா னுயர்மருப்பின' [புறம் - ௨௨]

இதனுள் மூன்றெழுத்து முதலாக ஆறெழுத்துக் ரடி யாயினவாறுங் காண்க.

காறுஞ் சீர் வந்தவாறும் இருசீ

'தொன்னலத்தின் புலம்பலைப்பத்

தொடித்தோண்மேல்'

எனவும் வரும்.

௩௰௫. அசைகூ னுரு மவ்வயி னான.

என்-னின், மேற்சொல்லப்பட்ட வஞ்சியடிக்குரிய தோர் மரபு உணர்த்துதல் நுதலிற்று.

மேற்சொல்லப்பட்ட இருவகையடியினும் அசை கூனாகி வரும் என்றவாறு.

## (௨௪) பொருளதிகாரம் - செய்யுளியல்

௩௯௯

௩௰௬.

சீர்கூ னாத னேரடிக் குரித்தே.

என்-னின், இதுவுங்

கூனாமிடன் உணர்த்துதல் நுதலிற்று.

சீர்முழுதுங் கூனாகிவருதல் அளவடிக் குரித்து என்றவாறு. நேரடி என்றதனான் 1வெண்பாவினும் ஆசிரியத்தினுங் கலியினுங் கொள்ளப்படும்.

'அவரே, கேடில் விழுப்பொரு 2டருமார் பாசிலை
வாடா வள்ளியங் காடிறந் தோரே' [குறுந் - உ௱௰௬]

இது கலிப்பாவிற் கூன்.

(௭௭) நூறுள. ஐவகை

யடியும் விரிக்குங் காலை

மெய்வகை யமைந்த பதினேழ் [5]நிலத்தும்

எழுபது வகையின் வழூஉவில வாகி

யறுநூற் றிருபத்

தைந்தா கும்மே.

என்-னின், மேற் சொல்லப்பட்ட அடிக்கெல்லாம் விரியுணர்த்துதல் நுதலிற்று.

ஐவகை அடியும் விரிக்குங் காலை என்பது — நாற்சீரடியை எழுத்தளவுபற்றி வகுக்கப்பட்ட குறளடிமுதலாகிய ஐந்தடியினையும் விரித்துணர்த்துங் காலத்து என்ற

வாறு.

# மெய் என்பது—உடம்பு.

# அஃதாவது அசையுஞ் சீரும் தோற்றுதற் கிடமாகிய

எழுத்து.

[மெய்] வகையமைந்த பதினேழ் நிலத்தும் என்பது—எழுத்து அமைந்த எா லெழுத்து முதலாக இருபதெழுத் தீறாகச் சொல்லப்பட்ட பதினேழ் நிலத்தும் என்றவாறு.

எழுபது வகையின் வழுவில வாகி என்பது—எழுபது வகைப்பட்ட உரழ்ச்சியின்

வழுவுதலின்றி என்றவாறு.

[எழுபது] வகையாவது—இரண்டுசீர் தம்முட் புணரும் புணர்ச்சி எழுபது வகை

யாம் என்றவாறு.

மேற்சொல்லப்பட்ட எண்பத்துநான்கு சீரினும்

[தொல் - பொரு - செய்யுளியல் ௩௰, உரை]

---

(பி-ம்)—1. வெண்பா வாசிரியங் கலியினும். 2. டதளர். 3. சரவரன்மாப். 4. வம்பு தெரிதியையே. 5. நிலத்த; நிலத்தின். 6. ஐந்தடி யினும் விரித்துரைக்கும்.

# தொல்காப்பியம் - இளம்பூரணம்

[1]இயற்சீரான் வருவதனை இயற்சீரடி எனவும், ஆசிரியவுரிச்சீரான் வருவதனை ஆசிரியவுரிச்சீரடி எனவும், இயற்சீர் விகற்பித்து வருவதனை இயற்சீர் வெள்ளடி எனவும், வெண்சீரான் வருவதனை [1]வெண்சீரடி எனவும், நிரையீற்று வஞ்சிச்சீரான் வருவதனை நிரையீற்று வஞ்சியடி எனவும், உரியசையீற்றான் வருவதனை உரியசையீற்று வஞ்சியடி எனவும், ஓரசைச்சீரான் வருவதனை அசைச்சீரடி எனவும் வழங்கப்படும்.

அவற்றுள், இயற்சீரடி நேரீற்றியற்சீரடி எனவும், நிரையீற்றியற்சீரடி எனவும் இருவகைப்படும். நேரீற்றியற்சீரடியாவது [2]நேரீறு நேர் முதலாகிய இயற்சீர் வருதலும் [3]நேர்புமுதலாகிய ஆசிரிய வுரிச்சீர் வருதலும் நேர்முதல் வெண்பா வுரிச்சீர் வருதலும் நேர்முதல் வஞ்சியுரிச்சீர் வருதலும் நேர்முதல் ஓரசைச்சீர் வருதலும் என ஐந்துவகைப் படும். நிரையீற்றியற்சீரும் இவ்வாறே நிரைமுதலாகிய ஐந்து சீரொடு முறழ ஐந்து வகைப்படும்.

ஆசிரியவுரிச்சீரடியும் இருவகைப்படும் நேர்பு ஈறும் நிரைபு ஈறும் என. அவற்றுள், நேர்பீற்றுச் சீரை நேர்புநேரு முதலாகிய ஐந்து சீரொடு முறழ ஐந்துவகைப்படும். நிரைபீற்றுச்சீரும் அவ்வாறே நிரைபுநிரையு முதலாகிய ஐந்து சீரொடும் உறழ ஐந்துவகைப்படும்.

இயற்சீர் வெள்ளடியும் நேரீறும் நிரையீறும் என இருவகைப்படும். அவற்றுள், நேரீறு நிரைபுநிரையு முதலாகிய ஐந்துசீரொடும் உறழ ஐவகையாம். நிரையீறும் அவ்வாறே நேர்புநேரு முதலாகிய ஐந்துசீரொடும் உறழ ஐவகையாம்.

வெண்சீர் நேர்முதலோடு உறழ்தலும் நிரைமுதலோடு உறழ்தலு மென இருவகைப் படும். அவற்றுள், நேர்பு நேருமுதலாகிய சீர்களொடு உறழ்தல் ஐந்துவகைப்படும். நிரைபு நிரையுமுதலாகிய சீர்களொடு

உறழ்தலும் ஐந்துவகைப்படும்.

நிரையீற்று வஞ்சியுரிச்சீர்

முதலசையோ டொன்றுவனவும்

ஒன்றாதனவும் என

இருவகைப்படும். அவற்றுள்,

ஒன்றிவருவது நிரைபுநிரையு

முதலாகிய சீரொடு உறழ

ஐந்து வகைப்படும். ஒன்றாதது

நேர்புநேரு முதலிய சீரொடு உறழ

ஐவகைப்படும்.

உரியசையீற்று வஞ்சியடியும்

அவ்வாறே உறழப் பத்து வகைப்படும்.

அசைச்சீரடியும் அவ்வாறே

இருவகையாக்கி உறழப்

பத்துவகைப்படும்.

[4]இவ்வகையால் தளை எழு பாகுபட்டன: இவை நேரொன் றாசிரியத்தளை, நிரையொன் றாசிரியத்தளை, இயற்சீர் வெண்டளை, வெண்சீர் வெண்டளை, கலித்தளை, ஒன்றிய வஞ்சித்தளை, ஒன்றாதவஞ்சித்தளை என எழுவகையாம். அவ்வழி ஓரசைச்சீர் இயற்சீர்ப் பாற்படும். ஆசிரியவுரிச்சீரு மதுவேயாம். மூவசைச்சீருள் [5]வெண்பாவுரிச்சீ ரொழிந்தன வெல்லாம் வஞ்சியுரிச்சீராம். அவ்வழி இயற்சீர் நிற்ப வருஞ்சீர் முதலசையொடு நேராய் ஒன்றுவது நேரொன் றாசிரியத்தளையாம்; நிரையாய் ஒன்றுவது நிரையொன் றாசிரியத் தளையாம்; மாறுபட்டு வருவது இயற்சீர் வெண்டளையாம். வெண்சீர் நிற்ப வருஞ்சீர் முதலசையோடு ஒன்றுவது வெண்சீர் வெண்டளையாம்; நிரையா யொன்றிற் கலித்தளை யாம். [6]வஞ்சியுரிச்சீர் நிற்ப வருஞ்சீர் முதலசையோடு ஒன்றுவது ஒன்றிய வஞ்சித்தளை யாம்; ஒன்றாதது ஒன்றாவஞ்சித்தளையாம். இவ்வகையால் தளை எழாயின. இவ்வாறு வருதல் வருகின்ற சூத்திரங்களா னுணர்க.

(பி-ம்)—1. வெண்சீர் வெள்ளடி. 2. நேரியற்சீர் முதலாகிய. 3. சேர்முத. 4. இவற்றுள். 5. வெண்பாவுரிச்சீரு மதுவேயாம். மூவசைச்சீருள் வெண்பா வுரிச்சீரொழிந்தன வெல்லாம் வஞ்சியுரிச்சீராம். 6. வஞ்சியுரிச்சீர் நிற்கை.

# பொருளதிகாரம் - செய்யுளியல்

## நூன்க

இனி அடி அறுநூற்றிருபத்தைந்தாமாறு: அசைச்சீர் இயற்சீர் ஆசிரியவுரிச்சீர் வெண்சீர் வஞ்சியுரிச்சீர் என்னும் ஐந்தினையும் நிறுத்தி [1]இவ்வைந்துசீரும் வருஞ்சீராக வுறழும்வழி இருபத்தைந்து விகற்பமாம். அவ்விருபத்தைந்தின் கண்ணும் மூன்றாவது ஐந்துசீரையும் உறழ நூற்றிருபத்தைந்து விகற்பமாகும். அந்நூற்றிருபத்தைந்தின் கண்ணும் நான்காவது ஐந்துசீரையும் உறழ அறுநூற்றிருபத்தைந்தாம் [2]என்றவாறு:

நூறுஅ. [3]ஆங்கனம் விரிப்பி னளவிறந் தனவே

பாங்குற

வுணர்ந்தோர் பன்னுங் காலை.

என்-னின், அடி விரியுமாறு உணர்த்துதல் நுதலிற்று.

ஈண்டுறழ்ந்த முறையானே
அஞ்சடி முதலாக மேன்மேலு முறழ
வரம்பிலவாம்

என்றவாறு.

அஃதாவது அறுநூற்றிருபத்தைந்தினோடும் ஐந்தாவது வரும் ஐஞ்சீரையும் உறழ மூவாயிரத்தொருநூற் றிருபத்தைந்து விகற்பமாம். அதன்கண் ஆறாவது இவ்வகையைந்து சீரையும் உறழப் பதினையாயிரத்து அறுநூற்றிருபத்தைந்து விகற்பமாம். அதன்கண் ஏழாவது வரும் சீரைந்தினையும் உறழ எழுபத்தெண்ணாயிரத்தொருநூற்றிருபத் தைந்து விகற்பமாம். இவ்வகையினா னுறழ வரம்பிலவாய்விரியும். +அன்றியும், இச்சொல்லப்பட்ட [5]அடியினை அசையானும் எழுத்தானும் விரிக்க [6]வரம்பிலவாம். (சுக)

ருாருசு. ஐவகை யடியு மாசிரியக் குரிய.

என்-னின், ஆசிரியப்பா நாற்சீரான் வரும் என்பதூஉம் அதன்கண் விரிக்கப்பட்ட ஐவகையடியும் உரித்தென்பதூஉம் உணர்த்துதல் நுதலிற்று.

நாற்சீரடிக்கண் வகுக்கப்பட்ட ஐவகையடியும் ஆசிரியப்பாவிற் குரிய என்றவாறு. ஐவகை யடியு முரியவெனவே, அவற்றிற்கு முதலாகிய நாற்சீரடியும் உரித்தாயிற்று.

உதாரணம்:—

'தேர்ந்து தேர்ந்து சார்ந்து சார்ந்து
7நேர்ந்து வாடினை நினையிற்
8சேர்ந்த வல்வினை 9தேய்ந்தக லும்மே.'

இதன்கண் முதலடி நாலெழுத்தான் வந்தவாறு காண்க.

'குன்று கொண்டு நின்ற மாடு
பொன்ற வந்தமாரி
சென்று காத்த திறலடி தொழுமே.'

இதன்கண் முதலடி ஐந்தெழுத்தான் வந்தது.

'ஆறு சூடி நீறு பூசி
யேறு மேறு 10நிறைவனைக்
கூறு நெஞ்சே குறையிலை 11நினக்கே.'

இதன்கண் முதலடி ஆறெழுத்தான் வந்தது.

---

(பி-ம்)—1. இவ்வைந்தினையும் வஞ்சியுரிச்சீராக. 2. என்றவாறு ... சீரடிவேறுபாடென்று கொள்க. 3. ஆங்ஙனம். 4. அன்றி. 5. அடிவகையானும் எழுத்தானும். 6. வரம்பிலவாகும் எனவுமாம். 7. நேர்ந்து நேர்ந்து வாடினை நினையிற். 8. சேர்தரு. 9. சேர்ந்தக. 10. மீசனைக். 11. நமக்கே.

சிறந்தன் றளியவென் னெஞ்சே.'
இது முதலடி
யெட்டெழுத்தான் வந்தது.

•

'கொங்குதேர் வாழ்க்கை யஞ்சிறைத் தும்பி' [குறுந் - உ]
என்பது ஒன்பதெழுத்தான் வந்தது.

'காமஞ் செப்பாது கண்டது மொழிமோ' [குறுந் - உ]
என்பது பத்தெழுத்தான் வந்தது.

'தாமரை புரையுங் காமர் சேவடி' [குறுந் - கடவுள்வாழ்த்து]
என்பது பதினொ ரெழுத்தான் வந்தது.

'தாயுடை முளரிக் கலித்த தாமரை' [அகம் - யஞ]
என்பது பன்னிரண்டெழுத்தான் வந்தது.

•

'அகலிரு விசும்பிற் பாயிருள் பருகி' [பெரும்பாண் - க]
என்பது பதின்மூன்றெழுத்தான் வந்தது.

'யாவரும் விழையும் பொலந்தொடிப் புதல்வனை' [அகம் - யசு]
என்பது பதினாலெழுத்தான் வந்தது.

'எற்றுவல னுயரிய வெரிமரு ளவிர்சடை' [புறம் - ருக]
என்பது பதினைந்தெழுத்தான் வந்தது.

'விரிதிரைப் பெருங்கடல் வளைஇய வுலகமும்' [குறுந் - ௱௧]
என்பது பதினொரெழுத்தான் வந்தது.

'[1]தென்றூங்கி யுயர்சினைய மலைஞாறிய வியன்ஞாலம்'
என்பது பதினேழெழுத்தான் வந்தது.

[மதுரைக்-௩]

'கடுஞ்சினத்த கொல்களிறுங் கதழ்பரிய கலிமாவும்' [புறம் - ௫௫]
என்பது பதினெட்டெழுத்தான் வந்தது.

'நெடுங்கொடிய நிமிர்தேருங் நெஞ்சுடைய புகன்மறவரும்' [புறம்-௫௫]
என்பது பத்தொன்பதெழுத்தான் வந்தது.

'அமர்காணி னமர்கடந்தவர் படைவிலக்கி யெதிர்நிற்றலின்'
என்பது இருபதெழுத்தான் வந்தது.

(பி-ம்)—1. தென்றூங்கிய வுடர்சினைய மலைஞாறிய வியன்ஞாலம். (௫௰)

பொருளதிகாரம் - செய்யுளியல்

௩௭௩

௩௯௰. விராஅய் வரினு
மொரூஉநிலை யிலவே,

றவுணர்த் தேய்த்த
செங்கோ லம்பின் செங்கோட் டியானைக்
கழறொடிச் சேஎய் குன்றம்
குருதிப் பூவின்குலைக்காந் தட்டே' [குறு - ௧]

இதனுட் பலவடியும் வந்தவாறு
காண்க.

(௫௪)

ஙூா சூக.

தன்சீர் வகையினுந் தளைநிலை வகையினும்
இன்சீர் வகையி னைந்தடிக்கு முரிய
தன்சீ ருள்வழித்
தளைவகை வேண்டா.

அவ்வாறன்றி வருமொழியும் வெண்சீராயின் 'தன்சீ ருள்வழித் தளைவகை வேண்டா'
என்பதனான் அடக்கும். அச்சூத்திரத்தான் இருவாற்றானும் வெண்சீர்வெண்டளை கொள்ளாராயி
னார். இனி ஒழிந்த நான்கு தளையுங் கூறுகின்றாராயின் ஆசிரியத்தளையுங் கூறல் வேண்டா,
அதுவும் இயற்சீரான் வருதலின் [எனின்], அதன்கண்ணே இயற்சீர்வெண்டளை கூற
வேண்டுதலின் ஆசிரியத்தளையுங் கூறவேண்டுமென்க. (இஉ)

நாசஉ. [1]சீரியைன் மருங்கி னோரசை யொப்பி
ஆசிரியத் தளையென் [2]றறியல் வேண்டும்.

என்-னின், ஆசிரியத்தளையாமாறு உணர்த்துதல் நுதலிற்று.

சீர்கள் தம்முட்பொருந்தும்வழி நிலைமொழியாகிய இயற்சீரினீறும் வருமொழியா
கிய சீரின் முதலசையும் நேராய் ஒன்றின் நேரொன்றாசிரியத்தளையாம்; நிரையாய் ஒன்

றின் நிரையொன்றாசிரியத்தளையாம்

என்றவாறு.

இரண்டசையும் ஆசிரியத்தளை எனவேண்டுதலின் [3]பொதுப்படக் கூறினார். அவ்
வழி வருஞ்சீர் இயற்சீராயிற் சிறப்பின்றெனவுங் கொள்க. (இங)

நாசங. குறளடி முதலா வளவடி காறு

முறழ்நிலை யிலவே வஞ்சிக் கென்ப.

என்-னின், மேலதற்கோர்

புறனடை உணர்த்துதல் நுதலிற்று.

குறளடி முதலாக

அளவடியளவும் வஞ்சியுரிச்சீர்வந்து

உறழ்நிலையில: இவ்வடிகள்

இயற்சீரும் ஆசிரியவுரிச்சீரு[மா]ம் என்றவாறு.

எனவே பதினொக்தெழுத்து முதலாக நெடிலடியினுங் கழிநெடிலடியினு(மெய்யுற மே
பூப்[4]பெறுவ தென்றவாறும். எடுத்தோத்துப் பெரும்பான்மை. அளவடிக்கண் வஞ்சியுரிச்
சீர் மயங்குபவுள [5]வேன் மேற்கொள்க. (௫௪)

௩௱௬௪. அளவுஞ் சிந்தும்

வெள்ளைக் குரிய

தளைவகை யொன்றாத் தன்மை

யான.

என்-னின், வெண்பாவிற்குரிய அடியுந் தளையும் உணர்த்துதல் நுதலிற்று.

வரையறுத் துணர்த்துதல் முத

அளவடியும் சிந்தடியும்

என்றவாறு.

வெண்பாவிற்குரிய தளைவகை

ஒன்றாத்தன்மைக்கண்

எனவே ஒன்றாத் தன்மைக்கண்

நெடிலடியும் சில வரும்

என்றுகொள்க.

இச்சூத்திரத்தால் வெண்பாவிற் குரியதோர் தளை உணர்த்தினாராம். சிந்தடியாவது எழெழுத்து முதல் ஒன்பதெழுத்தீறாகிய அடி. அளவடியாவது பத்தெழுத்து முதலாகப் பதினான்கெழுத்தீறாகிய அடி. தளை வகை ஒன்றாமையாவது நிலைமொழியும் வருமொழியும் ஆகிய இயற்சீர் நேராயொன்றுவதும் நிரையாயொன்றுவதுமன்றி மாறுபடவருவது. அவ்வழி நிரையீற் றியற்சீர் நிற்ப நேர்வரினும் நேரீற் றியற்சீர் நிற்ப நிரைவரினும் இயற்சீர் வெண்டளையாம். இனி ஒன்றாத் தன்மையாவது வெண்சீர் நிற்க வருஞ்சீர் முத

(பி-ம்)—1. சீரியை. 2. தளையல். 3. பொருந்தப்பெறக். 4. பெறு. 5. வெனக்கொள்க.

பொருளதிகாரம்

வசையோ டொன்றுவது வெண்டளையாம். இவ்விரண்டும் வெண்பாவிற்குத் தளையா மென்று கொள்க.

உதாரணம்:—

'மட்டுத்தா ழுண்டு மணஞ்சேர்த்து விட்டுக்
களியானைக் கொண்டோ வென்றா னரியார்முன்

யாரோ

வெதிர்நிற் பவர்' [யாப். வி. பக். சாகசு]

இஃது எழெழுத்தான் வந்த

அடி.

'இன்றுகொ

லன்றுகொ லென்றுகொ லென்னாது'

[நாலடி - ௩௬]

இஃது எட்டெழுத்தான்

வந்த அடி.

'சென்று

முகந்து நுதல்சுட்டி மாறோர்த்து

வென்று

வியர்த்தா னென்கோ' [யாப். வி. பக். ௩௱௯௩]

இஃது ஒன்பதெழுத்தான் வந்த அடி.

'துப்பார்க்குத் துப்பாய துப்பாக்கித் துப்பார்க்கு' [குறள் - ௧௨]

இது பத்தெழுத்தான் வந்த அடி.

'ஏரி னுழாஅ ருழவர் புயலென்னும்' [குறள் - ௧௪]

இது பதினொரெழுத்தான்

வந்த அடி.

'மலர்மிசை
யேகினான் மாணடி சேர்ந்தார்' [குறள் -
ங]

இது
பன்னிரண்டெழுத்தான் வந்த அடி.

'இருள்சே
ரிருவினையுஞ் சேரா விறைவன்' [குறள் -
ரு].

இது
பதின்மூன்றெழுத்தான் வந்த அடி.

'கற்றதனா லாய
பயனென்கொல் வாலறிவன்' [குறள் - உ]

இது பதினான்கெழுத்தான் வந்த அடி.

‘முகமறியார் மூதுணர்ந்தார் முன்னையிற்றார் காமம்
அகமறைந்தான் வாழுமென் றார—[மகமறையா
மன்னே நீ வார்குழை வையெயிற்றா யென்றேமற்
றென்னையும் வாழுமெனின்’] [யாப். வி. பக். ௪௱௩௬]

இது பதினைந்தெழுத்தான் வந்த அடி.

‘படியுடையார் பற்றமைந்தக் கண்ணு மடியுடையார்.’ [குறள் - ௬௱௬]

இது பதினாறெழுத்தான் வந்த அடி.

வந்த அடி. இவையிரண்டும் நெடிலடி.

(௫௫)

௩௱௯௫. அளவடி மிகுதி யுளப்படத் தோன்றி
இருநெடி லடியுங் கலியிற் குரிய.

என்-னின், இது கலிப்பாவிற்கு அடியாமாறு உணர்த்துதல் நுதலிற்று.

அளவடியின் மிக்க பதின்மூன்றெழுத்து முதலாக நெடிலடியும் கழிநெடிலடியு மாகிய இருபதெழுத்தின் காறும் வரும் அடி கலிப்பாவிற்கு அடியாம் என்றவாறு.

இவ்விலக்கணம் கலித்தளை வருமிடத்தே கொள்க. [1]கலியடியென்றது கலித்தளையடி என்றதுஉம் இவ்வேறுபாடு குறித்தென்க.

'மரல்சாய் [3]மலைவெம்ப மந்தி யுயங்க' [கலித் - ௰௩]

இது பதின்மூன்றெழுத்தான் வந்தது.

'வீங்குநீ ரவிழ்நீலம் பகர்பவர் [3]வயற்கொண்ட' [கலித் - ௬௯]

இது பதினான்கெழுத்தான் வந்த அடி.

'அடிதாங்கு மளவின்றி யழலன்ன வெம்மையாற்' [கலித் - ௰௧]

இது பதினைந்தெழுத்தான் வந்த அடி.

'அரிதாய வறனெய்தி யருளியோர்க் களித்தலும்' [கலித் - ௰௧]

இது பதினாறெழுத்தான் வந்த அடி.

'முதிர்கோங்கின் முகையென முகஞ்செய்த குரும்பையென'

[கலித் - ௫௬]

இது பதினேழெழுத்தான் வந்த அடி.

'[4]அறனின்றி விசையொழியா னலங்கொண்டு டகறினையான்'

[யாப். வி. பக். ௪௩௬]

இது பதினெட்டெழுத்தான் வந்த அடி.

'உருபனிகண் ணுறைப்பவுநீ யொழிபொல்லாய் செலவலித்தல்'

[யாப். வி. பக். ௪௩௬]

இது பத்தொன்பதெழுத்தான் வந்த அடி.

'நிலங்கிளையா
நெடிதுயரா நிறைதளரா
நிரைதொடியாள்'

[யாப். வி. பக். ௪௬௮]

இஃது இருபதெழுத்தான்
வந்த அடி.

(௫௬)

௩௪௬. நிரைமுதல்
வெண்சீர் வந்துநிரை தட்டல்
வரைநிலை யின்றே
பவ்வடிக் கென்ப.

என் -னின், கலித்தளையாமாறு
உணர்த்துதல் நுதலிற்று.

மேற்சொல்லப்பட்ட அடி கலித்தளை தட்டவழியே கொள்ளப்படுவது என உணர்த்தியவாறும். வெண்பாவுரிச்சீர் நிற்ப நிரைமுதல் வெண்சீர்வந்து அதன்கண் நிரையாய்த் தளைத்தல் கலியடிக்கு வரைநிலை யில்லை என்றவாறு.

'நிரைதட்டல்' என்றதனால் பிறிதாகிவருஞ் சீர், முதலாகிய பினுங் கலித்தளையாம் என்று கொள்க.

நிரையோடு தளைப்

நிரைமுதல் வெண்சீர் என்பது உய்த்துணர்த்து கொள்ளப்பட்டது. உதாரணம் மேற்காட்டிய அடிகளுட் காண்க.

(௫௭)

௩௱௬௭. [6]விராஅப தளையு

மொரூஉநிலை யிலவே.

என்-னின், இதுவுங் கலியடிக் குரியதோர் தளை உணர்த்துதல் நுதலிற்று.

---

(பி-ம்)—1. கலித்தளை. 2. மரம்வெம்ப. 3. வயிற்ப்காண்ட 4. அன்றின்றி யிசை யொளியான வலங்கொண்டது நிலையாய். 5. யளவடிக். 6. விராய்நிலை.



[1]பிறவாகி விரவிய தளையும்

நீக்குதலில்லை என்றவாறு.

அஃதாவது வெண்டளையும்

ஆசிரியத்தளையும் விரவுதல்.

'இமையவில் வாங்கிய வீர்ஞ்சடை யந்தண

னுமையமர்ந் துயர்மலை யிருந்தன னாக
மையிரு தலையி
னரக்கர் கோமான்' [கலித் - ௩௮]

2இதன்கண் முந்துற்ற இரண்டுசீரும் வெண்சீர்வெண்டளை (?); இரண்டாஞ்சீரொ டுமூன்றாஞ்சீர் இயற்சீர் வெண்டளை; நாலாஞ்சீரொடு மற்றையடிமுதற்சீர் நிரையொன்று

ஆசிரியத்தளை; 'அரக்கர் கோமான்'
3நேரொன்றாசிரியத்தளை. அஃதேல்,
நேரீற்றியற்சீர் கலிக்கண் வரப்பெறா
தென்றதென்னை? ஈண்டுக் கோமான்
வந்ததால் எனின், 4அவ்விலக்கணங்
கலித்தளையான் வரும் அடிக்கென்க.
சிறுபான்மை வஞ்சித்தளை
வருதலுங்கொள்க.

௩௱௩௮.

இயற்சீர் வெள்ளடி யாசிரிய மருங்கி
(௫௮)

னிலைக்குரி மரபி 5னிற்பவு முளவே.

என்-னின், இஃது

ஆசிரியப்பாவின்கண் வெண்பாவடி

மயங்குமாறு உணர்த்துதல்

நுதலிற்று.

இயற்சீர்வெண்டளையான் ஆகிய

வெண்பாவடி ஆசிரியப்பாவின்கண்

நிற்றற்குரிய

மரபினான் நிற்பனவுமுள என்றவாறு.

'உள' என்றதனாற் பலவடியும் வரப்பெறு மென்று கொள்க. வெண்டளை என்னாது 'அடி' என்றதனால், தளைவிரவுதல் பெரும்பான்மை அடிவிரவுதல் சிறுபான்மை

என்றுகொள்க.

உதாரணம்:—

'நெடுங்கயிறு

வலந்த' என்னும் பாட்டினுள்,

'கடல்பா
டொழிய வினமீன் முகந்து' [அகம் - ௩௰]

என்றது இயற்சீர்
வெண்டளை யடி. பிறவு மன்ன.
(௫௯)

௩௱௬௯. வெண்டளை
விரவியு மாசிரியம் விரவியு
மைஞ்சீ ரடியு முளவென மொழிப.

என்-னின், இதுவும் ஆசிரியப்பாவிற் குரியதோர் மரபு உணர்த்துதல் நுதலிற்று.

இயற்சீர் வெண்டளை விரவியும் ஆசிரியத்தளை விரவியும் ஐஞ்சீரடியும் ஆசிரியப்பாவின்கண் வருவன உள என்றவாறு.

'உண்டு' என்னாது 'உள' என்றதனான் ஒருபாட்டிற் பல வருதலுங்கொள்க. ஆசிரியமென்பது அதிகாரத்தான் வந்தது. உதாரணம் முன்னர்க்காட்டுதும். (௬௰)

௩௱எ௰.

அறுசீ ரடியே யாசிரியத் தளையொடு
நெறிபெற்று வரூஉ நேரடி முன்னே.

என்-னின், இதுவுமது.

(பி-ம்)—1. பிறவாகிய. 2. என்பதின். 3. நேரொன்றாசிரியத்தளை வந்தவாறு காண்க. 4. அவ்விலக்கணங்களைத்தன்மையான். 5. னிற்கவும் பெறுமே. 6. டழிய.

௩௱௭

தொல்காப்பியம் - இளம்பூரணம்

அறுசீரடி யாசிரியத்தளையொடு பொருந்தி நடைபெற்று வரூஉம்; நேரடிக்கு முன்னாக ஆசிரியப்பாவின்கண் என்றவாறு.

ஆசிரியப்பா என்பது அதிகாரத்தான் வந்தது.

'சிறியகட் பெறினே யெமக்கீயு மன்னே
பெரியகட் பெறினே யாம்பாடத் தான்மகிழ்ந் துண்ணு மன்னே'
[புறம் - ௨௩௫]

என்பதன்கண் முதலடி நாற்சீரான் வந்தது; இரண்டாமடி ஆசிரியத்தளையொடு பொருந்தி யறுசீரடியாகி வந்தது.

'பொருந்தி' என்றதனான் அத்தளை சில வருதல்கொள்க. ஏனையவை புணருஞ்சீரான் வந்தன. (௧௧)

௩௱௭௧. எழுசீ ரடியே முடுகிய னடக்கும்.

என்-னின், எழுசீரடிக்குரியதோர் மரபு உணர்த்துதல் நுதலிற்று.

4171531 எழுசீரான் வரும் முடுகியலடி என்றவாறு.

உதாரணம் முன்னர்க் காட்டுதும்.

௩௭௨. முடுகியல் வரையார் [1]முதலிரண் டடிக்கும்.

(௬௨)

என்-னின், எய்தியதன்மேற் சிறப்புவிதி உணர்த்துதல் நுதலிற்று.

மேற்சொல்லப்பட்ட ஐஞ் சீரடிக்கும் அறுசீரடிக்கும் முடுகியல் நீக்கப்படாதென்றவாறு.

உதாரணம் முன்னர்க் காட்டுதும்.

(௬௩)

௩௭௩. ஆசிரிய மருங்கினும் வெண்பா மருங்கினு

மூவகை யடியு முன்னு தலவே.

என்-னின், எய்தியது

விலக்குதல் நுதலிற்று.

2முடுகியலாகி வரு மூவகை

யடியும் ஆசிரியப்பாவினும்

வெண்பாவினும் நிற்றல்

இல என்றவாறு.

எனவே 3கலிப்பாவினுள்

நிற்கப்பெறும் என்றவாறாயிற்று.

உதாரணம்

முன்னர்க் காட்டுதும்.

'நாற்சீர் கொண்டதடி' என வோதிப் பின்னும் இருசீரடி வஞ்சிக்கண் உரித்தென ஓதி ஐஞ்சீரடியும் அறுசீரடியும் எழுசீரடியும் உள என ஓதினமையான், [4]அடியாவது இரண்டு முதலாக வருமெனவும் அவற்றுள் இருசீரடி குறளடி எனவும் முச்சீரடி சிந்தடி எனவும் நாற்சீரடி அளவடி எனவும் ஐஞ்சீரடி நெடிலடி எனவும் [5]அறுசீர் முதலாக வரும் அடியெல்லாங் கழிநெடிலடியா மெனவும் பிறநூலாசிரியர் கூறிய இலக்கணமும் இவ்வாசிரியர்க்கு உடம்பாடென்று கொள்க. [6]அறுசீர் முதலாய [7]அடிகளுள் [8]எழுசீர் எண்சீர் சிறப்

(பி-ம்)—1. முதலீரடிக்கும். 2. முடுகியலாகிய. 3. கலிப்பாவினறியப் பெறுமயிற்று. 4. அடியாவதற்கு முடுகியல் நீக்கப்படா தென்றவாறு. எனவே கலிப்பாவிற்கு அடியாவது இரண்டசை. 5. அறுசீரடி. 6. அறுசீரடி. 7. அடிகளின. 8. எண்சீரிறுதி சிறப்புடைத் தெனவும்.

[illegible]



புடையன எனவும் எண்சீரின் மிக்கன சிறப்பில்லன எனவும் அவ்வாசிரிய ருரைப்ப. இவ்வாசிரியரும் அடிக்குச் சீர் வரையறையின்மை 'ஆங்கனம் [1]விரிப்ப வளவிறந் தனவே, பாங்குற வுணர்ந்தோர் பன்னுங் காலை' [செய்யுளியல் - சுக] என்றதனான் உணர்த்தினார் என்றுகொள்க. ஈண்டு நாற்சீரடியை எடுத்தோதியது வெண்பாவும் ஆசிரியப்பாவுங் கலிப்பாவும் அவ்வடியினால் வருதலின் என்று கொள்க, (சு௪)

ஈற்றய லடியே யாசிரிய மருங்கிற்
றோற்ற முச்சீர்த் தாகு மென்ப.

என்-னின், [2]இதுவும்

ஆசிரியப்பாவிற் குரியதோர் வேறுபாடு

உணர்த்துதல் நுதலிற்று.

ஆசிரியப்பாவின் ஈற்றயலடி

தோன்றுமிடத்து [3]முச்சீர்த்தாகவும்

பெறும் என்றவாறு.

உதாரணம்:—

'முதுக்குறைந்

தனளே முதுக்குறைந் தனளே

மலைய

னொள்வேற் கண்ணி

முலையும் வாரா முதுக்குறைந் தனளே'

இதனுள் ஈற்றயலடி முச்சீரான் [4]வந்தது.

௩௱௭௫. இடையும் வரையார் தொடையுணர்ந் தோரே.

(௬௫)

என்-னின், இதுவுமது.

மேற்சொல்லப்பட்ட முச்சீரடி ஆசிரியப் [5]பாவினுள் இடையும் வரப்பெறும் என்ற

வாறு.

'நீரின் றண்மையுந் தீயின் வெம்மையுஞ்

சாரச் சார்ந்து

தீரத் தீருஞ்

சார ஞடன்

கேண்மை

சாரச் சாரச் சார்ந்து

தீரத் தீரத் தீர்பொல் லோவே.'

இதனுள் மூன்றாமடியும்

நான்காமடியும் முச்சீரான் வந்தவாறு

கண்டுகொள்க. (சுசு)

கூஎசு. முச்சீர் முரற்கையு

ணிறையவு நிற்கும். கலிப்பா

இ- என்-னின், கலிப்பாவிற்கு ஈற்றுவேறுபாடு உணர்த்துதல் நுதலிற்று.

ஈற்றயலடி

முச்சீரெனவோதப்பட்டது

கலிப்பாவின்கண் நாற்சீர் ஆகியும் வரும்

என்றவாறு.

இச்சூத்திரம் ஏனதிரது நோக்கிக் கூறப்பட்டது: 'எழுசீ ரிறுதி யாசிரியக் கலியே' [செய்யுளியல் - ௭௨] என ஓதுகின்றாராதலின்.

(பி-ம்)—1. உரைப்பினளவிறு. 2. இதுவுமது. 3. முச்சீர்த்தாகும் என்றவாறு. 4. வந்தவாறு கண்டுகொள்க. 5. பாவினிடையடியும். 6. லாதே. 7. வரப்பெறும். 8. எதிர் நோக்கிக்.

# தொல்காப்பியம் - இளம்பூரணம்

உதாரணம்—

'அரிமா னிடித்தன்ன' என்னும் 1பாலைக்கலியுள், சுரிதகம்

'முளைநிரை 2முறுவ லாயத்து ளொடுத்தாய்ந்த
விளைமையுந் தருவதோ விறந்த பின்னே' [கலித் - ௰௫]

என ஈற்றயலடி காற்சீரான் 3வந்தது. (௬௭)

௬௭௭. வஞ்சித் தூக்கே செந்தூக் கியற்றே.

என்-னின், வஞ்சிப்பாவிற்கு ஈறு உணர்த்துதல் நுதலிற்று.

வஞ்சிப்பாவி னிறுதி ஆசிரியப்பாவின் இயல்பிற்று என்றவாறு.

தூக்கெனினும் இறுதியெனினும் ஒக்கும். செந்தூக்கெனினும் ஆசிரிய வீறு எனினும் ஒக்கும். 'செந்தூக் கியற்று' என்றமையால் ஈற்றயலடி முச்சீரான் வருதலும் நாற்சீரான் வருதலுங் கொள்க.

உதாரணம்:—

'தொடியுடைய தோண்மணந்தனன்' என்னும் பாட்டினுள்,

'இடுக வொன்றோ சுடுக வொன்றோ
படுவழிப் படுகவிப் புகழ்வெய்யோன் றலையே' [புறம் - உங்க]

இதனுள் ஈற்றயலடி நாற்சீரான் வந்தது.

'பூந்தாமரைப் போதலமர'

என்னும் பாட்டுள்,

'மகிழு மகிழ்துஞ் சூரன்
புகழ்த லானாப் பெருவண் மையனே' [யாப். வி. பக். எச]

இதனுள் ஈற்றயலடி முச்சீரான்

வந்தது.

(சுஅ)

ஙாஎஅ. வெண்பா வீற்றடி

முச்சீர்த் தாகும்

5 அசைச்சீர்த் தாகு

மவ்வழி யான.

என்-னின், வெண்பாவிற்கு இறுதியடியும் இறுதிச்சீரும் உணர்த்துதல்நுதலிற்று.

வெண்பாவினீற்றடி

மூன்றுசீரையுடைத்தாகும்: அதன்கண் இறுதிச்சீர் அசைச்சீரான்வரும் என்றவாறு.

6உதாரணம் முன்னர்க்காட்டுதும்.
(௬௧)

---

(பி-ம்)—1. கொச்சகக் கலியினுள். 2. முறுவலராயத்து. 3. வந்தவாறு கண்டு கொள்க. 4. வொன்றே. 5.

அசைச்சீராகு மவ்வயினுனை. 6.

இதன்முன்னர் ஒரு பிரதியிற் பின்வருமாறு காணப்படுகிறது:

" 'பாசடை வெண்பாட் டவரே வடிய

ானி.சிற்

சமநிலை வெண்பாட் டெனப்பெயர்

பெறுமே'

என்பாரும் உளராலே

தென்பவாறு வந்தவழிக்காண்க"

பொருளதிகாரம்.

செய்யுளியல்

௩௱அகம

௩௱எசு.

# நேரீற் றியற்சீர் நிரைய நிரைபுஞ்
# சீரேற் றிறூஉ மியற்கைய வென்ப.

என்-னின், மேலதற்கோர் புறனடை உணர்த்துதல் நுதலிற்று.

வெண்பாவி னிறுதிச்சீரின் அயற்சீர் நேரீற் றியற்சீராயின் நிரையசையும் நிரைபு அசையுஞ் சீராந்தன்மையைப் [1]பெற்று முடியும் இயற்கையை யுடைய என்றவாறு.

உதாரணம்;—

'கோளில் பொறியிற் குணமிலவே யெண்குணத்தான்
றாளை வணங்காத் தலை.' [குறள் - க]

'தனக்குவமை யில்லாதான் றாள் சேர்ந்தார்க் கல்லால்
மனக்கவலை மாற்ற லரிது.' [குறள் - எ]

என வரும்.

ஙாஅம. நிரையவ ணிற்பி னேரு
னேர்பும்

வரைவின் றென்ப

வாய்மொழிப் புலவர்.

என்-னின், இதுவு மது.

வெண்பாவி னீற்றயற் சீர்
நிரையீற் றியற்சீராயின் நேரசையும்
நேர்பசையும் முடி

பாம் என்றவா று.

உதாரணம்:—

'பாலொடு

தேன்கலந் தற்றே 2பணிமொழி

வாலெயி றாறிய

நீர்.' [குறள் - ௲௨௧] ...

'நன்றி மறப்பது நன்றன்று

3நன்றல்ல

தன்றே மறப்பது

நன்று.' [குறள் - ௱௮] ...

என வரும்.

'வெண்சீ ரீற்றசை நிரையசை யியற்றே'

[செய்யுளியல் - ௨௮]

என்பதனான் ஈற்றயற்சீர் முதலசையான் வரினும் நேரும் நேர்பும் முடிபாகக் 4கொள்ளப்படும்.

உதாரணம:—

'பிறவிப் பெருங்கட

லீந்துவர் ீந்தா

ரிறைவனடி சேரா

தார்.' [குறள் - ய]

'இருள்சே ரிருவினையுஞ் சேரா விறைவன்
பொருள்சேர் புகழ்புரிந்தார் மாட்டு.' [குறள் - ரு]

என வரும்.

(எக) ரூஅக.

ணெழுசீ ரிறுதி :பா சிரியங் கலியே.

என்-னின், கலிப்பாவிற்கு முடிபுணர்த்துதல் நுதலிற்று.

(பி-ம்)—1. பெறுமுடிபாகும். 2. பனிமொழி. 3. கன்றல்லா. 4. கொள்ளப்படு

# பென்றவாறு. 5. முச்சீ.

தொல்காப்பியம் - இளம்பூரணம்

கூஅஉ

1கலிப்பாவிற்கு ஈற்றயலடி முச்சீரான்வரும் ஆசிரியமுடிபாகும் என்றவாறு.

உதாரணம்:—

'தொடக்கர்கட் டோன்றிய' என்னும் கலியுள், சுரிதகம்

'தொல்கவின் றொலைத லஞ்சியென்
சொல்வரைத் தங்கினர் காத லோரே' [கலித் - உ]

என வந்தது. ஈற்றயலடி காற்சீரான் வருமென்பது மேற்கூறப்பட்டது. (எஉ)

நூஅஉ. வெண்பா வியலினும் பண்புற முடியும்.

என்-னின், கலிப்பா வெண்பாச்சுரிதகமாகி முடியும் என்றவாறு.

உதாரணம்:—

'அறனின்றி யயறாற்றும்' என்னும் கலியுள், சுரிதகம்

'யாரிற்கூறவு மெமகொள்ளா யாயினை
யானு திவன்போ லருள்வர் தலைவ காட்டி
மேனின்று மெய்கூறுங் கேளிர்போ னீசெல்லுங்
கானர் தகைப்ப செலவு' [கலித் - நு]

என வெண்பாவினியலான்
இற்றவாறு காண்க.

இத்துணையும் அடியிலக்கணம்.
(௭௩)

௩௱௮௩.

எழுத்து முதலா வீண்டிய வடியிற்
குறித்த பொருளை முடிய நாட்டல்
யாப்பென மொழிப
யாப்பறி புலவர்.

என்-னின், யாப்பாமாறு உணர்த்துதல் நுதலிற்று.

எழுத்து முதலாக அசை சீர் அடி என ஈண்டோதப்பட்ட அடியினுற் ருன் குறித்தபொருளை யிறுதியடியளவு முற்றுப்பெற நிறுத்துதல் யாப்பென்று சொல்லுவர்

புலவர் என்றவாறு.

இது சொல்லவேண்டிய தென்
ளை? செய்யுட்பாடுவார்க்கு
இயல்பன்றோ எனின்,
ஈண்டுச் [4]செய்யுளு றுப்புள்
ஓதுகின்றாராதலின்
யாதானுமொருபொருட்கட்பல சொற்
[5]றொடுத்து வழங்குங்கால்
குறித்தபொருளை முடிக்கவேண்டுஞ்
[6]சொல்லே சேர்த்துக்
கூறல் வேண்டும் எனவும் அது
மிகாமற்குறையாமற் கூறல்வேண்டும்
எனவும் இலக்க
ணங் கூறல் வேண்டும் என்க.
அதன்வகை முன்னர்க் காட்டுதும்.

நாஅச. பாட்டுரை நூலே

வாய்மொழி பிசியே

'யங்கத முதுசொ

லவ்வேழ் நிலத்தும்

வண்புகழ் மூவர் தண்பொழில் வரைப்பி

னாற்பெ ரெல்லை யகத்தவர் வழங்கும்

யாப்பின் [7]வழிய [8]தென்மனார் புலவர்.

---

(பி-ம்)—1. கலிப்பாவின். 2. மாலி முடியவும் பெறும். 3. ஈட்டப்பட்ட. 4. செய்யுளுறுப் போத்துள். 5. ரெுடேப்பது. 6. சொல்லொடு சேர்த்துக். 7. என்ற. 8. வென்மனுர்.

## பொருளதிகாரம் -

### செய்யுளியல்

நாஅக

என்-னின், [1]இதுவும்

அதன்பகுதி யுணர்த்துதல் நுதலிற்று.

இதன்பொருள்:—பாட்டுமுதலாக முதுசொல்லீறாகச் சொல்லப்பட்ட எழுநிலத்தினும், வளவிய புகழையுடைய சேரன் பாண்டியன் சோழன் என்னும் மூவரது தமிழ்நாட்டகத்தவர் வழங்கும் [2]தொடர்மொழிக்கண் வரும் மொழி யாப்பாவது என்றவாறு.

எனவே யாப்பாவது:—பாட்டியாப்பு, உரையாப்பு, நூலியாப்பு, மொழியாப்பு, பிசியாப்பு, அங்கதயாப்பு, பழமொழியாப்பு என எழுவகைப்படும். மேலைச் சூத்திரத்துள்,

'குறித்த பொருளை முடிய நாட்டல்'

என்றமையானும், இச்சூத்திரத்துள்

'நாற்பேரெல்லை யகத்தவர் வழங்கும் யாப்பின் [3]வழியது'

என்று ஓதினமையானும், குறித்தபொருள் முடியுமாறு சொற்றொடுத்தல் என்று கொள்ளப்படும்.

உதாரணம்:—

'தாமரை புரையுங் காமர் சேவடி[ப்]
பவளத் தன்ன மேனி[த்] திகழொளிக்
குன்றி யேய்க்கு
முடுக்கைக் குன்றி
னெஞ்சுபக
வெறிந்த வஞ்சுடர் நெடுவேற்

சேவலங் கொடியோன் காப்ப

வேம வைக

லெய்தின்று லுலகே.' [குறுந் -
கடவுள்வாழ்த்து]

இதனுட் குறித்தபொருள்
முருகவேள் காப்ப உலகங்
காவலர்பட்டது என்னும் பொருள்.
இதனை முடித்தற் பொருட்டு
எழுத்துமுதலாகிவந்து ஈண்டிய
அடிகளெல்லா
வற்றானும் நாட்டியவாறு
கண்டுகொள்க.

(எரு)

நூஅறு. மரபே தானும்
நாற்சொல்

லியலான் யாப்புவழிப் பட்டன்று.

என்-னின், மரபு ஆமாறு உணர்த்துதல் நுதலிற்று.

மரபாவதுதான் இயற்சொல் திரிசொல் திசைச்சொல் வடசொல் [6]என்னும் நாற் சொல்லின் இயற்கையானே யாப்பின் வழிப்பட்டது என்றவாறு.

குறித்த [7]ஒருபொருளை முடியச் சொற்றொடுக்குங்கால் இயற்சொல்லாகிய பெயர் வினையிடையுரியானும், ஏனைத் திரிசொல் திசைச்சொல் வடசொல்லானும், [8]எழுவகை வழுவும் படாமற் புணர்ப்பது என்றவாறும்.

அவற்றுள் இயற்சொல் மரபாவது சொல்லதிகார விலக்கணத்தோடு பொருந்துதல்.

திரிசொல் மரபாவது தமிழ்நாட்டகத்தும் பலவகை நாட்டினும் தத்தமக்குரித்தாக வழங்கும் மரபு.

(பி-ம்)—1. மேற் சொல்லப்பட்ட யாப்புப்பாகுபமோரும் அதன் இயல்பும் உணர்த் துதல் நுதலிற்று. 2. தொடர்வழிக்கண். 3. மொழியது. 4. காக்கப்பட்டது. 5. அடிகள் பலவாற்றானும். 6. என்றனைத்தே செய்யுள் என்றமையின். 7. பொருண்மேற்றச். 8. எழுவகையானும் எழுவகை வழுப்படாமற்.

௩௱அ௯

# தொல்காப்பியம் - இளம்பூரணம்

வடசொன்மரபாவது,[1] திரிந்தவகையாகிய சொன்மரபு.
யாதானும் ஒருசெய்யுட்செய்யுங் காலத்துப் பொருளுணர்த்துஞ் சொற்கள் இசைபாதலின் இவை ஒருபொருட்குரித்தாகிய ஆண்பெயரும் பெண்பெயரும் குழவிப் பெயரும் முதலாயின பிறபொருட்கண் வாராமையான் அவற்றை அவ்வம்மரபினுற் கூறுதலும் ஒருமைபன்மை மயங்காமையும் பெயரும் வினையு முடிவுபெறக் [2]கூறுதலு வேண்டுதலின் [3]இவ்விலக்கணமுங் கூறல் வேண்டிற்று. (எக

௩௱அ௰. அகவ லென்ப தாசிரி யம்மே.

என்-னின், [4]இது தூக்காமாறு உணர்த்துவார் அவற்றுள் ஆசிரியத்திற்குரிய ஓசை உணர்த்துதல் நுதலிற்று.

அகவல் என்னும் ஓசை ஆசிரியத்திற் கென்றவாறு.
தூக்கெனினும் ஓசையெனினுமொக்கும். அகவல் என்பது ஆசிரியன் இட்டதோர்

குறி. அதுவருமாறு:

'செங்களம் படக்கொன் றவுணர்த் தேய்த்த
செங்கோ லம்பின் செங்கோட் டியானை

கழறொடிச் சேய குன்றம்
குருதிப் பூவின் குலைகாந் தட்டே.' [குறுந் - க]

இதனுள் எழுத்தளவு மிகாமற் குறையாமல் [5]உச்சரிக்க அவ்வழி [6]நின்ற ஓசையால் ஆசிரியம் வந்தவாறு [7]காண்க. (எஎ)

ருாஅஎ. [8]அஃதன் றென்ப வெண்பா யாப்பே.

என்-னின், வெண்பாவிற் குரிய ஓசை யுணர்த்துதல் நுதலிற்று.

வெண்பாவாக

[யாக்க]ப்பட்டது அகவலோசை யன்று

என்றவாறு.

எனவே அகவுதலில்லாத ஓசையாம். இதனைப் பிறநூலாசிரியர் செப்பலோசை என்ப. அகவுதல் என்பது ஒரு தொழில். அத்தொழில் இதன்கண் இல்லாமையின் 'அஃ

தன்று' என்றார்.

உதாரணம்:—

'பொன்னார

மார்பிற் புனைகழற்காற் கிள்ளிபே

ருன்னேனென் றாழுலக்கை பற்றினேற்—கன்னோ
மனனோடு வாயெல்லாம் மல்குநீர்க் கோழிப்

புனலூடன் பேரே வரும்.'

இது மேற்சொல்லப்பட்டதுபோல இசை குறித்து வருதலின்றிச் [9]வாக்கியம் போன்ற ஓசைத்தாகி வந்தவாறு [10]காண்க.

செப்புதலாகிய

(எஅ)

௩அஅ. துள்ள லோசை

கலியென மொழிப.

என்-னின், கலிப்பாவிற்கு

ஓசையாமாறு உணர்த்துதல்

நுதலிற்று.

(பி-ம்)—1. நீர்த்தவகையாகிய. 2. கூறல். 3. அவ்வியல்பு 4. இனித்தூக்காமாற உணர்த்துவாராய். 5. உச்சரிக்கப்பட்டது. 6. நின்றதோர். 7. கண்டுகொள்க. 8. அஃதான். 9. வாச்சியம் போன்றநிவோசைத்தாக்கி. 10. கண்டுகொள்க.

## பொருளதிகாரம்

- செய்யுளியல் ௩௱௮௫

துள்ளலோசை

கலிப்பாவிற்காம் என்றவாறு.

துள்ளுதலாவது ஒழுகுநடைத்தன்றி இடையிடை யுயர்ந்து வருதல்; கன்றுளிற்றென்றாற் போலக் கொள்க.

துள்

உதாரணம்:—

'அரிதாய வறனெய்தி யருளியோர்க் களித்தலும்
பெரிதாய பகைவென்று பேணாரைத் தெறுதலும்
புரிவமர் காதலிற் புணர்ச்சியுந் தருமெனப்
பிரிவெண்ணிப் பொருள்வயிற் சென்றநங் காதலர்
வருவர்கொல் வயங்கிழாஅய் வலிப்பல்யான் கேளினி' [கலித் - ௰௧]

என்றவழி 'அரிதாயவறன்'
எனநின்றவழிச் செப்பலோசைத்தாகிய வெண்சீர்ப்
பின்னும் வெண்டளைக்கேற்ற சொல்லொடு வந்தமையால் துள்ளலோசை யாயிற்று.
புணராது ஆண்டெழுந்த ஓசை

1 துள்ளி

(௭௧)

ıh.ıı அசூ. தூங்கலோசை வஞ்சி யாகும்.

என்-னின், வஞ்சிப்பாவிற்குரிய ஓசை உணர்த்துதல் நுதலிற்று.

தூங்கலாவது 2அறுதியற்ற ஓசைத்தாகிவரும் வஞ்சி என்றவாறு.

'சுறமறிவன

துறையெல்லா

மிறவீன்பன வில்லெல்லா

மீன்றிரிவன

கிடங்கெல்லாந்

தேன்றூழ்வன

பொழிலெல்லாம், எனத்

தண்பணை தழீஇய விருக்கை
மண்கெழு நெடுமதின் மன்ன னூரே.' [யாப். வி. பக். கங]

இதனுட் சீர்தோறும் ஓசை [3]யற்றவாறு கண்டுகொள்க.

(அய)

ஙாசுய. மருட்பா வேனை யிருசா ரல்லது
தானிது வென்னுந் [4]தன்மை யின்றே.

என்-னின், மருட்பாவிற்கு ஓசை இதுவென உணர்த்துதல் நுதலிற்று.

மருட்பாவிற்கு ஓசை இது வென்னுந் தன்மை இல்லை; அதற்கு வெண்பாவும் ஆசிரியப்பாவும் உறுப்பாக, இவ்விரண்டின் ஓசையே அதற்கு ஓசை என்றவாறு.

'திருநுதல் வேரரும்புத் தேங்கோதை வாடு
மிருநிலனுஞ் சேவடி யெய்து - மரிபரந்த
போகித மூண்க ணிமைக்கு
மாகு மற்றிவ ளகலிடத் தணங்கே.' [பு. வெ. கைக்கிளை - ௩]

(அக)

[5]என்பதனுட் கண்டுகொள்க.

## ௩ாககக.

# அவ்வியல் பல்லது [6]பாட்டாங்குக் கிளவார்.

என்-னின், பாக்கள் எல்லாவற்றிற்கும் உரியதோர் மரபு உணர்த்துதல்நுதலிற்று.

(பி-ம்)—1. துள்ளித்துள்ளி. 2. இறுதியற்ற. 3. யருதவாறு. 4. தனிநிலை. 5. என்

௩த். 6. பட்டாங்கு.

49



௩ாஅக

மேற் சொல்லப்பட்ட ஓசை வகையா னல்லது [1]பாட்டாங்குக் கூறார் என்றவாறு.

மேற் சொல்லப்பட்ட ஓசை வகையா னல்லது பாட்டாங்குக் கூறுதல் சீருந்தளையும் அடியும் படக்கூறுதல். [2]பாட்டாங்குக் கூறுதலாவது ஓசை ஒழித்துச் சீருந்தளையும் அடியுந்தொடையும் [4]பெறவந்த அவ்வாற்[3]படக்கூறதலால் பாட்டாங்கு ஆகாதென்பதூஉம் அடியுந்தொடையும் கூறியவாறும். அது வருதாயினும் நூலின்பாற்படுதல் உரையின் பாற்படுதல் என்பதூஉம் கூறியவாறும். அது வருதாயினும் நூலின்பாற்படுதல் உரையின் பாற்படுதல் என்பதூஉம்

மாறு:

'ஐவகை யடியும் விரிக்குங் காலை
மெய்வகை யமைந்த பதினேழ் நிலத்து
மெழுபது வகையின் வழுவில வாகி
யறுநூற் றிருபத் தைந்தா கும்மே.' [செய்யுளியல்-சஅ]

என்பது ஆசிரியப்பாவிற் குரிய இலக்கணமுடைத்தாயினும் ஓசை யின்மையான் ஆசிரியம் எனப்படாது நூலெனப்படும் என்றுகொள்க. (அஉ

௩௱௬௨. தூக்கியல் வகையே யாங்கென மொழிப.

என்-னின், ஐயமறுத்தலை உணர்த்துதல் நுதலிற்று.

மேல் [5]அதிகாரப்பட்ட தூக்கியலும் [6]வகை சொல்லப்பட்ட நாலுமே என்றவாறு.

எனவே இன்னும் உளவோ எனக்கருதற்க வென ஐயந்தீர்த்த வாறு. ஈண்டு ஓதப் பட்ட தூக்குச் செவிப்புலனாகலின் அதனானே ஓர்ந்துணர்ந்து பாகுபாடறிக. அ௱)

௩௱௬௩. மோனை யெதுகை முரணே யியைபென
நான்னெறி மரபின தொடைவகை யென்ப.

என்-னின், [7]தொடைப் பாகுபாடு உணர்த்துதல் நுதலிற்று.

மோனை எனவும் எதுகை யெனவும் முரணெனவும் இயைபெனவும் நான்குநெறிப் பட்ட மரபினையுடைய தொடையினது பாகுபாடு என்றவாறு.

உதாரணந் தத்தஞ் சிறப்புச்

சூத்திரங்களுட் காட்டுதும். (௮௪)

௩௱௪௰௪.

அளபெடை தலைப்பெய வைந்து மாகும்.

என்-னின், இதுவுமது.

அளபெடைத் தொடையோடே கூட ஐந்தென்று சொல்லவும்பெறும் என்றவாறு. (௮௫)

௩௱௪௰௫. பொழிப்பு மொரூஉஞ் செந்தொடை மரபு
[8]அமைந்தவை தெரியி
னவையுமா ருளவே.

என்-னின், இதுவுமது.

பொழிப்பெனவும் ஒரூஉ வெனவும் செந்தொடையாம் எனவும்

9அமைமர்த[னவ]ா ராயின் அவையுந்
10தொடைப்பாகுபாடாம் என்றவாறு. (௮௬)

௩௱௬௬. நிரனிறுத்

தமைத்தலு மிரட்டை யாப்பு
மொழிந்தவற் றியலான் முற்று
மென்ப.

(பி-ம்)—1. பட்டாக்குக். 2. பட்டாக்குக். 3. சொல்லுதலால். 4. பெற்றுவர்த். 5. அதிகரிக்கப்பட்ட. 6. அவ்வகை சொல்லப்பட்ட நால்வகையும் என்றவாறு. 7. தொடைகள் பாகுபமொறு. 8. மனமத்தன. 9. அமைத்து ஆராயின். 10. தொடைக்குப்பாகுபாடு.



என்-னின், இதுவுமது.

நிரலே நிறுத்தியமைத்துக் கோடலும்
வற்றான் [1]முடியவும் பெறும் என்றவாறு.

இரட்டைத்தொடையும் மேற்சொன்ன

நிரனிறைத்தொடையாவது பொருளைச்

சேரநிறுத்திப் பயனையுஞ் சேரநிறுத்துதல்.

இரட்டைத்தொடையாவது ஓரடிமுழுவதும் ஒரு சொல்லேவருதல்.
இத்துணையுங் கூறப்பட்டது அடிதொறும் வருவன ஐந்துதொடை எனவும் அடித்
தன் வருவன ஐந்து தொடை எனவும் அவ்வைந்தும் மூன்றாகி அடங்குமெனவும் கூறியவா
றும். (அஎ)

நூ கஎ. அடிதொறுந்
தலையெழுத் தொப்பது மோனை.
என்-னின், மோனை யாமாறு
உணர்த்துதல் நுதலிற்று.
அடிதோறும் தலையெழுத்து
ஒப்பது [2]மோனைத் தொடையாம்

என்றவாறு. அல்லதேல்

'அடியுள் ளனவே தளையொடு

தொடையே' [செய்யுளியல் • ௯௨] என

வோதி ஈண்டு மேவற்றை யடியினும் [3]

வருமென்றல் பொருந்தாதெனின் ஆண்டு

மற்றையடி' யில் வாராதென்று ரல்லர்;

அடியல்லாத உரைமுதலாயினவற்றில்

தளையொடு தொடை யில்லை என்பார்

'அடியுள்ளனவே தளையொடு தொடையே'

என்றார்.

'மாவும் புள்ளும்

[4]வதிவயிற் படர

மாநீர் விரிந்த

பூவுங் கூம்ப

மாலை தொடுத்த கோதையுங் கமழ

மாலை வந்த வாடையும்

மாயோய் நின்வயிற் புறத்திறுத் தற்றே.'

[யாப். வி. ப. ௱௫௰]

என வரும்.

(௮௮)

௫௱௬௮. அஃதொழித்

தொன்றி னெதுகை யாகும்.

என்-னின், எதுகை யாமாறு உணர்த்துதல் நுதலிற்று.

அடிதோறும்

முதலெழுத்தொன்றாமல்

இரண்டாமெழுத்து ஒன்றின் எதுகை

யாகும் என்றவாறு.

அஃதேல் முதலெழுத்து மொன்றி இரண்டாமெழுத்து மொன்றில் யாதாகு மெனின், முந்துற்ற மோனையாற் பெயரிட்டுவழங்கப் படும் என்க.

உதாரணம்:—

'அடிதாங்கு மளவின்றி யழலன்ன வெம்மையாற்
கடியவே 'காடென்றார் கனங்குழா யக்காட்டுள்
துடியடிக் கயந்தலை கலக்கிய சின்னீரைப்
பிடியூட்டிப் பின்னுண்ணுங் களிறெனவு முரைத்தனரே.' [கலித்-கக].
(அக)

என வரும்.

நாசுசு. ஆயிரு தொடைக்குங் கிளையெழுத் துரிய.

என்-னின், எய்தியதன்மேற் சிறப்புவிதி உணர்த்துதல் நுதலிற்று.

(பி-ம்)—1. எற்பவும். 2. ஒன்றிவரத்தொடுப்பது. 3. மற்றை. 4. பதியவிற். 5. பெறுமென்றவாறு. 6. கனங்குழாய் காடென்றாரக்காட்டுள். 7. வருத்தலை.

தொல்காப்பியம் - இளம்பூரணம்

கூாஅஅ

மோனைத் தொடைக்கும் எதுகைத்தொடைக்கும் எடுத்த வெழுத்தே வருதலன்றி வருக்க வெழுத்தும் உரிய என்றவாறு.

'பகலே, பல்பூங் கானத் தின்னிளை யோப்பியும்
பாசிலைக் குளவியொடு கூதளம் விரைஇய
பின்னுப்பிணி யவிழ்ந்த நன்னெடுங் கூந்தல்
பீர்க்கப் பெய்து தேம்படக் கருதி' [யாப். வி. ப. ௩௩]

என்பது வருக்கமோனை.

'ஆறறி யந்தணர்க் கருமறை பலபகர்ந்து
தேறுநீர்ச் சடைகரந்து திரிபுரந் தீமடுத்துக்
கூறாமற் குறித்ததன்மேற் செல்லுங் கடுங்கூளி
மாறுப்போர் மணிமிடற் றெண்கையாய் கேளினி'
[கலித் - கடவுள்வாழ்த்து]

என்பது வருக்கவெதுகை. பிறவுமன்ன.

சஎ. மொழியினும் பொருளினு முரணுதன் முரணே.

என்-னின், முரணுமாறு உணர்த்துதல் நுதலிற்று.

அடிதொறும் வந்த சொல்லினுனுதல் பொருளினுனுதல் மாறுபடத்தொடுப்பது அடிமுரண்டொடையாம் என்றவாறு.

சொன்முரணுவது சொல்லானன்றிப் பொருளான் மாறுபடாமை. பொருண்முரணுவது மாறுபாடுடைய பொருளைச் சொல்வது.

'இரும்பி னன்ன கருங்கோட்டுப் புன்னை
பொன்னி னன்ன நுண்டா துறைக்கும்' [யாப். வி. ப. ௪௬௯]

என்பது இரும்பும் பொன்னும் மாறுபாடுடைத்தாதலிற்பொருண்முரண் ஆயிற்று.

'சிறுகுடிப் பரதவர் மடமகள்
பெருமதர் மழைக்க ணு முடையாவா லணங்கே'

[யாப். வி. ப. ௩௪௯]

என்றவழிக் குடியுங் கண்ணு மாகாது சிறுமைபெருமை என்னும் சொல்லே மாறுகோடலிற் சொன்முரணாயிற்று. (௬௬)

சஅ. இறுவா யொப்பினஃ தியைபென மொழிப.

என்-னின், இயைபுத்தொடை

யாமாறு உணர்த்துதல் நுதலிற்று.

அடிதோறும் ஈற்றெழுத்து

[1]ஒன்றுவரின் அஃது இயைபுத்தொடை என்று சொல்

வர் என்றவாறு.

'இன்னகைத் துவர்வாய்க் கிளவியு மணங்கே
நன்மா மேனிச்
சுணங்குமா ரணங்கே
யாடமைத் தோளி யூடலு மணங்கே
யரிமதர் மழைக்கணு மணங்கே
திருநுதற் பொறித்த திலதமு
மணங்கே.' [யாப். வி. ப. ௱௫௩]
எனவரும்.

---

(பி-ம்)—1. ஒத்துவரின்.

வங்கம் - இணம்

பொருளதிகாரம் - செய்யுளியல்

நூஅசு

அசை சீரென வரையாதுகூறினமையான் இவையாம் என்றுகொள்க.

ஓரெழுத்து இறுதிக்கண் ஒப்பினும்

(கூஉ)

சாஉ. அளபெழி

னவையே யளபெடைத் தொடையே.

என்-னின், அளபெடைத்தொடை யாமாறு உணர்த்துதல் நுதலிற்று.

அடிதொறும் அளபெழத்

தொடப்பின் அஃது

அளபெடைத்தொடையாம் என் வாறு.

'ஓஒ வினிதே

யெமக்கிந்நோய் செய்தகண்

டாஅ[1]மிதற்பட்டது.' [குறள் - ௲௱௭௬]

என வரும்.

(௪௩)

௪௱௩. ஒருசீ ரிடையிட்

டெதுகை யாயிற்

பொழிப்பென மொழிதல் புலவ

ராறே.

என்-னின்,

# பொழிப்புத்தொடை யாமாறு உணர்த்துதல் நுதலிற்று.

ஒருசீரிடையிட்டு எதுகையாயிற் பொழிப்புத்தொடையாம் என்றவாறு.

எதுகையென ஓதினர் ஆயினும், 'வந்தது கொண்டு வாராதது முடித்தல்' என்பதனான் மோனை இயைபு முரண் அளபெடை என்பனவும் பொழிப்புத்தொடையாம்[2] என்று கொள்ளப்படும்.

உதாரணம்:—

'அரிக்குரற் கிண்கிணி யரற்றுஞ் சீறடி' [யாப். வி. ப. ௱௩௰]

இது பொழிப்பு மோனை.

'பன்னருங் கோங்கி னன்னலங் கவற்றி' [யாப். வி. ப. ௱௩௨]

என்பது பொழிப்பெதுகை.

'சுருங்கிய நுசுப்பிற் [3]பெருகுவடந் தாங்கி' [யாப். வி. ப. ௱௪௭]

என்பது பொழிப்புமுரண்.

'கடலே, கானலங் கழியே கைதையந் துறையே'

என்பது பொழிப்பியைபு.

'பூஉக் குவளைப் போது தருக்தி' [யாப். வி. ப. ௩௫௮]

என்பது பொழிப்பளபெடை.

௯௪. இருசீ ரிடையிடி னொரூஉவென மொழிப.

(௯௪)

என்-னின், ஒரூஉத்தொடை யாமாறு உணர்த்துதல் நுதலிற்று.

இரண்டு சீர் இடையிட்டு மோனைமுதலாயின வரத்தொடுப்பது ஒரூஉத்தொடையாம் என்றவாறு.

'அம்பொற் கொடிஞ்சி நெடுந்தே ரகற்றி' [யாப். வி. ப. ௩௫௯]

என்பது ஒரூஉமோனை.

'மின்னிவ ரொளிவடம் தாங்கி மன்னிய' [யாப். வி. ப. ௩௬௦]

(பி-ம்)—1. மிடர்ப்பட்டன. 2. என்றவாறு. 3. பெருவடம்.

என்பது ஒரூஉ வெதுகை.

'குவிர்துகஙக் கரும்பிய கொங்கை விரிந்து' [யாப். வி. ப. ாசள]

என்பது ஒரூஉமுரண்.

'நீடூலே யினியத னயலது [1]கடலே' [யாப். வி. ப - ாடுங]

என்பது ஒரூஉ வியைபு.

'காஅய்ச் செர்செற் கழித்துப் போஒய்' [யாப். வி. ப. ாடுஅ]

என்பது ஒரூஉ அளபெடை.

(கரு)

சாரு. சொல்லிய தொடையொடு வேறுபட் டியலிற்
சொல்லியற் புலவரது செந்தொடை யென்ப.

என்-னின், செந்தொடை யாமாறு உணர்த்துதல் நுதலிற்று.
மேற்சொல்லப்பட்ட

தொடையும் தொடைவிகற்பமும்
போலாது வேறுபடத் தொடுப்பது
செந்தொடையாம் என்றவாறு.

'பூத்த வேங்கை வியன்சினை யேறி

மயிலின மகவு நாட
னன்னுதற் கொடிச்சி மனத்தகத்
தோனே.' [யாப். வி. ப. ௩௭௯]
எனவரும்.
இனி நிரனிறுத்தியற்றலும்
யுளியல் - அவ] ²வருமாறு.
இரட்டையாப்பு

மொழிந்தவற்றியலான் [செய்

'அடல்வே லமர்நோக்கி நின்முகங்

கண்டே

யுடலு மிரிந்தோடு மூழலரும்

பார்க்குங்

கடலுங் கனையிருளு மாம்பலும்

பாம்புந்

தடமதி யாமென்று தாம்.' [யாப். வி. ப. ௱௮௨]

இது பொருளான் வேறுபட்டதனையல்லது எழுத்தான் எதுகைத்தொடை யாயிற்று. இனி, இரட்டைத் தொடை வருமாறு:

வேறுபடாமையின்

'ஒக்குமே யொக்குமே யொக்குமே யொக்கும்
விளக்கினிற் சீறெரி யொக்குமே யொக்கும்
குளக்கொட்டிப் பூவி னிறம்.' [யாப். வி. பக். ௱௮௰]

இதுவுஞ் சொல்லிய தொடைப்பாற் பட்டவாறு [3]காண்க.

இணைமோனை, கூழைமோனை, மேற்கதுவாய்மோனை, கீழ்க்கதுவாய் மோனை முற்றுமோனை முதலாயினவும் அந்தாதித் தொடையுங் கூறாத தென்னையெனின், 'தெரிந் தனர் விரிப்பில் வரம்பில வாகும்' என வருகின்ற [4]சூத்திரங் கூறுகின்றாராதலின் [5]அச் சூத்திரத்தின்கணும் பாட்டிற்கின்றியமையாத தொடையுணர்த்தினாரென்று கொள்க.(௧௪

சாசு. மெய்பெறு மரபிற் றொடைவகை [6]தாமே
ஐயபி ராயிரத் தாறைஞ் ஞூற்றொடு

(பி-ம்)—1. கடனே. 2. முற்றமென்ப என்பதற்கு உதாரணம். 3. கண்டுகொள்க. 4. சூத்திரத்துக். 5. இச்சூத்திரத்தானே கூறும். 6. தானே.

# பொருளதிகாரம் - செய்யுளியல்

௬௱௪௧

தொண்டுதலை யிட்ட பத்துக்குறை யெழுநூற்
*றொன்பஃ தென்ப வுணர்ந்திசி னோரே.

என்-னின், மேற்சொல்லப்பட்ட தொடை யெல்லாம் விரிவகையான் உணர்த்துதல் நுதலிற்று.

வடிவுபெற்ற மரபினையுடைய தொடையினது நூற்றுத்தொண்ணூற் றொன்பது என்றவாறு.

பாகுபாடு பதின்மூவாயிரத் தற

அவையாமாறு:—மொழிமுதலாகிய

எழுத்து உயிர் பன்னிரண்டு

இதனினை

யெழுத்து ஒரோவொன்றிற்குப் பதினொன்றாவாகலின் அவற்றை உறழ நூற்று முப்பத்திரண்டாம். 'கதநபம' என்பவற்றை உயிர் பன்னிரண்டோடுறழ அறுபதாம். அவ்வறுபதையும் முதற்றொடை யாக்கிக் கிளையெழுத்தோடுறழ அறுநூற்றறுபதாம். சகரத்தின் முதலாகெழுத்து ஒன்பது. அவற்றைக் கிளையெழுத்தோடுறழ எழுபத்திரண்டாம். வகரத்தின் முதலாகெழுத்து எட்டு; அவற்றைக் கிளையெழுத்தோடுறழ ஐம்பத்தாறும். யகரத்தின் முதலாகெழுத்து ஒன்று; கிளையெழுத்தில்லை. ஞகரத்தின் முதலாகெழுத்து மூன்று; அவற்றைக் கிளையெழுத்தோடுறழ ஆறும். இவ்வகையினான் முதலெழுத்துத் தொண்ணூற்றுமூன்றும் கிளையெழுத்துத் தொளாயிரத்திருபத்தாறுமாக மோனைத்தொடை ஆயிரத் தொருபத் தொன்பதாம்.

எதுகையாமாறு:—உயிரெழுத்து மொழியிடையில் வாராது. உயிர்மெய் யெழுத்து இருநூற்றொருபத்தாறில் ஙவ்வருக்கம் ஒழித்த எழுத்து இருநூற்றுநாலினையுங் கிளை யெழுத்தினோடு உறழ இரண்டாயிரத்து நானூற்று நாற்பத்தெட்டாம். இதனொடு ஒற்றுப் பத்தொன்பதுங் குற்றுகரம் ஆறுங் கூட்ட எதுகைத்தொடை இரண்டாயிரத்து நானூற்று எழுபத்துமூன்று பாகுபாடாம்.

முரண்டொடை சொன்முரண் பொருண்முரண் என இரண்டாம்.

இயைபுத்தொடையாமாறு:—உயிரெழுத்து மொழியீற்றின்கண் உயிர்மெய்யாகி வருதலின் அவையாகா. உயிர்மெய் இருநூற்றொருபத்தாறில் இறுதிக்கண் வாராத ஙகர வுயிர்மெய் பன்னிரண்டும் அகரம் பதினேழும் இகரம் பதினாலும் உகரம் இரண்டும் ஊகரம் ஒன்றும் ஒகரம் ஒன்றும் இவை ஒழித்து நின்ற எழுத்து நூற்றறுபத்தைந்தும் ஞணநமனயரலவழள ]என்னும் புள்ளியிறுதி பதினொன்றும் குற்றுகரவீறு ஆறும் ஆக இயைபுத்தொடை நூற்றெண்பத்திரண்டு பாகுபாடாம்.

அளபெடைத்தொடையாமாறு:—மொழிமுதலாகு முயிரளபெடை ஏழு, கதநபம என்னும் உயிர்மெய்யளபெடை முப்பத்தைந்து, சகரஅளபெடை ஐந்து, வகரஅளபெடை ஐந்து, யகரஅளபெடை இரண்டு: இவை ஐம்பத்துநான்கில் உயிரளபெடை தனிநிலையாம். ஏனையவற்றை முதனிலை யிடைநிலை யிறுதிநிலை எனவுறழ நூற்றுநாற்பத்தொன்றும்.

---

* பதின்மூவாயிரத் தறுநூற்றுத் தொண்ணூற் றென்பது என்ற தொகை பெற
தற்கு 'றென்று மென்ப வுணர்ந்திசி னோரே' எனப் படக்கொண்டதாகக் கருதுவர் பேரா
சிரியர் முதலியோர். ஆயினும் கிடைத்த ஏட்டுப்பிரதிகள் இரண்டிலும் உள்ளபடியே இக்
குப் பதிப்பிக்கலாயிற்று. யாப்பருங்கல விருத்தியிற் [பக். ௩௭௪] காட்டப்பெறும் சங்க
யாப்புடையார் சூத்திரம் இத்தொகை வரலாற்று முறையில் வந்துள்ளதே யென வற்

புறத்துநின்றது.

(பி-ம்)—1. யாஙய. 2. எகாரம் பதினேழு. ஒகாரம் பதினாறு, உகரம் இரண்டு, ஊகாரம் இரண்டு, ஏகாரம் ஒன்று, ஓகாரம் ஒன்று இவை யொழித்து.

௫௱௯௨

# தொல்காப்பியம் - இளம்பூரணம்

ஒற்றுக்களுள் வல்லெழுத்தாறும் மகரமும் ழகரமும் ஒழித்து ஏனைய பதினொன்றும் அளபெடுக்க ஒற்றளபெடை பதினொன்றும். இவ்வகையினான் அளபெடைத்தொடை நூற்றைம்

பத்தொன்பது வகையாம்.

இவ்வகையி னொடுத்
தொடை மூவாயிரத் தெண்ணூற்று
முப்பத்தைந்து

வகையாம்.

பொழிப்புத் தொடையிற் கிளையெழுத்து வாராது.

மோனைப்பொழிப்புத் தொண்ணூற்றுமூன்று, எதுகைப்பொழிப்பு இருநூற்றிருபத்தொன்பது, முரண்பொழிப்பு இரண்டு, இயைபுப் பொழிப்பு நூற்றெண்பத்திரண்டு; அளபெடையுள் ஒற்றளபெடை பொழிப்பாகி வாராமையின் உயிரளபெடைப் பொழிப்பு நூற்று நாற்பத்தெட்டு. இவையெல்லாங் கூட்டப் பொழிப்புத் தொடை அறுநூற்றைம்பத்துநாறு வகையாம்.

ஒரூஉத்தொடையும்
இவ்வகையினால் அறுநூற்றைம்பத்து நாலாம்.

இனிச் செந்தொடையாமாறு மொழிமுதலாகும் எழுத்துத் தொண்ணூற்று மூன்று. மற்றையடியினு மொத்து வருங்கால் அவை மோனையுள் அடங்குதலின் அவற்றை ஒழித்து ஏனையெழுத்துத் தொண்ணூற்றிரண்டோடு முறழ எண்ணாயிரத் தைந்நூற் றைம்பத்தாறு வகையாம்.

இவ்வகையினால் தொடைவிகற்பம் பதின்மூவாயிரத் தறுநூற்றுத் தொண்ணூற் றொன்பதாம். (கஎ)

சாஎ. தெரிந்தனர்

விரிப்பின் வரம்பில வாகும்.

என்-னின், எய்தியதன்மேற்

சிறப்புவிதி யுணர்த்துதல் நுதலிற்று.

மேற்சொல்லப்பட்ட

•

தொடையினை ஆராய்ந்து விரிப்பின்

வரம்பிலவாகி விரியும்

என்றவாறு.

அவையாவன மோனை, எதுகை, முரண், இயைபு, அளபெடை: என்பனவற்றின்கண் இணை, கூழை, முற்று, மேற்கதுவாய், கீழ்க்கதுவாய், [1]கடை, கடையிணை, கடைக்கூழை, இடைப்புணரென வேறுபடுத் துறழ்ந்தும்; எழுத்தந்தாதி அசையந்தாதி சீரந்தாதி அடியந்தாதி எனவும், உயிர்மோனை உயிரெதுகை நெடில்மோனை நெடிலெதுகை வருக்கமோனை வருக்க வெதுகை இனமோனை இனவெதுகை ஆசெதுகை எனவும், மூன்றா மெழுத் தொன்றெதுகை இடையிட் டெதுகை எனவும், இவ்வாறு வருவனவற்றை மேற்கூறிய வகையினான் எழுத்து வேறுபாட்டினா னுறழவும், நிரனிறையாகிய பொருள்கோள் வகையானும் ஏகபாதம் எழுகூற்றிருக்கை முதலாகிய சித்திரப்பாக்களானும் உறழவும், வரம்பிலவாகி விரியும்.

அவற்றுட் சிலவருமாறு:—இணையாவது முதலிருசீர்க்கண்ணும் மோனைமுதலா யினவரத் தொடுப்பது. கூழையாவது முந்துற்ற மூன்று சீரினும் வந்து இறுதிச்சீரின் வாராதது.

'அணிமல ரசோகின் றளிர்நலங் கவற்றி' [யாப். வி. ப. ௱௩௰]

இஃது இணைமோனை:

(பி-ம்)—1. 'கடையிடை, கடையிணை பின்கடைக்கூழை இடைப்புண ரென' என்றபாடபேதம் நச்சினர்க் கினியருரைப் பதிப்பிற் கீழ்க்குறிப்பாகக் காணப்படுகின்றது.

# பொருளதிகாரம் - செய்யுளியல்

௫௱௪௰௫

'பொன்னி னன்ன பொறிசுணங் கேந்தி' [யாப். வி. ப. ௱௪]

இஃது இணையெதுகை:

'சிறடிப் பேரக
லல்கு லொல்குப்' [யாப். வி. ப. ௱௪௭]

இஃது இணைமுரண்:

'மொய்த்துடன் றவழு முகிலே
பொழிலே' [யாப். வி. ப. ௱௫௫]

இஃது இணையியைபு:

'தாஅட் டாஅ மரைமல ருழக்கி'

[யாப். வி. ப. ௱௫௮]

இஃது இணையளபெடை:

எனவரும்.

இனிக் கூழை [வருமாறு:—]

'அகன்ற வல்குலர் நுண் மருங்குல்'

[யாப். வி. ப. ௱௩௰]

இது கூழைமோனை:

'நன்னிற மென்முலை
மின்னிடை [1]வருந்த' [யாப். வி. ப. ௱௩
௪]

இது கூழையெதுகை:

'சிறிய பெரிய நிகர்மலர்க் கோதைதன்'

[யாப். வி. ப. ௱௪௭]

இது கூழைமுரண்:

'மாதர் நகிலே வல்லே யியலே' [யாப். வி. ப. ௱௫௩]

இது கூழையியைபு:

'மாஅத் தாஅண் மோஒட் டெருமை' [யாப். வி. ப. ௱௫௮]

இது கூழையளபெடை:

எனவரும்.

முற்றுவது நான்கு சீரும் ஒத்துவருவது.

'அயில்வே லனுக்கி யம்பலைத் தமர்த்த' [யாப். வி. ப. ௱௬௰]

இது முற்றுமோனை: பிறவுமன்ன.

இனி மேற்கதுவா யாவது நான்கு சீரினும் இரண்டாஞ் சீரொழிய ஏனைய வருவது.

'அரும்பிய கொங்கை யவ்வளை யமைத்தோள்' [யாப். வி. ப. ௱௬௧]

பிறவுமன்ன.

கீழ்க்கதுவா யாவது மூன்றாஞ் சீரொழிய ஏனைய வருவது.

'அவிர்மதி யனைய திருநுத லரிவை' [யாப். வி. ப. ௱௬௧]

பிறவுமன்ன.

அந்தாதித்தொடைக்

குதாரணம்:—

> ‘உலகுடன் விளக்கு மொளிநிக ழவிர்மதி
> மதிநல னழிக்கும் வளங்கெழு முக்குடை
> முக்குடை நீழல் பொற்புடை யாசனம்
> ஆசனத் திருந்த திருந்தொளி யறிவ

(பிரதி)—1. வருத்தி.

50



> னாசனத் திருந்த திருந்தொளி யறிவனை
> யறிவுசே ருள்ளமொ டருந்தவம் புரிந்து
> 1துன்னிய மாந்த ரதுதெனப
> பன்னருஞ் சிறப்பின் விண்மிசை யுலகே.’ [யாப். வி. ப. ௩அ௫]

எனவரும்.

இவ்வகையினான்
ஒருபாட்டிறுதி மற்றைப்பாட்டி
னாதிச்சீராகி வருதல் கொள்க.

இத்துணையுங் கூறப்பட்டன சிறப்புடையவென ஒரு சிகராகக் கூறுப.

இனி '2மீன்றேர்ந் தருந்திய கருங்கால் வெண்குருகு' [யாப். வி. ப. ௩௭௮]

இது கடையிணைமுரண்.

பின்முரணாவது காலாஞ்சீரு மிரண்டாஞ்சீரு மொன்றத் தொடுப்பது: அது

'கொய்ம்மலர் குவிந்து தண்ணிழல் விரிந்து' [யாப். வி. ப. ௩௭௮]

எனவரும்.

கடைக்கூழை முரணாவது முதற்சீரொழித்து மூன்றுசீரும் ஒத்துவருவது.

உதாரணம் வந்தவழிக்

காண்க.

—

இடைப்புணர் முரணாவது

இடையிரு சீரும் ஒன்றத் தொடுப்பது:

அது

'3போதுவிடு குறிஞ்சி நெடுந்தண்

மால்வரைக்

[கோதையிற் றாழ்ந்த வோங்குவெள்

ளருவிக்

காந்தளஞ்

செங்குலைப் பசுங்கூ தாளி

வேரல் விரிமலர்

முகையொடு விரைஇப்

பெருமலைச் சிறா

ரிழிதரு நலங்கவர்ந்

தின்னு வாயின வினியோர் மாட்டே.']

[யாப். வி. ப. ௩௯௯]

எனவரும்.

மோனை எதுகை இயைபு

காண்க.

அளபெடையினும்

இவ்வாற்றான் வருவன வந்தவழிக்

இனி, உயிர்மோனை யாவது முதலெழுத்தாகிவந்த

னும் வருவது: அது

உயிரெழுத்து மற்றை யடியி

'கயலே ருண்கண் கலிழ நாளுஞ்

4சுடர்புரை திருநுதல் பசலை பாய' [யாப். வி. ப. ௩௩௯]

எனவரும்.

எதுகைக்கும் இதுதானேயாம்.

நெடின்மோனையாவது நெட்டெழுத் தொத்துவருவது:

'தாமின் புறுவ துலகின் புறக்கண்டு

காமுறுவர் கற்றறிந் தார்' [குறள் - ௩௯௯]

எனவரும்.

நெடிலெதுகை யாவது:

'ஆவா வென்றே யஞ்சின ராழ்ந்தா ரொருசாரார்
கூகூ வென்றே கூவிளி கொண்டா ரொருசாரார்' [யாப்வி. ப. ௩௩௪]

எனவரும்.

இனவெதுகை மூன்றுவகை.

(பி-ம்)—1. தன்னுபுமார்தரென்ப. 2. மீன்றேர்ச்சு வருந்திய. 3. தேம்படுகுரஞ் சுனை. 4. சுடர்புனை. 5. ராழா வொருசாரார்.

'தக்கார் தகவில ரென்ப தவரவ
ரெச்சத்தாற் காணப் படும்.' [குறள் - ௱௰௪]

இது வல்லின வெதுகை.

'அன்பீனு மார்வ முடைமை யதுவீனும்
நண்பென்னு நாடாச் சிறப்பு.' [குறள் - ௭௪]

இது மெல்லின வெதுகை.

'எல்லா விளக்கும் விளக்கல்ல
சான்றோர்க்குப்

பொய்யா விளக்கே விளக்கு.' [குறள் - உ௯௯]

இஃது இடையின வெதுகை.

மோனையும் இவ்வாறு வருவன பாகுபடுத்துக்கொள்க.

ஆசெதுகையாவது

இடையினவொற்று இடைவரத் தொடுப்பது.

'காய்மாண்ட தெங்கின் பழம்வீழக்
கமுகி னெற்றி
பூமாண்ட தீந்தேன் றொடைகீறி வருக்கை போழ்ந்து
தேமாங் கனிசிதறி வாழைப் பழங்கள் சிந்து
மேயாங் கதமென் றிசையாற்றிசை போய துண்டே.' [சீவகசிந்-௩௧]

எனவரும். இதன்கண் யகரம் ஆசாகி வந்தது. பிறவுமன்ன.

இனி இரண்டடியெதுகை யாவது முதலிரண்டடியு மோரடியாய்ப் பின்னிரண்டும் ஓரெதுகையாகி வருவது.

'உலக மூன்று மொருங்குட னேத்துமாண்
டிலக மாய திறலறி வன்னடி
வழுவி னெஞ்சொடு வாலிதி னூற்றவுந்
தொழுவ ரெல்வினை நீங்குக வென்றியான்.' [யாப். வி. ப. ௱௩௧]

எனவரும்.

இடையிட் டெதுகையாவது ஓரடி யிடையிட்டுத் தொடுப்பது.

'தோடா ரெல்வளை நெகிழ நாளும்
நெய்த லுண்கண் பைதல் உழப்ப
[1]வாடா வவ்வரி புதைஇப் பசலையும்
வைக றோறும் பைபயப் பெருகி
நீடா [2]ரவரென நீமனங் கொண்டார்
கேளார் கொல்லோ காதலர் தோழீஇ
வாடாப் பவ்வ மறமுகந் தெழிலி
பருவஞ் செய்யாது வலனேர்பு வளைஇ
யோடா மலையன் வேலிற்
கடிது மின்னுமிக் கார்மழைக் குரலே.' [யாப். வி. ப. ௱௪௩]

(பி-ம்)—1. வாடாப்புலரி. 2. ரலரென்னீர்மனம்.



எனவரும்.

இவ்வகையினான் மோனை வருவனவுங் கொள்க. பிறதொடையும் இவ்வகையினான் வருவனவும் கொள்க.

மூன்று மெழுத்தொன் றொழுகையாவது இரண்டா மெழுத்து ஒன்றாது மூன்றும் எழுத்து ஒன்றாவது. [1]இதுவும் அவ்வாற்ற உதாரணம் வந்தவழிக் காண்க.
இவையெல்லாம் மேலெடுத்தோதப்பட்ட தொடைக்கட்படும். நாற்சீரடி யொழித்த

அடிக்கண்ணும்

இப்பாகுபாடெல்லாம் விரிப்பின்
வரம்பில வாகும். (கூஅ)

சாஅ. தொடைநிலை
வகையே யாங்கென மொழிப.

என்-னின், இதுவுந்
தொடைக்குரியதோர் மரபுணர்த்துதல்
நுதலிற்று.

தொடைநிலைவகை மேற்
சொல்லப்பட்ட பாகுபாட்டின
என்றவாறு.

[2]எனவே

வகுத்துணர்த்துவார்க் கெல்லாம்

இடனுடைத்து என்றவாறும்.

அஃதாவது எழுத்தான்

வேறுபடுதலு மாம்.

வேறுபடுதலும் சொல்லான் வேறுபடுதலும் பொருளான்

இத்துணையுந் தொடை

கூறப்பட்டது.

(கூ௪)

சாகூ. மாத்திரை முதலா

வடிநிலை காறு

நோக்குதற் காரண நோக்கெனப்

படுமே.

என்-னின், இது

நோக்கென்னும் உறுப்பு உணர்த்துதல்

நுதலிற்று.

மாத்திரைமுதலாக அடிநிலையளவும் நோக்குதலாகிய லப்பமெம் என்றவாறு.

கருவி நோக்கென்று சொல்

காரணமெனினும் கருவியெனினும் ஒக்கும். உண்டற்றொழில் என்றாற்போலக் கொள்க.

நோக்குதற்காரண மென்பதனை

அஃதாவது யாதானும் ஒன்றைத் தொடக்குங்காலத்துக் கருதிய [3]பொருளை முடிக்குங்காறும் பிறிதுநோக்காது அதுதன்னையே நோக்கிநிற்கு நிலை. அடிநிலை காறும் என்றதனால் ஓரடிக்கண்ணும் பலவடிக்கண்ணும் நோக்குதல் கொள்க. அஃது ஒருநோக்காக ஓடுதலும் [4]பலநோக்காக ஓடுதலும் இடையிட்டு நோக்குதலும் என மூன்றுவகைப்படும்.

'அறுசுவை யுண்டி யமர்ந்தில்லா ளூட்ட
மறுசிகை நீக்கியுண் டாரும் வறிஞராய்ச்
சென்றிரப்ப ரோரிடத்துக் கூழெனிற்பின் செல்வமொன்
றுண்டாக வைக்கற்பாற் றன்று.' [நாலடி - க]

இஃது ஒருநோக்காக ஓடிற்று.

'அறிமி னறநெறி யஞ்சுமின் கூற்றம்
பொறுமின் பிறர்கடுஞ்சொற் போற்றுமின் வஞ்சம்
வெறுமின் வினைதீயார் கேண்மை யெஞ்ஞான்றும்
பெறுமின் பெரியார்வாய்ச் சொல்.' [நாலடி - ௱௬௨]

இது பல நோக்காகி வந்தது.

(பி-ம்)—1. ஏனையவும் இவ்வாறு. 2. வேறு வந்துணர்த்துவார்க் கெல்லாம். 3. பாருண்முடியுங்காறும். 4. பலநோக்காகி வருதலும்.

## பொருளதிகாரம் - செய்யுளியல்

௩௭௯

'உலக முவப்ப வலனேர்பு திரிதரு
பலர்புகழ் ஞாயிறு கடற்கண் டாஅங்

கோவற விமைக்குஞ் சேண்விளங்

கவிரொளி

யுறுநர்த் தாங்கிய மதனுடை நோன்றாட்
செறுநர்த் தேய்த்த செல்லுறழ் தடக்கை
மறுவில் கற்பின் வாணுதல் கணவன்' [முருகாற். க-௬]

என்றவழி 'ஒளி'என்பது அதனையற் [1]கிடந்த தாளை நோக்காது கணவனை நோக்குதலின் இடையிட்டு நோக்கிற்று. பிறவுமன்ன. (௱)

சாய. ஆசிரியம் வஞ்சி வெண்பாக் கலியென
நாலியற் றென்ப [2]பாவகை விரியே.

என்-னின், நிறுத்த முறையானே பாவாமாறு உணர்த்துவான் எடுத்துக்கொண்டார் அவை யினைத்தென வரையறுத் துணர்த்துதல் நுதலிற்று.

ஆசிரியமெனவும் வஞ்சியெனவும் வெண்பாவெனவும் கலியெனவும் நான்கியல்பினையுடைத்து என்று சொல்வர் பாவினது வகையை விரிக்குங்காலத்து என்றவாறு.

அஃதேல் ஒருசாராசிரியர் வெண்பா ஆசிரியங் கலி வஞ்சி என ஓதினர்; யாதெனின், அவரும் ஒருபயனோக்கி யோதினர்: இவரும் ஒருபயனோக்கி யோதினர் என்க.

என்னை? வெண்பாவாவது பிறதளையோடு மயங்காமையானும் மிக்குங்குறைந்தும் [3]வாராத அடியான் வருதலானும் அந்தணர் சீர்மைத்தென முற் கூறினர். அதன்பின் அந்நீர்த்தாகிப் பிறதளையும் வந்து இனிய ஓசையையுடைத்தாய்ப் பரந்துவருதலின் அரசத் தன்மையது என்பதனான் ஆசிரியப்பாக் கூறினர். அதன்பின் அந்நீர்த்தாகிச் சிறுபான்மை வேற்றுத்தளை விரவலின் வணிகர் சீர்மைத்தெனக் கலிப்பாக் கூறினர். அதன்பின் வஞ்சிப்பா அளவடியான் வருதலின்றிக் குறளடியுஞ் சிந்தடியுமாய் வந்து பலதளையும் விரவுதலின் வேளாண்மாந்தரியல்பிற்றென வஞ்சிப்பாக் கூறினர். இவ்வாசிரியரும் பதினேழ் நிலத்தினும் வருதலானும் இனிய ஓசைத்தாகலானும் அடிப்பரப்பினானும் ஆசிரியப்பா முற்கூறினர். அதன்பின் ஆசிரிய நடைத்தாகி இறுதி யாசிரியத்தான் இறுதலின் வஞ்சிப்பாக் கூறினர்; இந்நீர்த்தன்றி [4]வேறுபட்ட ஓசைத்தாகலான் வெண்பா அதன்பின் கூறினர்; அதன்பின் வெண்சீர்பயின்று வருதலானும் வெண்பாவுறுப்பாகி வருதலானும் கலிப்பா[க்] கூறினரெனவறிக. (௱௧)

சாயக, அங்கிலே மருங்கி னறமுத லாகிய
மும்முதற் பொருட்கு முரிய வென்ப.

என்-னின், மேற் கூறப்பட்ட பாக்கள் பொருட்குரியவாமாறு உணர்த்துதல் நுதலிற்று.

அப் பாக்கள் நான்கும்

பொதுப்பட நின்றவழி

அறம் பொரு ளின்ப மென்னும்

மூன்று முதற்பொருட்கும் உரிய என்றவாறு.

முதற்பொருள் என்றது [4]பாகுபாடல்லாத பொதுமைகுறித்த பொருள். சிலபொருள்களை யெடுத்து விலக்குகின்றாராதலின் இவ்வாறு கூறப்பட்டது. அப்பொருட்கண் உரியவாகியவாறு சான்றோர் செய்யுளகத்துக் கண்டுகொள்க. (௱௨)

(பி-ம்)—1. கிடக்தகுனை. 2. பாவிர்கையே. 3. வாராமை யளவடியான். 4. பாகுபடாதில்லாது.

சாரு௨. பாவிரி

மருங்கிஃனப் பண்புறத் தொகுப்பி
ஞசிரி யப்பா வெண்பா வென்றுங்
காயிரு பாவிஞு ளடங்கு மென்ப.

என்-னின்,

மேற்சொல்லப்பட்ட பாக்களைத்
தொகைவகையா னுணர்த்துதல்
நுதலிற்று.

மேற்சொல்லப்பட்ட நான்கு
பாவும் ஆசிரியப்பா வெண்பா என
இரண்டாய் அடங்
கும் என்றவாறு.

அவை யடங்குமாறு
மேலேவருகின்ற சூத்திரத்தான்

உரைப்ப. (௱௩)

சூ௱௰௩. ஆசிரிய நடைத்தே வஞ்சி யேனை வெண்பா நடைத்தே கலியென மொழிப.

என்-னின், மேல் அடக்குமெனக் கூறப்பட்ட பாக்கள் அடங்குமாறு உணர்த்துதல் நுதலிற்று.

ஆசிரியம் போன்ற நடையை உடைத்து உடைத்து கலி: என்றுரைப்ப என்றவாறு.

வஞ்சி: வெண்பாப் போன்ற நடையை

நடையென்றது

அப்பாக்கள் இயலுந் திறம்.

(௱௪)

௪௱௰௪. வாழ்த்தியல்
வகையே நாற்பாக்கு முரித்தே.

என்-னின், வாழ்த்தியற் குரிய பாவாமாறு உணர்த்துதல் நுதலிற்று. வாழ்த்தியலின் வகை நான்கு பாவிற்கு முரித்து என்றவாறு.

வகை யென்றது தேவரை வாழ்த்தலும் முனிவரை வாழ்த்தலும் ஏனையோரை வாழ்த்தலும். செய்யுள் வந்தவழிக் கண்டுகொள்க.
(நச்)

௪௱௰௫. வழிபடு தெய்வ
நிற்புறங் காப்பப்
பழிதீர் செல்வமொடு வழிவழி சிறந்து
பொலிமி னென்னும் புறநிலை வாழ்த்தே
கலிநிலை வகையும் வஞ்சியும் பெறாஅ.

என்-னின், இது புறநிலைவாழ்த்திற் குரிய பாவாமாறு உணர்த்துதல் நுதலிற்று.

வழிபடுதெய்வம் நின்னைப் புறங்காப்பக் குற்றந்தீர்ந்த செல்வத்தொடு வழிவழி யாகச் சிறந்து பொலிமின் என்னும் புறநிலைவாழ்த்துக் கலிப்பாவகையினும் [1]வஞ்சிப்பா வகையினும் வரப்பெறாது என்றவாறு.

எனவே வெண்பாவினும் ஆசிரியப்பாவினும் இவையிரண்டும் புணர்ந்த மருட்பாவி னும் வரப்பெறும் என்றவாறும். (௮௩)

சாஉ௪. வாயுறை வாழ்த்தே யவையடக் கியலே
செவியறி [2]வுறூஉவென வவையு மன்ன.

என்-னின், ஒருசார் பொருட்குரிய மரபுணர்த்துதல் நுதலிற்று.

(பி-ம்)—1. வஞ்சிப்பாவினும். 2. வுறூஉவென்றவையுமன்ன.

# பொருளதிகாரம் - செய்யுளியல்

௩௱௧௯

வாயுறைவாழ்த்தும் அவையடக்கியலும்

வஞ்சியினும் வரப்பெறா என்றவாறு.

செவியறிவுறுத்தற்பொருளுங்

கலியினும்

எனவே, முன்னையவொப்ப ஏனையிரண்டினும் வரப்பெறும் என்றவாறும். (எஎ)

சாமிஎ, வாயுறை வாழ்த்தே வயங்க நாடின்
வேம்புங் கடுவும் ₁போல வெஞ்சொற்
றூங்குத லின்றி வழிநனி பயக்குமென்
றோம்படைக் கிளவியின் வாயுறுத் தற்றே.

என்-னின், வாயுறைவாழ்த்து ஆமாறு உணர்த்துதல் நுதலிற்று.

வாயுறை வாழ்த்தை விளக்க ஆராயின் வேம்பினையுங் கடுவினையும் போல வெஞ்சொலடக்காது பிற்பயக்குமெனக் கருதிப் பாதுகாவற் கிளவியானே மெய்யறிவித்தல் என்றவாறு. உதாரணம்:

'இருங்கடற் றானையொடு பெருநிலங் கவைஇ
[யுடையில
நடுவண திடைபிறர்க் கின்றித்
தாமே யாண்ட
வேமங் காவலர்
இடுதிரை
மணலினும் பலரே சுடுபிணக்
காடுபதி யாகப்
போகித் தத்தம்
நாடு
பிறர்கொளச் சென்றுமாய்ந் தனரே

அதனால், நீயுங் கேண்மதி யத்தை வியா
துடம்பொடு நின்ற வுயிருமில்லை

மடங்க லுண்மை
மாயமோ வன்றே
கள்ளி வேய்ந்த முள்ளியம் புறங்காட்டு
வெள்ளில் போகிய வியலு ளாங்க

ணுப்பிலா அவிப்புழுக்கல்
கைக்கொண்டு பிறக்குநோக்கா
திழிபிறப்பினோ னீயப்பெற்று
நிலங்கல னாக விலங்குபலி மிசையு
மின்னா வைகல் வாரா முனனே
செய்ந்நீ முன்னிய வினையே
முந்நீர் வரைப்பக முழுதுடன் றுறந்தே.'] [புறம் - ௩௬௩]

என்னும் பாட்டு.

(௱௨

சாயஅ.

அவையடக் கியலே யரிறபத் தெரியின்
வல்லா கூறினும் வகுத்தனர் கொண்மினென்
றெல்லா மாந்தர்க்கும் வழிமொழிந் தன்றே.

என்-னின், அவையடக்கியல் ஆமாறு உணர்த்துதல் நுதலிற்று.

அவையடக்கியலைக் குற்றமற ஆராயின் அறியாதன சொல்லினும் பாதுகாத்துக் கோடல்வேண்டும் என [2]எல்லாமாந்தர்க்குந் தாழ்ந்துகூறல் என்றவாறு. (௱௧)

உதாரணம் வந்தவழிக் கண்டுகொள்க.

(பி-ம்)—1. போல்வன. 2. எல்லாமறிந்தார்க்குத்.

சா

சாஈ௯. செவியுறை தானே,
பொங்குத லின்றிப் புரையோர் நாப்ப
ணவிதல் கடனெனச் செவியுறுத் தன்றே.

என்-னின், செவியறிவுறூஉ வருமாறு உணர்த்துதல் நுதலிற்று.

செவியுறையாவது பெரியோர் நடுவு வெருடலின்றித் தாழ்ந்தொழுகுதல் கடன் எனச் செவியறிவுறுத்துதல் என்றவாறு.

'அறிமி'னறநெறி ... பெரியார்வாய்ச்சொல்' [நாலடி - ௫௯௨]

எனவரும்.

இத்துணையும் பாக்கட்குரிய
பொருளுணர்த்தியது.
(௱௰)

சாஉ௰. ஒத்தா ழிசையு மண்டில யாப்புங்
குட்டமு நேரடிக் கொட்டின வென்ப.

என்-னின், சில செய்யுட்களில் அடி வரையறுத்தலை நுதலிற்று.

ஒத்தாழிசைக் கலிக்கு உறுப்பாகிய ஒத்தாழிசையும், ஆசிரியப்பாவின்கண் நிலை மண்டிலம் அடிமறிமண்டிலம் என்பனவும், ஒத்தாழிசைக்கும் கொச்சகத்திற்கும் பொது வாகிய குட்டமும் நாற்சீரடிக்குப் பொருந்தின என்றவாறு.

மேல் ஆசிரியப் பாவின் ஈற்றயலினும், இடையினும் முச்சீரும் இருசீரும் ஐஞ்சீரும் அறுசீரும் வரும் என்றதனானே, எல்லாவடியும் ஒத்துவருவனவு முன வென மண்டிலங் கூறவேண்டிற்று.

கலிப்பாவிற்குச் சரிதகம்

ஈற்றடி முச்சீரானும் ஈற்றயலடி
முச்சீரானும் வரும் என்
றமையால், தாழிசையுந் தரவும்
நாற்சீரானல்லது பிறவாற்றான்
வாராவெனக் கூறல்
வேண்டிற்று. குட்டமெனினும்
தரவெனினும் ஒக்கும்.

இனிக்கலிக்குறுப்பாகிய
சின்னங்கள் இருசீரானும் முச்சீரானும்
வருதலானும்
தனிச்சொல் ஒருசீரானும்
வருதலானும் வேறு ஓதவேண்டிற்று.

உதாரணம்

முன்னர்க்காட்டுதும்.

சாஉக. குட்ட மெருத்தடி
யுடைத்து மாகும்.

என் - னின், மேலதற்கோர்
புறனடை உணர்த்துதல் நுதலிற்று.
தரவு ஈற்றயலடி முச்சீரான்
வரவும்பெறும் என்றவாறு.

எருத்தடி யுடைத்தென்றதனுனே ஈற்றயலடி முச்சீர் எனப் பொருள்படுமோ எனின், ஆசிரியப்பாவின் ஈற்றயலடி முச்சீரான்வருதல் பெருவழக்காதலானும் இனிவருகின்ற சூத்திரம் தூக்கியலென ஓதுகையானும் இவ்வாறு பொருள்படுமென்று கொள்க. உதாரணம் முன்னர்க்காட்டுதும்.

இன்னும் குட்டம் என்பதனைத் தரவு கொச்சகமாகிய கொச்சக வொருபோகிற்குப் பெயராக வழங்கினும் [3]அமையும். அவ்வழி ஒத்தாழிசை என்பதனை [4]ஒத்தாழிசையெனத் தரவெனத் தரவையுங் கூட்டிப் பொருளுரைக்கப் படும். (ராயரு)

(பி-ம்)—1. தற்றே. 2. பெரியோரான் கருதலின்றித். 3. ஆம். 4. ஒத்தாழிசைச் கலியென்க வெனத்.

சூாஉ௨. மண்டிலங் குட்ட
மென்றிவை யிரண்டுஞ்
செந்தூக் கியல வென்மனார் புலவர்.

என்-னின், மேற்
சொல்லப்பட்டவற்றுள் மண்டிலம்
குட்டம் என்பனவற்றிற்குரிய
தோர் ஓசை வேறுபாடு உணர்த்துதல்
நுதலிற்று.

மண்டிலமாகக் கூறப்படும்
பாவும் குட்டமெனக் கூறப்படும் பாவும்
அகவலோசை யியல என்றவாறு.

# உதாரணம் முன்னர்க் காட்டுதும்.

இனி[1] நான்குபாவினும் வெண்பாவுங் கலிப்பாவும் முன்னெடுத்தோதுகின்றாராதலானும், ஆசிரியப்பாவும் வஞ்சிப்பாவும் இத்துணையும் ஓதிய இலக்கணத்தான் முடித்தலானும், அவையிற்றிற்கு உதாரணம் ஈண்டே காட்டுதும். ஆசிரியப்பா வாவது பெரும்பான்மை இயற்சீரானும் ஆசிரிய வுரிச்சீரானும் ஆசிரியத்தளையானும் அகவலோசையானும் நாற்சீரடியானும் சிறுபான்மை ஒழிந்த சீரானும் தளையானும் அடியானும் வருவது. அவ்வாறுதல் மேற்கூறப்பட்ட சூத்திரங்களான் உணர்க.

இப்பாவிற்கு ஈற்றெழுத்து வரையறுத்துணர்த்தாமையின் எல்லாவீறுமாம்.

எற்றக்கு ?

'அகவ லிசையன வகவல் மற்றவை
ஏ, ஓ, ஈ, ஆ, என் ஐ என் றிறுமே.' [யாப். வி. ப. ௮௯]

என்று வரைந்தோதினர் உளரால் எனின்,

'கோண்மா கொட்குமென் றஞ்சுவ லொன்றார்க்

திருவிசும்பு கொடுக்கு நெடுவேல் [2]வழுதி
கூடலன்ன குறுந்தொடி யரிவை
யாடமை [3]மென்றோ ணசைஇ நாடொறும்

வடியமை யெஃகம் வலவயி னேந்திக்

கைபோழ் காந்தட் கடிமலர் கமழு
மைதோய் [4]வெற்பன் மையிருள் வருமிடம்.' [யாப். வி. ப. உசஉ]

எனப் பிறவாற்றானும் வருதலின் ஈறு வரையறுக்கப்படா தென்றுகொள்க.

இனி இவ்வாசிரியப் பாவினை அடிநிலையாற் பெயரிட்டு வழங்கப்படும். அஃதா மாறு:—

ஈற்றயலடி முச்சீரான் வருவதனை நேரிசையாசிரியம் என்ப.

உதாரணம்:—

'முதுக்குறைந் தனளே முதுக்குறைந் தனளே
மலையன் ஒள்வேற் கண்ணி
முலையும் வாரா முதுக்குறைந் தனளே.' [யாப். வி. ப. ஈஉஉ]

என வரும்.

இடையிடை முச்சீர் வரின் இணைக்குற ளாசிரியம் என்ப.

(பி-ம்)—1. நான்குபாவின். 2. வானவன். 3. மென்றோளசைஇ. 4. வெற்ப

நல்கிருள்.

51

உதாரணம்:—

'நீரின் றண்மையுந் தீயின் வெம்மையுஞ்
சாரச் சார்ந்து தீரத் தீரும்
சார னாடன் கேண்மை
சாரச் சாரச் சார்ந்து
தீரத் தீரத் தீர்போல் லாவே.' [யாப். வி. ப. உ௬௭]

என வரும்.

எல்லாவடியும்

ஒத்துவருவதனை நிலைமண்டில ஆசிரியம் என்ப. இதற்கு இலக்கணம், முன்னர்க் காட்டுதும்.

'வேரல் வேலி வேர்க்கோட் பலவின்
சார னாட செவ்வியை யாகுமதி
யாரஃ
தறிந்திசி னோரே சாரற்
சிறுகோட்டுப் பெரும்பழந் தூங்கி

யாங்கிவ

ளுயிர்தவச்

சிறிது காமமோ பெரிதே.' [குறுந் - ௰
௮]

என வரும்.

இனி எல்லாவடியும்
ஒத்துவரும் பாட்டினையே
அடிமறிமண்டில ஆசிரியம் என்று

வழங்குப. இதற்கிலக்கணஞ் சொல்லதிகாரத்துள் 'நிரனிறைசுண்ணம்' [எச்சவியல் - அ] என்னும் சூத்திரத்தாற் கொள்க.

'சூரல் பம்பிய சிறுகான்
யாறே
சூரர மகளி ராரணங்
கினரே
வார லெனினே யானஞ்
சுவலே
சாரனாட நீவர லாறே.'

[யாப். வி. ப. உ௬௧] என வரும்.

இதனுள் யாதானும் ஓரடியை முதலுமுடிவுமாக ளும்வழுவாது வருதலின் அடிமறியாயிற்று.

உச்சரித்தாலும் ஓசையும் பொரு

இனி முச்சீரடி முதலாக அறுசீரடி யீறாக மயங்கிய ஆசிரியத்தினை அடிமயக் காசிரிய மெனவும், வெண்பாவடி மயங்கிய ஆசிரியத்தினை வெள்ளடிமயக்காசிரிய மெனவும், வஞ்சியடி மயங்கிய ஆசிரியத்தினை 1வஞ்சி மயக்காசிரிய மெனவும் வழக்கப் படும். இதற்கு இலக்கணம்:—

'வெண்டளை விரவியு மாசிரியம் விரவியு
மைஞ்சீ ரடியு முளவென மொழிப.' [தொல். செய்-௬௰]

'அறுசீ ரடியே யாசிரியத் தளையொடு
நெறிபெற்று வரூஉ நேரடி முன்னே.' [தொல். செய்-௬௧]

'இயற்சீர் வெள்ளடி யாசிரிய மருங்கி
னிலைக்குரி மரபி னிற்கவும் பெறுமே.' [தொல். செய்-௬௨]

எனவும்,

'ஆசிரிய நடைத்தே வஞ்சி' [தொல். செய்-௱௪]

என ஒற்றுமைப் படுத்துதலானும் கொள்க.

(பி-ம்)—1. வஞ்சியடி.

உதாரணம்:—

'*சிறியகட் பெறினே யெமக்... தவப்பலவே' [புறம் - உங.ந]

இப்பதினேழடியாசிரியத்துள்

ஏழாமடியும் பன்னிரண்டாமடியும்

முச்சீரான் வந்தன:

மூன்றாமடிமுதலாக ஆறாமடியீறாக நான்கடியும் பதினாலாமடியும் ஐஞ்சீரான் வந்தன: இரண்டாமடியும் பதினொன்றாமடியும் அறுசீரான் வந்தன: ஏனைய நாற்சீரான் வந்தன. இவ்வாறு வருதலின் அடிமயங்காசிரிய மாயிற்று.

'எறும்பி யளையிற் குறும்பல் சுனைய

வுலைக்கல் லன்ன

பாறை யேறிக்

கொடுவில்

லெயினர் பகழி மாய்க்குங்

கவலைத்

தென்பவவர் தேர்சென்ற வாறே

ஒதுமற் றவலங்

கொள்ளாது

னொதுமலர்க்

கலிழுமிவ் வழுங்க லூரே.' [குறுந் - ௰௨.]

இதனுள், முதலடி இயற்சீர்

வெள்ளடியாதலின் வெள்ளடி

விரவிய வாசிரிய மெனப்

படும்.

'இருங்கட லுடுத்தவிப் பெருங்கண் மாநில

முடையிலை நடுவண திடைபிறர்க் கின்றித்

தாமே யாண்ட வேமங் காவல

ரிடுதிரை மணலினும் பலரே சுடுபிணக்

காடுபதி யாகப் போகித் தத்த
நாடு பிறர்கொளச் சென்றுமாய்ந் தனரே
அதனால், நீயுங் கேண்மதி யத்தை வீயா
துடம்பொடு நின்ற வுயிரு மில்லை
மடங்க லுண்மை மாயமோ வன்றே
கள்ளி லேய்ந்த முள்ளியம் புறங்காட்டு
வெள்ளில் போகிய வியலு ளாங்க

ணுப்பிலா அ வவிப்புழுக்கல்
கைக்கொண்டு பிறக்குநோக்கா

இழிபிறப்பினோ னீயப்பெற்று
நிலங்கல னாக விலங்குபலி மிசையு
மின்னா வைகல் வாரா முன்னே
செய்ந்நீ முன்னிய வினையே
முந்நீர் வரைப்பக முழுதுடன் றுறந்தே.' [புறம் - ௩௬௩]

இதனுள்,

'உப்பிலா அ வவிப்புழுக்கல்'

என்பது முதலாக மூன்றடியும் வஞ்சியடி.

இனி வஞ்சிப்பா ஆவது வஞ்சியுரிச்சீரானும் ஏனைச்சீரானும் இருசீரடியானும் முச்சீரடியானுந் தூங்கலோசையானும் வந்து தனிச்சொற்பெற்று ஆசிரியச் சுரிதகத்தான் இறுவது. இதற்கு இலக்கணம்:—

* இவ் வுரையாசிரியர் கூறுமாறு இச்செய்யுளை அடிவரையறை செய்தற்கு இயலவில்லை. இவர் கொண்டுள்ள பாடத்தில் வேறுபாடு இருத்தல் கூடும்.



'வஞ்சிச் சீரென வகைபெற் றனவே
வெண்சீ ரல்லா மூவகை யென்ப.' [தொல். செய்-௰௩]

'தன்பா வல்வழித் தானடை வின்றே.' [தொல். செய்-உ௰] 'வஞ்சி மருங்கி னெஞ்சிய வுரிய.' [தொல். செய் - உக] 'வஞ்சி யடியே யிருசீர்த் தாகும்.' [தொல். செய்-சந.]

'முச்சீ ரானும்

வருமிட னுடைத்தே.' [தொல். செய்-சுரு]

'வஞ்சித் தூக்கே

செந்தூக் கியற்றே.' [தொல். செய்-ரு அ]

என்பனவற்றாற் கொள்க.

இப்பா இருசீரடி வஞ்சிப்பா, முச்சீரடி வஞ்சிப்பா என இருவகைப்படும்.

'பூந்தாமரைப் போதலமரத்
தேம்புனலிடை
மீன்றிரிதரும்
வளவயலிடைக் களவயின்மகிழ்
வினைக்கம்பலை மனைச்சிலம்பவும்
மனைச்சிலம்பிய மணமுரசமும்

வயற்கம்பலைக் கயலார்ப்பவும், நாளும்
மகிழின் மகிழ்தூங்

கூரன்

புகழ்த லானும் பெருவண் மையனே.'

[யாப். வி. பக். ௩௩௬]

இது குறளடியான் வந்து தனிச்சொற்பெற்று ஈற்றயலடி முச்சீரான் வந்தது. ஆசிரியச் சுரிதகத்தாலிற்ற இருசீரடிவஞ்சிப்பா தனிச் சொற்பெறுதல் எடுத்தோதிற்றிலரா யினும் 'உரையிற் கோடல்' என்பதனாற் கொள்க.

'கொடிவாலன [1]கருநிறத்தன குறுந்தாளன
வடிவாளெயிற் றழலுளையன வள்ளுகிரன
பணையெருத்தி னிணையரிமா னணையேறித்
துணையில்லாத் [2]துறவுநெறிக் கிறைவனாகி
யெயினடுவே ணினிதிருந் தெல்லோர்க்கும்
பயில்படுவினை [3]பத்தியலாற் செப்பியோன், புணையெனத்
திருவுறு திருந்தடி திசைதொழ
வெருவுறு நாற்கதி வீடுநனி யெளிதே.' [யாப். வி. பக். ௩௩௭]

இது முச்சீரடி வஞ்சிப்பா.

இனி,

'வஞ்சி மருங்கி னெஞ்சிய வுரிய' [தொல். செய். ௨௧]

என் றோதியவதனால் ஆசிரியவடியோடும் வெண்பாவடியோடுங் கலியடியோடும் மயங்கி வருவன கொள்க.

பட்டினப் பாலையுள்,

'நேரிழை மகளி ருணங்குணாக் கவரும்' [௨௨]

என்பது ஆசிரிய வடி:

(பி-ம்)—1. குருகிறந்தன. 2. துரவுசெறி யிறைவளகி. 3. பத்தியிறைத்.



'கோழி யெறிந்த
கொடுங்காற் கனங்குழை' [௨௩]

என்பது வெண்பாவடி:

'வயலாமைப் புழுக்குண்டு வறளடும்பின்
மலர்மலைந்து' [௬௪-௫]

என்பது கலியடி.

இனி வெண்பா வாமாறும்
கலிப்பா வாமாறும் முன்னர்க்காட்டுதும்.
(௱௰௫.)

சூ௱௨௫.

நெடுவெண் பாட்டே குறுவெண் பாட்டே
கைக்கிளை பரிபாட் டங்கதச் செய்யுளோ
டொத்தவை யெல்லாம் வெண்பா
யாப்பின.

என்-னின், வெண்பாவாமாறு உணர்த்துதல் நுதலிற்று.

நெடுவெண்பாட்டு முதலாக அங்கதச்செய்யு ளீறாகச் சொல்லப்பட்டவையும் அளவொத்தவையு மெல்லாம் வெண்பாயாப்பினை யுடைய என்றவாறு.

வெண்பாயாப்பாவது, வெண்சீரானும் இயற்சீரானும் வெண்டளையானும் செப்பலோசையானும் அளவடியானும் முச்சீர்த்தடியானும் வருவது.

இவற்றிற்கு இலக்கணம் மேலோதப்பட்டது. ஈண்டு ஓதப்பட்டனவெல்லாம் இவ்

வாறுவரும் என்றவாறு.

இவையெல்லாம் ஓசையான் ஒக்குமாயினும் அளவானுந் தொடையானும் பொருளானும் இனத்தானும் வேறுபடுத்திக் குறியிடுகின்றார் என்றுகொள்க.

நெடுவெண்பாட்டாவது [1]அளவடியி னெடிய பாட்டு.

குறுவெண்பாட்டாவது [2]அளவடியிற் குறிய பாட்டு.

கைக்கிளையென்பதூஉம் அங்கதமென்பதூஉம் பொருளானாகிய பெயர்.

பரிபாட்டாவது [3]பரிந்த பாட்டாம். அஃதாவது ஒருவெண்பாவாக வருதலின்றிப் [4]பலவுறுப்புக்களோடு தொடர்ந்து ஒருபாட்டாகி முற்றுப்பெறுவது. 'ஒத்தவை' என்பது அளவானும் பொருளானும் இனத்தானும் வேறுபடுக்கப்படாத சமநிலை வெண்பாக்களாம். அவையாவன நான்கடியான் வருவன. இவ்வாசிரியர் நான்கினை அளவென்றும் ஏறினவற்றை நெடிலென்றும் குறைந்தவற்றைக் குறள் சிந்து என்றும் வழங்குவராகலின், [5]இவற்றுள் நெடுவெண்பாட்டும் குறுவெண்பாட்டும் பொருளானும் இனத்தானும் வேறுபடுக்கப்படாத சமநிலை வெண்பாட்டும் என மூவகையானும் வரும்.

குறுவெண்பாட்டாவது இரண்டடியானும் மூன்றடியானும் வரும். உதாரணம்:—

'அறத்தா றிதுவென வேண்டா சிவிகை
பொறுத்தானோ டூர்ந்தா னிடை.' [குறள்-௩௭]

இஃது இரண்டடியும் ஒருதொடையான் வருதலின் குறள்வெண்பா என்ப.

'உருவுகண் டெள்ளாமை வேண்டு முருள்பெருந்தேர்க்
கச்சாணி யன்னா ருடைத்து.' [குறள்-௬௬௭]

(பி-ம்)—1. அளவி. 2. அளவிற். 3. 'பரிந்தபாட்டுப் பரிபாட்டென வரும். 4. பல வெண்பாவாகிப் பலவுறுப்புக்களோடு. 5. வேற்றுப்.

தொல்காப்பியம் - இளம்பூரணம்

இது
விகற்பத்தொடையான் வருதலின்

விகற்பக்குறள் வெண்பா என்ப.

மூன்றடியான் வருவதனைச் சிந்தியல் வெண்பா என வழங்கப்படும்.

உதாரணம்:—

'நறுநீல நெய்தலுங் கொட்டியுந் தீண்டிப்
பிறர்நாட்டுப் பெண்டிர் முடிநாறும் பாரி
பறநாட்டுப் பெண்டி ரடி.' [யாப். வி. ப.
உ.உ.சு]

இஃது ஒத்து

ஒருதொடையான் வருதலின் இன்னிசைச் சிந்தியல் வெண்பாவாம்.

'நற்கொற்ற வாயி லுறங்குவளைத்
தார்கொண்டு
சுற்றுவன்

டார்ப்பப் புடைத்தாளை-பொற்றேரான்
பாலைநல் வாயின் மகள்.' [யாப். வி. ப. ௨௨௬]

எனவும்,

'சுரையாழ வம்மி மிதப்ப வரையனைய
யானைக்கு நீத்து முயற்கு நிலையென்ப
கானக நாடன் சுனை.' [யாப். வி. பக். ௨௨௯]

எனவும் இவை வேறுபட்ட வாம்.

## தொடையான் வருதலின் நேரிசைச் சிந்தியல் வெண்பா

இனி நான்கடியான் வருவன சமனிலை வெண்பா வெனப்படும். அவற்றுள் இரண்டாமடியின் இறுதிக்கண் ஒரூஉத்தொடை பெற்றுவருவனவற்றை நேரிசை வெண்பா எனவும், ஒரூஉத்தொடை பெறாது வருவனவற்றை இன்னிசைவெண்பா எனவும் வழங்கப்படும். ஒரூஉத்தொடை வருக்கவெதுகை யாகியும் வரும். இவையெல்லாம் 'உரையிற் கோடல்' என்பதனாற் கொள்க.

'அறுசுவை யுண்டி யமர்ந்தில்லா ளூட்ட
மறுசிகை நீக்கியுண் டாரும்-வறிஞராய்ச்
சென்றிரப்ப ரோரிடத்துக் கூழெனிற் செல்வமொன்
றுண்டாக வைக்கற்பாற் றன்று.' [நாலடி-க]

இது நேரிசை வெண்பா.

'கல்வரை யேறிக் கடுவன் கனிவாழை
யெல்லுறு போழ்தி [1]னினிய பழங்கைக்கொண்
[2]டொல்லொலோ யோடு மலைநாடன் றன்கேண்மை
சொல்லச் சொரியும் வளை.' [கைந்நிலை-எ]

இஃது இன்னிசை வெண்பா.

'வளம்பட வேண்டாதார் யார்யாரு மில்லை
யளந்தன போக மவரவ ராற்றான்
விளங்காய் திரட்டினா ரில்லைக் - களங்கனியைக்
காரெனச் செய்தாரு மில்' [நாலடி-ஙஙு]

நான்கடியாயும் மூன்றாமடிக்கண் தனிச்சொற் பெற்று வருதலின் நேரிசைப்படும். பிறவுமன்ன.

(பி-ம்)—1. னினிய பழங்கொண்டே. 2. யெல்லையே.

/

# பொருளதிகாரம் - செய்யுளியல்

சா௱எ

ஐந்தடி முதற் பன்னிரண்டடிகாறும் வருவன பஃறொடை வெண்பா எனப்படும். இதனுள்ளும் ஒரூஉத்தொடை பெற்று வருவனவற்றை நேரிசைப் பஃறொடை எனவும், ஒரூஉத்தொடையின்றி வருவனவற்றை இன்னிசைப் பஃறொடை யெனவும் வழங்கப்படும்.

'சேற்றுகா லீலஞ் செருவென்ற வேந்தன்வேற்
கூற்றுறழ் மொய்ம்பிற் பகழி பொருகயல்
தோற்றந் தொழில் வடிவு
தம்முட் டடுமாற்றம்
வேற்றுமை யின்றியே யொத்தன
மாவேட
ராற்றுக்கா லாட்டியர் கண்' [யாப். வி.
பக். உ௩௬]

இஃது இன்னிசைப்
பஃறொடை.

'பன்மாடக் கூடல் மதுரை
நெடுந்தெருவி
லென்னோடு நின்றா ரிருவ-ரவருள்ளும்
பொன்னோடை நன்றென்றா ளல்லளே
-பொன்னோடைக்

இயானைநன் றென்றாளு
மங்கிலையள் - யானை

வெருத்தத் திருந்த விலங்கிலைவேற்
றென்னன்

றிருக்கார்நன் றென்றேன் றியேன்.'

[யாப். வி. பக். உ௩௯]

இஃது ஆறடியான் வந்து
ஒரூஉத்தொடை பெறுதலின்
நேரிசைப் பஃறொடை வெண்பா.

'சிற்றாறு

1பாய்ந்துகளுஞ் சேயரிக் கண்ணிணாய்

வற்று வளவயலும் வாய்:மாண்ட வேரியும்
மற்றூர்ப் பிணிக்கு மதிலும் படுகிடங்கு
மொப்ப வுடைத்தா யொலியோவா நீர்ப்புட்க
டத்தி [3]யிரைதேருந் தையலாய் நின்னூர்ப்பே
ரொத்துணரும் வண்ண முரைத்தி யெனக்கூறக்
கட்டலர் தாமரையு மேழுங் கலிமான்றேர்க்
கத்திருவ ரைவருங் காயா [4]மரமொன்றும்
பெற்றவழி தேர்ந்தண்ணும் பேயி னிருந்தலையும்
வித்தாகா நெல்லி னிறுதியும் பெற்றக்கா
லொத்தியைந்த தெம்மூர்ப்பேர் போலென்றாள் வானவன்கை
விற்பொலிந்த வெம்புருவத் தாள்.' [யாப். வி. ப. உ௩௭]

இது பன்னிரண்டடியான் வந்த இன்னிசைப் பஃறொடைவெண்பா. ஏனையவும் வந்தவழிக் கண்டுகொள்க.

இவற்றுள்,

'ஒருபொரு ணுதலிய வெள்ளடி யியலாற்
றிரிபின்றி [5]நடப்பது கலிவெண் பாட்டே.' [தொல். செய்-௱௪௭]

என ஓதினமையாற் புணர்தன் முதலாகிய பொருள்களுள் யாதானு மொருபொருளைக் குறித்துத் [6]திரிபின்றி முடியும் பஃறொடைவெண்பாவினைக் கலிவெண்பா எனவும்,

(பி-ம்)—1. பாய்ந்தொழுகும். 2. முற்றூப். 3. யிரைமேயுக். 4. மரம்பொன்றும். 5. முடிவது. 6. திறனின்றி.

குறள்வெண்பா முதலாகிய எல்லா வெண்பாக்களுங் கொச்சகக்கலிக்கு உறுப்பாய் வரிற் கொச்சக மெனவும், பரிபாடற்கு உறுப்பாய்வரிற் பரிபாட லெனவுங் கொள்ளப்படும்.

கைக்கிளை என்பது கைக்கிளைப் பொருண்மை. மேற்சொல்லப்பட்ட வெண்பாக்கள் இப்பொருண்மேல் வரிற் கைக்கிளைவெண்பா எனப்படும்.

'பொன்னுய மார்பிற் புனைகழற்காற் கிள்ளிபே
ருன்னேனென் றூழலக்கை பற்றினேற்—கன்னே
மனஞேடு வாயெல்லா மல்குநீர்க் கோழிப்
புனனுடன் பேரே வரும்.' [யாப். வி. பக். ௬௨]

கைக்கிளை வெண்பாயாப்பினுல் வரும் எனவே, ஆசிரியப் பாவினுல் வரப்பெருதென் பதும் வந்ததேயாயினும் பாடாண்பாட்டுக் கைக்கிளையாகு மெனவும் கொள்ளப்படும். பரிபாட்டும் அங்கதமும் தத்தஞ் சிறப்புச் சூத்திரத்துட் [1]சொல்லுதும். (௱௰௪)

௪௱௨௪. கைக்கிளை தானே வெண்பா வாகி
யாசிரிய வியலான் முடியவும் பெறுமே.

என்-னின், எய்தியதன்மேற் சிறப்புவிதி யுணர்த்துதல் நுதலிற்று.

கைக்கிளைப் பொருண்மை வெண்பாவினுல் வருதலின்றி முதலிரண்டடியும் வெண்பாவாகிக்

கடையிரண்டடியும் ஆசிரியமாகி
இருபாவினுலும் வரும் என்றவாறு.

இவ்வாறு வருவதனை மருட்பா என்ப. இக்கருத்தினானே மேல்

'மருட்பா வேனை யிருசா ரல்லது
தானிது வென்னுந் தன்மை யின்றே'
[தொல். செய்-அக]

என ஓதினர் என்றுகொள்க. அது

'உரவொலி முந்நீ ருலாய்நிமிர்ந் தன்ன
கரவரு காமங் கனல
-விரவெதிர
முள்ளெயி றிலங்கு முகிணகை
வெள்வளை நல்காள் வீடுமென் னுயிரே.'

என வரும்.

சா௨௫. பரிபா டல்லே
தொகைநிலை வகையி
னிதுபா வென்னு மியனெறி
யின்றிப்

[பு-வெ.கைக்கிளை-௯]

(௩௰௫)

பொதுவாய் நிற்றற்கு முரித்தென

மொழிப.

என்-னின், பரிபாடலாமாறு

உணர்த்துதல் நுதலிற்று.

பரிபாடலாவது தொகைநிலை வகையாற் பா இது என்று சொல்லப்படும் இலக்கணம் இன்றி எல்லாப்பாவிற்கும் பொதுவாய் நிற்றற்கு முரித்தென்று சொல்லுவர் என்றவாறு.

உம்மை எச்சவும்மையாகலான் இலக்கணங் கூறவும்படும். அது வருகின்ற சூத்திரத் துட் காட்டுதும்.

(பி-ம்)—1. காட்டுதும்.

# பொருளதிகாரம் - செய்யுளியல்

சூ௧௧௯

பொதுவாய் நிற்றலாவது

'ஆசிரியம் வஞ்சி வெண்பா கலி மருட்பா' [செய்யுளியல்-௱௪]

என்றோதப்பட்ட எல்லாப்பாவின் உறுப்பு[ம்] உடைத்தாதல். (௱௰௪)

சூ௱௨௰

கொச்சக மராகஞ் சுரிதக மெருத்தொடு
செப்பிய நான்குந் தனக்குறுப் பாகக்
காமங் கண்ணிய நிலைமைத் தாகும்.

என்-னின், இதுவுமது.

மேற்சொல்லப்பட்ட [1]பரிபாடற்
பாட்டுப் பொதுவாய் நிற்றலேயன்றிக்
கொச்சகமும் அராகமும் சுரிதகமும்
[2]எருத்தும் என்று சொல்லப்பட்ட
நான்குந் தனக்குறுப்பாகக் [3]காமங் கண்ணிய
நிலைமையை உடைத்து என்றவாறு.

எனவே, அறத்தினும்
பொருளினும் வாராதாம்.

'வாழ்த்தியல் வகையே நாற்பாக்கு

முரித்தே.' [தொல். செய்-ாகு]

எனச் சிறப்புவிதி யோதினமையால் நான்கு பாவினும் பரிபாடல் வெண்பாயாப் பிற்றதலிற் கடவுள் வாழ்த்தாகியும் வரப்பெறும். கொச்சகமென்பது ஐஞ்சீரடுக்கி வருவனவும் ஆசிரியவடி, வெண்பாவடி, வஞ்சியடி, கலியடி, சொற்சீரடி, முடுகியலடி என்று சொல்லப்பட்ட அறுவகை யடியானும் அமைந்தபாக்களை யுறுப்பாக வுடைத்தாகி வெண்பாவியலாற் புலப்படத் தோன்றுவது. இதனுட்

'சொற்சீ ரடியும் முடுகிய லடியும்
அப்பா நிலைமைக் குரிய வாகும்.' [செய்யுளியல்-ாயஅ]

என வேறு ஓதுதலின்,

ஏனைநான்குங் கொச்சகப் பொருளாகக் கொள்ளப்படும்:

'தரவும் போக்கு மிடையிடை மிடைந்து
மைஞ்சீ ரடுக்கியு மாறுமெய் பெற்றும்
வெண்பா வியலான் வெளிப்படத் தோன்றும்
பாநிலை வகையே கொச்சகக் கலியென
நூனவில் புலவர் நுவன்றறைந் தனரே.' [செய்யுளியல்-ாசஅ]

என்றாராகலின். இவ்விலக்கணத்தானே பரிபாடலுட் கொச்சகம் வரும்வழித் தாவுஞ் சுரிதகமும் இடையிடை [4]வருதலுங் கொள்க. 'வெண்பாவியலான்' என்றதனுல் தன்றளையானும் பிறதளையானும் வந்து ஈற்றடி முச்சீரான் வருவன வெல்லாங் கொள்க.

அராகமென்பது ஈரடியானும் பலவடியானுங் குற்றெழுத்து நெருங்கி வாத்தொடைப் பது. பெருமைக்கெல்லை ஆறடி. என்னை?

'[5]அராகந் தாமே நான்கா யொரோவொன்று
வீதலு முடைய ரூவிரண் டடியே.'

'ஈரடி யாகு மிழிபிற் கெல்லை.'

என அகத்தியனார் ஓதுதலின்.

(பி-ம்)—1. பரிபாட்டு. 2. எருத்சமுர். 3. கலிமருட்பாவென் றோதப்பட்ட எல்லாப் பாவின் உறுப்புடைத்தாதல். 4. மிடைகளுர். 5. ஆரடியராகக்.



சாயி



சுரிதகம் என்பது ஆசிரியவியலானாதல் வெண்பாவியலானாதல் பாட்டிற் கருதிய பொருளை முடித்து நிற்பது.

எருத்தென்பது இரண்டடி யிழிபாகப் பத்தடிப் பெருமையாக வருவதோ ருறுப்பு, பாட்டிற்கு முகம் தரவாதலானுங் கால் சுரிதகமாதலானும் இடைநிலைப் பாட்டாகிய தாழிசை

யுங் கொச்சகமு மராகமுங் கொள்ளக் கிடத்தலின் எருத்தென்பது கழுத்தின்

புறத்திற்

குப் பெயராக வேண்டுமாதலான்

அவ்வுறுப்புத் தரவைச் சார்ந்து கிடத்தல்

வேண்டு

மென்று கொள்க.

• 'தரவே யெருத்த

மராசக் கொச்சக

மடக்கியல் வகையோ டைந்துறுப்

புடைத்தே.'

என்பது அகத்தியமாதலின் தரவென்பதோருறுப்புக் கோடல் வேண்டுமெனின், இவ்வாசிரியர் 'கொச்சகம்' என ஓதியவதனானே தரவும் அவ்விலக்கணத்திற் படுமென்பது ஒன்று. எருத்து என்பது இவ்வாசிரியர் கருத்தினால் தரவென்பது போலும்.

பரிபாடற்கண் மலையும் யாறும் ஊரும் வருணிக்கப்படும்.

'அதுதான், மலையே யாறே [1]யூரென்

றிவற்றி

னிலைபெறு மரபி னீங்கா தாகும்.'

என்றாகலின். இனிச்

சுரிதகமின்றியும் பரிபாடன்

முற்றுப்பெறும்:

'கொச்சக வகையி னென்ஞெடு விராஅ
[2]யடக்கிய லின்றி யடங்கவும் பெறுமே.'
என அகத்தியனார் ஓதுதலின்.

(௩௰௭)

சஉ௭.

சொற்சீ ரடியு முடுகிய லடியு
மப்பா நிலைமைக் குரிய வாகும்.

என்-னின், இதுவுமது.

சொற்சீரடியும் முடுகியலடியும் பரிபாடற்கு உரியவாகும் என்றவாறு.

சொற்சீரடியாவது வருகின்ற சூத்திரத்துட் காட்டுதும்.

முடுகியலாவது ஐந்தடியானும் ஆறடியானும் எழடியானுங் குற்றெழுத்துப் பயிலத் தொடுப்பது.

(௩௰௮)

சாஉ௮. கட்டுரை வகைபா னெண்ணொடு புணர்ந்து
முற்றடி யின்றிக் குறைவுசீர்த் தாகியு
[3]மொழியசை யாகியும் வழியசை புணர்த்துஞ்
சொற்சீர்த் திறுதல் சொற்சீர்க் கியல்பே.

என்-னின், [4]சொற்சீராமாறு உணர்த்துதல் நுதலிற்று.

கட்டுரையாவது பாட்டின்றித் தொடுக்கப்பட்டுவருவது.

எண்ணென்பது ஈரடியாற் பலவாகியும் ஓரடியாற் பலவாகியும் வருதல். பலவருதலின் எண்ணென்றார்.

---

பி-ம்;—1. பூரேயவற்றி. 2. ...டக்கியல் வகையினடக்கவும். 3. மொழியிசை யாகியும் வழியிசை புணர்த்துஞ். 4. சொற்சீரடியாமாறு.

# பொருளதிகாரம் - செய்யுளியல்

சாயக

'முற்றடி யின்றிக் குறைவுசீர்த் தாகியும்' என்பது நாற்சீரடியின்றி முச்சீரடியானும்

இருசீரடியானும் வருதல.

1'ஒழியசையாகியும்' என்றது ஒழிந்த அசையினை யுடைத்தாகியும் என்றவாறு. எனவே இறுதிச்சீர் ஒன்றும் இரண்டும் அசை குறையப்பெறும் என்றவாறும்.

வழியசை புணர்த்தலாவது ஒரு சீரின்கண்ணே 2பிறிதொருசீர் வரத் தொடாது ஓரசைவரத் தொடுப்பது.

சொற்சீர்த்திறுதல் என்பது சொற்றானே சீராந்தன்மையைப் பெற்று நிற்றல். சொற்சீர்க்கியல்பே என்றது இப்பெற்றியை யுடைத்தச் சொற்சீரினதியல்பு என்றவாறு.

இவ்விலக்கணம் பரிபாடற் செய்யுட்கண் வருமாறு:—

'ஆயிரம் விரித்த வணங்குடை யருந்தலைத்
தீயுமிழ் [தி]றலொடு முடிமிசை யணவர
மாயுடை மலர்மார்பின் மையில்வால் வளைமேனிச்
சேயுயர் பனைமிசை யெழில்மே[ழி யே]ந்திய
வாய்வாங்கு வளைநாஞ்சி லொருகுழை யொருவனை;

இது தரவு.

3எரிமலர் சினைஇய கண்ணை பூவை
விரிமலர் புரையு மேனியை மேனித்
திருஞெமர்ந் தமர்ந்த மார்பினை மார்பிற்
றெரிமணி விளக்கும் பூணினை மால்வரை
யெரிதிரிந் தன்ன பொன்புனை யுடுக்கையை
சேவலங் கொடியோய்நின் வலவயி னிறுத்து

4மேவ லுழந்தமை கூறு
நாவ லந்தண ரருமறைப் பொருளே;

பொரெழுக்துடன் றிரைத்துரைஇய
தானவர்
சிரழிப் புனல்மொழி பிழந்தர
முதிர்பதிரப்பல புலவர்தொடவமர்
வென்றகணை;
இவை நான்கும் அராகம்.

பொருவ மென்ற மறந்தபக் கடந்து
செருவிடம்
படுத்தது செயிர்தீ ரண்ண

விருவர்
தாதை யிலங்குமுன் மாஅன்
றெருள ரின்வர வறிதன்
மருளறு தேர்ச்சி முனைவர்க்கு மரிது;

இஃது ஆசிரியம்.

அன்ன மாபி னனையோய் நின்னை
யின்னனென் றுரைத்த லெமக்கெவ
னெளிது;

இது பேரெண்.

அருமைநற் கறியினு மாய நிற்பயில்
பெருமையின் வல்லா யாமிவண் மொழிபவை
மெல்லிய வெனாஅது வெறாஅ

தல்லியக் திருமார்ப நீயருவல்
வேண்டும்;

இதுவும் ஆசிரியம்.

விறன்மிகு விழுச்சீ ரந்தணர் காக்கு
மறனு மா[ர்]வலர்க் கருளு 'நீ;
திறனிலோ[ர்]த் திருத்திய தீதுதீர் கொள்கை
மறனு மாற்றலர்க் கணங்கு நீ;

அங்கண் வானத் தவெ்ளிலாத் திகழ்தரும்
திங்களுந் தெறுகதிர்க் கனலியு நீ;
ஐந்தலை யு[ய]ரிய வணக்குடை யருந்திறன்
மைந்துடை யொருவனு மடங்கலு நீ;
கலமுழு தளஇய புகாறு காட்சிப்
புலம்பு வின்று ணாற்றமு நீ;
வலனுய ரெழிலியு மாக விசும்பு
நிலனு மீடிய விமயமு நீ;
இவை யாறும் பேரெண்.

அதனால்;

## தனிச்சொல்.

இன்னோ ரனையை யினையை யாலென
வன்னோர் யாமி[வ]ட் காணு மையிற்
பொன்னணி நேமி வலங்கொண் டேந்திய
மன்னிய முதல்வனை யாகலி
னின்னோ ரனையைநின் புகழொடும் பொலிந்தே;

இது சுரிதகம்.

# பொருளதிகாரம் -

## செய்யுளியல்

அன்றெனின்,

நின்ஞெக்கும் புகழ்

நி[ழ]லவை பொங்ஞெக்கு

முடையவை

புள்ளின் கொடியவை புரிவளை யினவை

எள்ளுநர்க் கடந்திட்ட விகனேமியவை

மண்ணுற்ற மணிபா யுருவினவை

[illegible]

எண்ணிறந்த புகழவை யெழின்மார்

பினவை;

இவை சிற்றெண்ணும்,

இடையெண்ணும், அளவெண்ணும்.

ஆங்கு;

## தனிச்சொல்.

காமரு சுற்றமொ டொருங்குநின் னடியுறை
யாமியைந் தொன்றுபு வைகலும் பொலிகென

வேமுறு நெஞ்சத்தேம் பரவுதும்
வாய்மொழி முதல்வநின் றாணிழற் றொழுதே.

இது சுரிதகம்.

இது கடவுள்வாழ்த்து. ஈண்டோதப்பட்ட வுறுப்புக்கள் மிக்குங்குறைந்தும் வருதல் இப்பாவிற் கியல்பென்று கொள்க. பிறவும் பரிபாடலகத்துக் கண்டுகொள்க.

'மாநிலந் தோன்றாமை மலிபெய னிலைஇ
யேமநீ ரெழில்வான மிகுத்தரும் பொழுதினா
னாகநீண் மணிவரை நறுமலர் பலவிரைஇக்
காமரு வையை கடுகின்றே கூடல் ;

நீரணி [1]கொண்டன்று வையை யெனவிரும்பித்
தாரணி கொண்ட வுவகை தலைக்கூடி
[2]யூரணி கோல மொருவ ரொருவரிற்
சேரணி கொண்டு நிரமொன்று வெவ்வேறு
நீரணி கொண்ட நிறையணி யங்காடி
யேரணி கொண்டா ரிகல்;

கைபுனை தாரினர் கண்ணிய
ரையெனு [3]மாலிய ராடையர்
தெய்யணி கூர்தலர் பித்தையர்
[4]மெய்யணி யானை மிசைக்கொண் டோய்யெனத்
தன்காச் சிறப்பித் றளிரியலார் செல்லப்
பொங்கு புரவிப்புடைப் போவோரும் பொங்குசேர்
வையமூர் தேரு [5]மமைவோரு [6]மெவ்வாயும்
[7]பொய்யாய்போ யென்னுப் புடை படைகூட்டிப் போவார்
மெய்யாப்பு மெய்யார மூடுவார் வையத்துக்
கூடுவா ரூட லொழிப்பா ருணர்குவா

(பி-ம்)—1. கொண்டன் றுவகை தலைக்கூட்டிய. 2. வாரணி. 3. மாடைய. 4. செய் யணியானை மிசையரா பொய்யெனத். 5. பமைப்போரு. 6. மெய்வாயு. 7. பேயென்னுப் புனைபடக் கூட்டிப் போவர்.



ராடுவார் பாடுவா ரார்ப்பார் நகுவார்கக்
கோடுவா ரோடித் தனர்வார்போ யுற்றவரைத்
தேடுவா ரூர்க்குத் திரிவா ரிலராகிக்
கற்றாருங் கல்லா தவருங் கயவரும்
பெற்றாரும் பெற்றார்ப் பிழையாத பெண்டிரும்
பொற்றேரான் றானும் பொலம்புரிசைக் கூடலு
முற்றின்று வையைத் துறை;

துறையாடுங் காதலர் தோள்புணை யாக

1மறையாடு வாரை யறியார் மயங்கிப்
பிறையேர் நுதலிய ரெல்லாருந் தம்மு
ளிகழு நிகழ்ச்சி யெம்பாலென் றுங்கே
2புகலுவ செல்வ நினைத்தெவட்
கண்டிப்பா

3லகலல்கும்

வையைத் துறை;

காதலான் மார்பிற் கமழ்தார்
புனல்வாங்கி

யேதிலாள் கூந்த
4லிடக்கண்டு மற்றது

தாதாவென் றூட்குத் தானே
புனர்ந்து

வேய்தந்த தென்னை

விளங்குதலை மற்றது

நோதலே [5]செய்யே

னுணங்கிழையா யச்செவ்வி

போதலுண் டாங்கொ லறிந்து

புனல்புணர்த்த

தோஒ பெரிதும் வியப்பு;

[6]கேயத்தகப் பூப்பெய்த காமக்

கிழமை

நயத்தகு நல்லாளைக் கூடுமா

கூடு

முயக்குக்குச் [7]செல்வல்

முலையு முயக்கத்து

நீரு மவட்குத்

துணைக்கண்ணி னீர்விட்டோய்

நீயு மவட்குத் துணை;

பணிவி லுயர்சிறப்பிற்

பஞ்சவன் கூடன்
மணியெழின் மாமேனி முத்த
முறுவ
லணிபவளச் செவ்வா
யறங்காவற் பெண்டிர்
மணியணி தம்முரிமை
மைந்தரோ [8]டாடத்
தணிவின் றுவைவையப் புன
ல்;

[9]புனலூடு போவதோர் பூமாலை கொண்டை
யெனலூழ் வகையெய்திற் றென்றேற்றுக் கொண்டை
புனலூடு நாடமர்யப் பூமாலை யப்பி
[10]நினைவாரை நெஞ்சிடுக்கண் செய்யுங் கனல்புடன்
கூடாமுன் னூடல் கொடியதிறங் கூடினு
[11]லாடாளோ ஆர்க்கலர் வந்து;
எனவாங்கு,

(பி-ம்)—1. மரைபாடு. 2. பிகல்பலசெல்ப விளைத்தவவட். 3. லசலும் பையைத் தது, 4. விடைக்கண்டு. 5. செய்தே. 6. சயத்தக்க. 7. செவ்வி. 8. டாடித். 9. புனலோடு போய்துராய்ப். 10. நினைப்பாரை நெஞ்சிடுேக்கண் செய்யுங்கா லன்புடன். 11. ளுடானோ ஞர்த்தலர் வக்துர்க்து.

# பொருளதிகாரம் - செய்யுளியல

சூ. ௭௰௫

ஈப்பா யடுநறாக் கொண்டதிவ் வியாறெனப்
பார்ப்பா ரொழிந்தார் படிவு;

மைந்தர் மகளிர் மணவிரை [1]பூசிற்றென்
றந்தணர் [2]தோயல ராறு;
வையைத் [3]தேமொழி வழுவழுப் புற்றென
வையர்வாய் பூசுறா ராறு;

4விரையுரி விரைதுறை கரையழி பிழியூர ஊர்தரும் புனல்
கரையொடு கடலிடை வரையொடு கடலிடை நிரைநிரை சீர்தருநுரை
நுரையுடன் மதகுதொ மிழ்தரு புனல்கரை புரளிய செலமறிகடல்
புகுமள வளவிய விசநிறை தணிவின்று வெள்ளமிசை;

வரைபல புரையுயர் கயிறணி பபெருழில்
மணியணி யானைமிசை மைந்தரு மடவாரு
நிரைநிரை குழீஇயின ருடன்சென்று
குருமணி யானை யியறேர்ப் பொருநன்
திருமருத முன்றுறை முற்றங்
குறுகித்
தெரிமருதம் பாடும் பிணிதோள்யாழ்ப்
பாணர்
பாய் புனலாட
லாடி யாடி யருளியவ
ரூடி யூடி யுணர்த்தப் புகன்று
கூடிக் கூடி மகிழ்பு மகிழ்பு
தேடித் தேடிச் சிதைசிதைபூச்
சூடிச் சூடிக்கை தொழுது தொழுது
மிழுதொடு நின்ற புனல் வையை

விழுதொடை நல்லாரு மைத்தரு மாடி
யமிழ்வது
போன்றதிந் நீர்குணக்குச் சான்றீர்
முழுவது மிச்சிலா
வுண்டு;
சாந்துங் கமழ்தாருங் கோதையுஞ்
சுண்ணமுங்
கூந்தலும் பித்தையுஞ் சோர்ந்தன
பூவினு மல்லாற் சிறிதானு நீர் நிறந்தா
வாறென் றிவ்வையை யாறு;
மழைநீர்க் குளத்து வாய்பூசி யாடுங்
கழுநீர மஞ்சனக் குங்குமக் கலக்கல்
வழிநீர வீழுநீரன்று வையை;

வெருவரு கொல்லியானை வீக்குதோள் மாற
னுருகெழு கூட லவரொடும் வையை
வருபுன லாடிய தன்மை பொருவுங்கா
லிருமுந்நீர் வையம் பிடித்தென்னை யானூர்க்
கொருநிலையு மாற்ற வியையா வருமாவி
லந்தர வான்யாற் றாயிரங் கண்ணினு
னிந்திர னாடுந் தகைத்து. (௩௰௧)

இது காமப்பொருளாகி வரும் வெண்பா மிக்குவந்த பாட்டு.

(பி-ம்)—1. துவிற்றென். 2. துவல்லா. 3. தேமெய்; தேமேவ. 4. விரைபிரை.

# தொல்காப்பியம் - இளம்பூரணம்

சாஉக.

அங்கதந் தானே யரில்தபத் தெரியிற்
செம்பொருள் கரந்த தெனவிரு வகைத்தே.

என்-னின், அங்கதச்

செய்யுளாமாறு உணர்த்துதல் நுதலிற்று.

அங்கதமாவது குற்றமற ஆராயிற் செம்பொரு ளெனவும், கரந்த தெனவும் இரு வகைப்படும் என்றவாறு. அவை முன்னர்க் காட்டுதும். (சாஉக)

சாஉஉ. செம்பொரு ளாயின வசையெனப் படுமே.

என்-னின், செம்பொருளாகிய அங்கதம் உணர்த்துதல் நுதலிற்று.

செம்பொருளங்கதம்
வசையெனப் பெயர்பெறும் என்றவாறு.

(௩௨௧)

௪௩௧. மொழிகரந்து
மொழியினது பழிகரப் பாகும்.

என்-னின், மறைபொருளாகிய
அங்கதம் உணர்த்துதல் நுதலிற்று.

தான்மொழியும் மொழியை
மறைத்து மொழியின் அது
பழிகரப்பென்ப் பெயர்
பெறும் என்றவாறு.

(௩௨௨)

௪௩௨. செய்யுட் டாமே
யிரண்டென மொழிப.

என்-னின்,

மேற்சொல்லப்பட்டன

தொகுத்துணர்த்துதல் நுதலிற்று.

ஈண்டு, தம்மாற் சொல்லப் :

வாறு.

ட செய்யுள் இரண்டுவகை என்று சொல்லுவர் என்ற

அவை முன்னர்க் காட்டுதும்.

(ஈஉ ;,)

சாரு. ரு.

புகழொடும் பொருளொடும் புணர்ந்தன் றாயிற்
செவியுறைச் செய்யு ளென்மனார் புலவர்.

என்-னின், செய்யுளைப் பாகுபடுத்தலை உணர்த்துதல் நுதலிற்று.

புகழொடும் பொருளொடும் புணரவரிற் செவியுறைச்செய்யுள் என்று சொல்லுவர் என்றவாறு.

(ஈஉச)

சாஙச. வகையொடு நகையொடும் புணர்ந்தன் ருயி
னங்கதச் செய்யு ளென்மனார் புலவர்.

என்-னின், இதுவுமது.

வகையொடும் நகையொடும்

பெறும் என்றவாறு.

புணர்ந்தசெய்யுள்

அங்கதச் செய்யுள் எனப் பெயர்

எனவே இருவாற்றானும் செய்யுட் செய்யப்பெறும் என்றவாறு.

(ஙஉரு)

ஶ ாஙரு.

ஒத்தா ழிசைக்கலி கலிவெண் பாட்டே
கொச்சக முறழொடு கலிநால் வகைத்தே.

என்-னின், இனிக் கலிப்பாப் பாகுபடுமாறு உணர்த்துதல் நுதலிற்று.

ஒத்தாழிசைக் கலியும் கலிவெண்பாட்டும் கொச்சகமும் உறழ்கலியும் என நான்கு வகைப்படும் கலிப்பா என்றவாறு.

அவையாமாறு முன்னர்க் காட்டுதும்.

'இருவயி னொத்து மொவ்வா வியலினுந்
தெரியிழை மகளிரொடு மைந்தரிடை வரூஉங்



கலப்பே யாயினும் புலப்பே யாயினு
மமர்திணை மரபி னறிவரத் தோன்றிப்
பொலிவொடு புணர்ந்த பொருட்டிற முடையது
கலியெனப் படுஉங் காட்சித் தாகும்.'

என்று அகத்தியனார் ஓதுதலின் கலிப்பா அகப்பொருளென வழங்கும். (ாஉக)

**சாாஙரு. அவற்றுள்,**

**ஒத்தா ழிசைக்கலி யிருவகைத்**

**தாகும்.**

என்-னின், ஒத்தாழிசைக் கலி பாகுபடுமாறு உணர்த்துதல் நுதலிற்று.
ஒத்தாழிசைக் கலி யிரண்டு வகைப்படும் என்றவாறு.

அவை முன்னர்க் காட்டுதும்.

(௱௨௭)

சூ. ௱௩௭. இடைநிலைப்

பாட்டே தரவுபோக் [1]கடையென

[2]நடைநவின்

றொழுகு மொன்றென மொழிப.

என்-னின், ஒத்தாழிசைக்கலி

பாகுபடுமாறு உணர்த்துதல் நுதலிற்று.

தாழிசையுந் தரவுஞ்

சுரிதகமும் [3]அடைநிலைக்கிளவியு மென

நான்கு உறுப்பினை

யுடைத்து ஒத்தாழிசைக்கலி

என்றவாறு.

4தரவு தாழிசை தனிச்சொல்

சுரிதகம் எனக் கிடக்கை முறையாற்

கூறுநு தாழிசை

முற்கூறிய வகையான் இப்பாவிற்கும் ஒத்தாழிசை சிறந்ததாதலின் முற்கூறினர். முற்கூறுகின்றவழியும் 'இடைநிலைப்பாட்டே' எனக்கூறுதலின் 5முந்துற்றது தரவு என்றவாறும். இடைநிலைப்பாட்டெனினும் தாழிசையெனினும் ஒக்கும். போக்கெனினும் சுரிதகம் எனினும் வாரம் எனினும் அடக்கியல் எனினு மொக்கும். அடை எனினும் தனிச்சொல் எனினும் ஒக்கும். தனிச்சொல்லைப் பின் னெண்ணியவதனான் தாழிசைதோறுந் தனிச் சொல் வரவும் பெறும் என்றுகொள்க. (௱௨௮)

௱௨௯. தரவே தானு

6நாலடி யிழிபா

யாறிரண் டுயர்வும் பிறவும்

பெறுமே.

என்-னின், தரவிற்கு அடிவரையறை யுணர்த்துதல் நுதலிற்று.

தரவு நாலடியிழிபாகப் பன்னிரண்டடியுயர்பாக, இடைவரும் அடியெல்லாவற்றானும் வரப்பெறும் என்றுகொள்க. (௱௨௯)

௱௩௰. இடைநிலைப் பாட்டே,

தரவகப் பட்ட மரபின வென்ப.

என்-னின், தாழிசைக்கு அடியாமாறு உணர்த்துதல் நுதலிற்று.

தாழிசைகள் தரவிற் சுருங்கிவரும் என்றவாறு.

'தரவகப்பட்ட மரபின' என்றதனுல் தரவிற்கு ஓதப்பட்ட நான்கடியின் மிகா தென்பதூஉம், மூன்றடியானும் இரண்டடியானும் வரப்பெறும் என்பதூஉம் கொள்க.

1. இடையெண. 2 கடைபயின். 3 இடைநிலைக் கிளவி. 4 இவை முறையினுல் தரவு தாழிசை தனிச்சொல் சுரிதகம் எனக் கிடக்கைமுறையாகே கூறுது தாழிசையை முற்கூறியவதனுல் இப்பாவிற்கும் ஒத்தாழிசை சிறந்ததாக முற்கூறினர். 5 முந்துறத். 6 காலிரண்டிழிபா வாறிரண்டுயர வேறவும் பெறுமே.





சாடுஅ

வருகின்ற சூத்திரத்துள் "ஒத்த மூன்ருகு மொத்தா ழிசையே" [செய்-௱௬௭] எனக் கூறுதலானும் இப்பாவினை ஒத்தாழிசைக்கலி யெனக் கூறுதலானுந் தாழிசை ஒருபொருண்மேல் மூன்றடுக்கி வருமென்று கொள்க. (௱௬௰)

சாசம. [1]அடைநிலைக் கிளவி தாழிசைப் பின்னர்

நடைநவின் றொழுகு மாங்கென மொழிப.

என்-னின், தனிச்சொல்லாமாறு உணர்த்துதல் நுதலிற்று.

அடைநிலைக் கிளவியாகிய தனிச்சொல் தாழிசைப் பின்னர் நடத்தலைப் பயின் றொழுகும் எனச் சொல்லுவர் என்றவாறு.

ஆங்கு அசை. தாழிசைப் பின்னர் நடத்தலைப் பயின்றொழுகு மெனவே, தாழிசைக்கு முன்னர்வருதலும் சிறுபான்மை உளதென்று கொள்க. (௱௬௧)

சாசக. போக்கியல் வகையே வைப்பெனப் படுமே

தரவிய லொத்து மதனகப் படுமே

புரைதீ ரிறுதி நிலையுரைத் தன்றே.

என்-னின், சுரிதகமாமாறு உணர்த்துதல் நுதலிற்று.

சுரிதகம் என்பது
வைப்பெனவும் படும். அது தரவோ
டொத்த அளவிற்றாகியும்
அதனிற்குறைந்த அளவிற்றாகியும்
குற்றந்தீர்ந்த பாட்டி லிறுதிநிலையை
உரைத்ததென்ற வாறு.
தரவியலொத்தலாவது சிறுமை
நான்கடி[யாகியும்]பெருமை
பன்னிரண்டடி யாகி [யும்]வருதல்.
அதனகப்படுதலாவது சிறுமை
மூன்றடியானும் இரண்டடியானும்
வருதல். இச்சூத்திரங்கள்
ஓதினமுறையானே பாட்டு
வருமென்றுகொள்க. மேல் துள்ள
லோசைத் தாகியும், நிரைமுதலாகிய
வெண்பாவுரிச்சீர் மிக்கும், சுரிதகம்
ஆசிரியத்தானுதல் வெண்பா வானுதல்

வருமெனவுங் கூறிய இலக்கணங்களும் அறிந்து கொள்க.

உதாரணம்:—

'பாடின்றிப் பசந்தகண் பைதல பனிமல்க
வாடுபு [2]வனப்போடி வணங்கிறை வளையூர
வாடெழி லழிவஞ்சா தகன்றவர் திறத்தினி
நாடுங்கா ணினைப்பதொன் றுடையேன்மன் னதுவுந்தான்;

இது தரவு.

தொன்னலந் தொலைபீங்கியார் துயருழப்பத் துறந்துள்ளார்
துன்னிநங் காதலர் துறந்தேகு மாரிடைக்

கன்மிசை [3]யுருப்பறக் கனைதுளி சிதறென
வின்னிசை யெழிலியை யிரக்கவு மியைவதோ;

புனைபிழா யீங்குநாம் [4]புலம்புறப் பொருள்வெஃகின்
முனையென்னார் காதலர் முன்னிய [5]வாரிடைச்

சினைவாடச் சிறக்குநின் சினந்தணிந் தீகெனக்
கனைகதிர்க் கனலியைக் காமுற லியைவதோ;

(பி-ம்)—1. இடைநிலைக். 2. வனப்பொரீஇ. 3. யுருப்பேறக் கனையெரி. 4. புறப் பொருள் வெஃகின்முன். 5. வாற்றிடைச்.

## பொருள்திகாரம் - செய்யுளியல்

[illegible]

ஒளியிழா யீங்குநாந் துயர்கூரப் பொருள்வயி
னளியொரீஇக் காதல ரகன்றேகு மாரிடை
முளியரின் மூழ்கிய வெம்மைதீர்ந் தொழுகென
வளிதரு செல்வனை வாழ்த்தவு மியைவதோ;

இவை தாழிசை.

எனவாங்கு,

தனிச்சொல்.

செய்பொருட் சிறப்பெண்ணிச் செல்வார்மாட் டினையன
தெய்வத்துத் திறனோக்கித் தெருமர றேமொழி
வறனோடின் வையத்து வான்றருங் கற்பினா
ணிறனோடிப் பசப்பூர்த லுண்டென
வறனோடி விலங்கின்றவ ராள்வினைத் திறத்தே.' [கலி - ௮]

இது சுரிதகம்.

இது நான்கடித்தரவும் நான்கடியான் மூன்று தாழிசையுந் தனிச்சொல்லும் ஐந்தடிச் சுரிதகமும் வந்த ஒத்தாழிசைக் கலிப்பா. இதனை நேரிசை யொத்தாழிசைக் கலிப்பா என்ப.

'வெல்புகழ் மன்னவன் விளங்கிய
வொழுக்கத்தா
னல்லாற்றி னுயிர்காத்து நடுக்கறத்
தான்செய்த
தொல்வினைப் பயன்றுய்ப்பத்
துறக்கம்வேட் டெழுந்தாற்போற்
பல்கதிர் ஞாயிறு
பகலாற்றி மலைசேர
வானாது [1]கலுழ்கொண்ட வுலகத்து
மற்றவ . னேனையா
னளிப்பான்போ லிகலிருண் மதிசேர்ப்பக்

## குடைநிழ லாண்டார்க்கு மாளிய வருவார்க்கு மிடைநின்ற காலம்போ லிறுத்தந்த மருண்மாலை;

### இது தரவு.

மாலைநீ, தூவறத் துறந்தாரை நினைத்தலிற் கயம்பூத்த
போதுபோற் குவிந்தவென் னெழினல மெள்ளுவாய்
ஆய்சிறை வண்டார்ப்பச் சினைப்பூப்போற் றளைவிட்ட
காதலர்ப் புணர்ந்தவர் காரிகை கடிகல்லாய்;
மாலைநீ, தையெனக் கோவலர் தனிக்குழ லிசைகேட்டுப்
பையென்ற நெஞ்சத்தேம் பக்கம்பா ராட்டுவாய்
செவ்வழியாழ் நரம்பன்ன கிளவியார் பாராட்டும்
பொய்தீர்ந்த புணர்ச்சியுட் புதுநலங் கடிகல்லாய்;
மாலைநீ, தகைமிக்க தாழ்சினைப் பதிசேர்ந்து புள்ளார்ப்பப்
புரிமிக்க நெஞ்சத்தேம் புன்மைபா ராட்டுவாய்
தகைமிக்க புணர்ச்சியார் தாழ்கொடி நறுமுல்லை
முகைமுகந் திறந்தன்ன முறுவலுங் கடிகல்லாய்;

இவை தாழிசை.

ஆங்க,
தனிச்சொல்.

(பி-ம்)—1. கலிகொண்ட.

௪௱௨௰

# தொல்காப்பியம் - இளம்பூரணம்

மாலையு மலரு நோனு தெய்வமி
னெஞ்சமு மஞ்சுமற் றில்ல வெஞ்சி
யுள்ளா தமைந்தோ ருள்ள
முள்ளி னுள்ள முள்ளு னுவந்தே.' [கலி - ௱௰௮]

இது சுரிதகம்.
இது தாழிசைதோறும் தனிச்சொற் பெற்றுவந்த நேரிசை ஒத்தாழிசைக் கலிப்பா.
'வயக்குறு மண்டிலம்' என்னும் [கலி-௨௬] கலிப்பாவில் சுரவு பன்னிரண்டடி.

யான் வந்தது.

'இலங்கொளி மருப்பிற் கைம்மா' என்னுங் [கலி-௫௩]

கலிப்பாவினுள் இரண்டடி

யால் தாழிசை வந்தன.

'உண்கடன் வழிமொழிந் திரக்குங்கால் முகனும்'

என்னுங் [கலி-௨௨] கலிப்

பாவில் தாழிசை மூன்றடியான் வந்தன.

'ஆறறியந்தணர்' என்னும் கடவுட்பாட்டினுள் மூன்றடிச்சுரிதகம் வந்தது.

இனி, ஏனையடிகளால் வரும் தரவும் தாழிசையும் சுரிதகமும் கலித்தொகையுட் கண்டு கொள்க. (௱௩௨)

௪॥௪௨. ஏனை யொன்றே,

தேவர்ப் [1]பராஅய

முன்னிலைக் கண்ணே.

என் -னின், சொல்லாதொழிந்த ஒத்தாழிசைக்கலிப்பா உணர்த்துதல் நுதலிற்று.

ஒத்தாழிசைக்கலிப்பா
முன்னிலையிடத்துத் தேவரைப்பராவும்
பொருண்மைத்து என்றவாறு.
(ஏ ,, ந)

௩௱௪௩. அதுவே,
வண்ணக மொருபோ கெனவிரு
வகைத்தே.

என்-னின், மேற்சொல்லப்பட்ட முன்னிலைப்பரவலாயா று
உணர்த்துதல்நுதலிற்று.

தேவரிடத்து முன்னிலைப்பரவலாகிய அதுதான் வண்ணகமெனவும் ஒருபோகு எனவும் இருவகைப்படும் என்றவாறு.

(௱௩௪)

௪௱௪௪.

வண்ணகந் தானே,
தரவே தாழிசை பெண்ணே வாரமென்
றாநால் வகையிற்
றோன்று மென்ப.

என்-னின், வண்ணக
லிற்று.

வொத்தாழிசைக்கலிப்பா வாமாறு

உணர்த்துதல் றுதீ

வண்ணக வொத்தாழிசை. யாவது தரவும் தாழிசையும் எண்ணும் சுரிதகமும் என்று சொல்லப்பட்ட நான்கு உறுப்பினையும் உடைத்து என்றவாறு. (௱௩௫)

சாசரு. தரவே தானும்,

நான்கு மாறு

மெட்டு மென்ற

நேரடி பற்றிய நிலைமைத் தாகும்.

(பி-ம்.—1. பராஅ.

# பொருளதிகாரம்

## - செய்யுளியல்

சாउக

என்-னின், தரவிற்கு அடிவரையறை உணர்த்துதல் நுதலிற்று.

வண்ணக வொத்தாழிசைக் கலிப்பாவிற்குத் தரவு நான்கும் ஆறும் எட்டுமாகிய அளவடியினாலே வரும் என்றவாறு.

ஈண்டு நேரடி என்றது கொச்சகத்தரவு போல வாராமைக்கு என்றுகொள்க. சொல்லப்பட்ட ஒன்பதடியினும் மூன்றடியே இதற்கு வருவதென்றவாறாயிற்று. (௪௩௯)

சாசசு. ஒத்துமூன் றாகு மொத்தா ழிசையே

தரவிற் சுருங்கித்

தோன்று மென்ப.

என்-னின், தாழிசைக்கு அடிவரையறை யுணர்த்துதல் நுதலிற்று.

இச் சூத்திரம்

இறந்தது காத்தது என்று கொள்க.

தாழிசையுந் தம்முள் அளவும் ஒத்து
தோன்றும் என்றவாறு.

மூன்றாகி வரும். அவை தரவிற் சுருங்கித்
(௱௩எ)

௩௱௩௭.

அடக்கியல் வாரந் தரவோ டொக்கும்.

என்-னின், சுரிதக மாமாறு
உணர்த்துதல் நுதலிற்று.

அடக்கியலாகிய சுரிதகம்
தரவோடொத்த இலக்கணத்த

தென்றவாறு. (௱௩அ)

௩௱௩௮. முதற்றொடை

பெருகிச் சுருங்கும னெண்ணே.

என்-னின், எண்ணுமாறு உணர்த்துதல் நுதலிற்று.

முதற்றொடுத்த வுறப்புப்
பெருகிப் பின்றொடுக்கு முறப்புச்
சுருங்கி வரும் என்ற வாறு.

அதனை இரண்டடியான் வருவன இரண்டும், ஓரடியான்வருவன நான்கும், சிந்தடியான் வருவன எட்டும், குறளடியான் வருவன பதினாறும் எனப் பிறநூலாசிரியர் உரைப்பர். இவ்வாசிரியர்க்கு வரையறையிலவாம். (எ.ங.கூ)

௪௱௪௯. எண்ணிடை யொழித லேத மின்றே
சின்ன மல்லாக் காலை யான.

என்-னின், மேலதற்கோர் புறனடை யுணர்த்துதல் நுதலிற்று. மேற் சொல்லப்பட்ட எண் ஒரோவொன்று இடையொழிந்து வருதல் குற்றமாகாது தனிச்சொல் இல்லாதவழி யென்றவாறு.

எனவே, சொல்லப்பட்ட உறுப்புக்கள் தனிச்சொல் வருவழி இடையொழியாமல் வருதல் வேண்டுமென்றவாறு. தனிச்சொல் உளப்பட ஐந்துறுப்புடைத்தாயிற்று.

இனித் தனிச்சொல்லின்றி எண்ணிடையிட்டவழி ஒருபோகெனப் பெயர்பெறும்.

உதாரணம்:—

'கெடலரு மாமுனிவர் கிளர்ந்துடன் றொழுதேத்தக்
கடல்கெழு கனைசுடரிற் கலந்தொளிரும் வாலுளைய
வழல்விளி சுழல்செங்க ணரிமாவாய் மலைந்தானைத்
தாரொடு முடிபிதிரத் தமனியப் பொடிபொங்க
வார்புனல் விழிகுருதி யகலிட முடனனைப்பக்
கூருகிரான் மார்பிடந்த கொலைமலி தடக்கையோய்;

இது தரவு.

# தொல்காப்பியம் - இளம்பூரணம்

முரசதிர் வியன்மதுரை முழுவதூஉந் தலைப்பனிப்பப்
புரைதொடித் திரடிண்டோட் போர்மலைந்த மறமன்னர்
அடியொடு முடியிறப்புண் டயர்ந்தவர் நிலஞ்சேரப்
பொடியெழ வெங்களத்துப் புடைத்ததுநின் புகழாமோ;
கலியொலி வியனுலகங் கலந்துட னனிநடுங்க
வலியிய லவிராழி மாறெதிர்ந்த மருட்சோர்வு
மாறுதா ருடம்பொடு மரம்பிற வெதிர்கலங்கிச்
செறுப ரிருவிசும்பிற் செகுத்ததுநின் சினமாமோ;
படுமணி யினநிரை பரந்துட னிரிதோடக்
கடுமுர ணெதிர்மலைந்த காரொலி யெழிலேறு
வெரிநொடு மருப்புடர வீழ்த்ததுதிறம் வேறாக
வெருமலி பெருந்தொழுவி லிறுத்ததுநின் னிகலாமோ;

இவை மூன்றுந் தாழிசை.

இலங்கொளி மரகத மெழின்மிகு வியன்கடல்
வலம்புரி தடக்கையோய் மாறுநிற்
னிறம்; விரியிணர்க் கோங்கமும் வெந்தெரி
பசும்பொன்னும் பொருகளி றட்டோய்
புரையு நின்றுடை;

இவை பேரெண்.

கண்கவர் கதிர்முடி கனலுஞ்
சென்னியை;
தண்சுடரு றுருபகை தணித்த வாழியை;
யொலியிய லுவண மோங்கிய கொடியினை
;
வலிமிகு சகட மாற்றிய வடியினை;
இவை அளவெண்.
போரவுணர்க் கடந்தோய் நீஇ;
புணர்மருதம் பிள
ந்தோய் நீஇ;
நீரகல மளந்தோய் நீஇ;
நிழறிகழும் படையோய் நீஇ;
இவை இடையெண்.

ஊழிநீஇ, உலகுநீஇ, உருவுநீஇ, அருவுநீஇ,
ஆழிநீஇ, அருளுநீஇ, அறமுநீஇ, மறமுநீஇ;

இவை சிற்றெண்.

எனவாங்கு,

தனிச்சொல்.

அடுதிற லொருவனிற் பரவுது மெங்கோன்
றொடுகழற் கொடும்பூட் பகட்டெழின் மார்பிற்
கயலொடு கிடந்த சிலையுடைக் கொடுவரிப்

புயலுறழ் தடக்கைச் செவ்வே லச்சுதன்
றொன்றிய வுலக முழுவது
மொன்றுபுரி திகிரி யுருட்டுவோ னெனவே.'

இது ஆறடிச்சுரிதகம்.

இவ்வாறு வருவதனை ஒருசாராசிரியர் அம்போதரங்க வொத்தாழிசைக் கலிப்பா வெனக் கூறுப. (௱௪௰)

# பொருளதிகாரம் - செய்யுளியல்

சாறுல. ஒருபோ கியற்கையு மிருவகைத் தாகும்.

என்-னின், ஒரு போகு பாகுபாடு உணர்த்துதல் நுதலிற்று. ஒருபோகென்னும் கலி இரண்டுவகைப்படும் என்றவாறு. (சசக)

சாறுக. கொச்சக வொருபோ கம்போ தரங்கமென் றொப்ப நாடி யுணர்தல் வேண்டும்.

என்-னின், என்பது மது

ஒருபோகென்னும் கலி கொச்சகவொருபோகு எனவும் அம்போதரங்கமெனவும் பொருந்த நாடியறிதல் வேண்டும் என்றவாறு. (சசஉ)

சாறுஉ. தரவின் றாகித் தாழிசை பெற்றுந்

தாழிசை யின்றித் தரவுடைத் தாகியு
மெண்ணிடை யிட்டுச் சின்னங் குன்றியு
மடக்கிய லின்றி யடிநிமிர்ந் தொழுகியும்
யாப்பினும் பொருளினும் வேற்றுமை யுடையது
கொச்சக வொருபோ காகு மென்ப.

என்-னின், நிறுத்தமுறையானே கொச்சகவொருபோகு உணர்த்துதல் நுதலிற்று.

தரவின்றாகித் தாழிசை

பெற்றும் என்பது—தரவுமுதலாயின வுறுப்புக்களுள்,

தரவின்றித் தாழிசை முதலியவுறுப்புக்கள் பெற்றும் என்றவாறு.

1'தாழிசை பெற்றும்' என்றதனால் தரவுதாமே வரினும் கொச்சக வொருபோகு ஆகு மென்று கொள்க.

தாழிசையின்றித் தரவுடைத்தாகியும்

என்பது—தாழிசையின்றித் தரவு முதலி யன உடைத்தாகியும் என்றவாறு.

'தரவுடைத்தாகியும்'

என்றதனால் உதாழிசை தானே
வரினும் என்றகொள்க.

எண்ணிடை யிட்டுச்
சின்னங்குன்றியும் என்பது—எண்ணாகிய
வுறுப்புக்களை

யிடையிட்டுத் தனிச்சொல்
வாராதொழியினும் என்றவாறு.

'சின்னம்' என்றதனால்
எண்ணின்கண் இடையெண் சிற்றெண்
என்பன குறை யினும் என்றுமாம்.

அடக்கிய லின்றி
யடிநிமிர்ந்தொழுகியும்
என்பது—சுரிதகமின்றித் தரவுதானே

நிமிர்ந்தொழுகி முடியினும்
என்றவாறு.

யாப்பினும் பொருளினும் வேற்றுமையுடையது என்பது—ஒத்தாழிசையின் யாக்கப்பட்ட யாப்பினும் அதற்குரித்தாக ஓதப்பட்ட கடவுள்வாழ்த்துப் பொருண்மையின்றிக் காமப்பொருளாக வரினும் என்றவாறு.

கொச்சக வொருபோகாகும் என்ப என்பது—இவ்வகையினாற் சொல்லப்பட்டன கொச்சக வொருபோகெனக் குறிபெறும் என்றவாறு.

எனவே ஒத்தாழிசைக்கு உறுப்பாகியவற்றுள் ஒன்றும் இரண்டும் குறைந்துவருவன கொச்சக வொருபோகெனப் பெயர்பெறும் என்றுகொள்க.

1. இத்தொடர் ஒருபிரதியில் இல்லை. (பிரதி)—2. தாழிசை தரவுதானே வரினும்.

ச.௱௨ச

# தொல்காப்பியம் - இளம்பூரணம்

அவற்றுள்
தரவின்றாகித் தாழிசைபெற்று
வந்ததற்குச் செய்யுள்:—

'நிரைதிமில் களிறாகத் திரையொலி பறையாகக்
கரைசேர் புள்ளினந் தஞ்சிறை படையாக
[1]வரைசுகால் கிளர்ந்தன்ன உரவுநீர்ச் சேர்ப்பகேள்;

இது நான்கடியாகி வாராமையிற் றாழிசை யாயிற்று.

கற்பித்தா னெஞ்சழுங்கப் பகர்ந்துண்ணான் விச்சைக்கட்
டப்பித்தான் பொருளேபோற் றமியவே தேயுமா
லொற்கத்து ளுதவியார்க் குதவாதான் மற்றவ
னெச்சத்து ளாயினு மஃதெறியாது விடாதேகாண்;
கேளிர்க ணெஞ்சழுக்கக் கெழுவுற்ற செல்வங்க
டாளிலான் குடியேபோற் றமியவே தேயுமாற்
சூழ்வாய்த்த மனத்தவன் வினைபொய்ப்பின் மற்றவன்
வாள்வாய்நன் றாயினு மஃதெறியாது விடாதேகாண்;

இவை யிரண்டும் தாழிசை.

ஆங்கு,

தனிச்சொல்.

அனைத்தினிப் பெரும வதனில
2நினைத்துக்காண்
சினைஇய வேந்த னெயிற்புறந் திறுத்த
3வினைவரு பருவரல் போலத்
துனைவரு நெஞ்சமொடு வருந்தினள்
பெரிதே.' [கலி-௱௬௧]

இது சுரிதகம்.

எனவரும்.

தாழிசை தாமேயும் வரும்.

தாழிசையின்றித் தரவு

முதலாயின வந்ததற்குச் செய்யுள்:—

'செவ்விய திவ்விய சொல்லி

யவற்றொடு

பைய முயங்கிய வஞ்ஞான்

றவையெல்லாம்

பொய்யாதல் யானியாங் கறிகோமற் றைஇய
வகனகர் கொள்ளா வலர்தலைத் தந்து
பகன்முனி வெஞ்சுர முள்ள லறிந்தேன்
மகனல்லை மன்ற வினி;

இது தரவு.

செல்வினிச் சென்றுநீ செய்யும் வினைமுற்றி
யன்பற மாறியா முள்ளத் துறந்தவள்
பண்பு மறிதிரோ வென்று வருவாரை
யென்றிறம் யாதும் வினவல் வினவிற்
பகலின் விளங்குநின் செம்மல் சிதையத்
தவலருஞ் செய்வினை முற்றாமை யான்டோ
ரவலம் படுதலு முண்டு.' [கலி-௧௯]

இது சுரிதகம்.

(பி-ம்)—1. வரவுக்கால். 2. நிலைத்துச். 3. நிலைவரு.

# பொருளதிகாரம் .

## செய்யுளியல்

### ௨௨௫

எண்ணிடையிட்டுச் சின்னங் குன்றியவதற்குச் செய்யுள்:—

'மாமலர் முண்டகந் தில்லையோ டொருங்குடன்
கான லணிந்த வுயர்மண லெக்கர்மேற்
சீர்மிகு சிறப்பினோன் மரமுதற் 1கை[சேர்]த்த
நீர்மலி கரகப்போற் பழந்தூங்கு முடத்தாழைப்
பூமலர்ந் தவைபோலப் 2புள்ளல்குந் துறைவகேள்;

[இது] தரவு.

ஆற்றுத லென்பதொன் றலந்தவர்க் குதவுதல்
போற்றுத லென்பது புணர்ந்தாரைப் பிரியாமை.

பண்பெனப் படுவது பாடறிந்
தொழுகுத
லன்பெனப் படுவது தன்கிளை
செறாஅமை
யறிவெனப் படுவது பேதையர்
சொன்னோன் றல்
செறிவெனப் படுவது கூறியது மறாஅமை
நிறையெனப் படுவது மறைபிற
ரறியாமை
முறையெனப் படுவது கண்ணோடா
துயிர்வௌவல்
பொறையெனப் படுவது போற்றாரைப்
பொறுத்தல்;

இவை எண்.

ஆங்கறிந் தொழுகினை யாயினென்
றோழி
நன்னுத னலனுண்டு துறத்தல்
கொண்க

தீம்பா லுண்பவர் கொள்கலம் வரைத
னின்றலை 4வருந்தியா டுயரஞ்
சென்றனை களைமோ 5பூண்கநின் றேரே.' [கலி-௱௩௩]

[இது] சுரிதகம்.

அடக்கிய லின்றி யடிநிமிர்ந்தொழுகல்
வருமாறு:—

‘பான்மருண் மருப்பி னுரல்புரை பாவடி
யீர்நறுங் கமழ்கடாஅத் தினம்பிரி யொருத்த
லாறுகடி கொள்ளும் வேறுபுலம் படர்ந்து

பொருள்வயிற் பிரிதல் வேண்டு மென்னு
மருளில் சொல்லு நீசொல் லினையே
நன்னர் நறுநுத னயந்தனை நீவி
நின்னிற் பிரியலெ னஞ்சலோம் பென்னு
நன்னர் மொழியு நீமொழிந் தனையே
அவற்றுள், யாவோ வாயின மாஅன் மகனே
கிழவ ரின்னோ ரென்னாது பொருடான்
பழவினை மருங்கிற் பெயர்புபெயர் புறையு
மன்ன பொருள்வயிற் பிரிவோய் நின்னின்

(பி—ம்.) 1 நகைத்த. 2 புல்லருக். 3 லென்பதுகர்தவர்க். 4 வருந்தின. 5 பூண்டதன். 6 வாயன.





திமைப்புவரை வாழான் மடவோ
ளமைக்கவின் கொண்ட தோளிணை மறந்தே.' [கலி-உக]

எனவரும்.

(௩௪௫)

சாருங. ஒருபான்
சிறுமை யிரட்டியத னுயர்பே.

என்-னின், மேலதற்கோர் புறனடை உணர்த்துதல் நுதலிற்று.

மேற்சொல்லப்பட்ட கொச்சகவொருபோகு பத்தடிச்சிறமையாகவும் இருபதடிப் பெருமையாகவும் வரும் என்றவாறு. (ாசச)

சாநிச.

அம்போத ரங்க மறுபதிற் றடித்தே
செம்பால் வாரஞ் சிறுமைக் கெல்லை.

என்-னின், அம்போதரங்க வொருபோகுக்கு அடிவரையறை யுணர்த்துதல் நுதலிற்று.

அம்போதரங்க வொருபோகு அறுபதடி பெருமைக் கெல்லையாம்;

நடுவாகிய நிலை

சிறுமைக் கெல்லையாம் என்றவாறு.

செம்பால் வாரம் என்பது

செம்பாதி எனவுமாம்; முப்பதடிச்

சிறுமை என்றவாறு.

(௱சடு)

சுஅ௫ ௬. எருத்தே

கொச்சக மராகஞ் சிற்றெ

ணடக்கியல் வாரமொ டந்நிலைக்

குரித்தே.

என்-னின், அப்போதரங்கத்திற்கு

உறுப்பாமாறு உணர்த்துதல்

நுதலிற்று.

ஈண்டு எருத்து என்பது

தரவு. கொச்சகமும் அராகமும்

மேற்சொல்லப்பட்டன.

எண்ணினுட் பேரெண்ணிற் சிற்றெண் வரப்பெறுமாயினும் இனிச் சொல்லப்பட்ட வுறப்பு முறையான்வருதலும் [1]மயங்கிவருதலுங் கொள்க.

பரிபாடற்கும் இவைதாமே உறுப்பாயின் அகனேடிதனிடை வேறுபாடு என்னையெனின், அறுபதிற்றடியிற் குறைந்துவரின் முறைபிறழ்ந்து வருமெனவும் ஒத்துவரின் அறுபதின் மிக்கு வருமெனவுங் கொள்ளப்படும்.

உதாரணம்:—

'கண்ணக னிருவிசும்பிற் கதழ்பெயல் கலந்தேற்ற
தண்ணறும் பிடவமுந் தவழ்கொடித் தளவமும்
வண்ணவண் டோன்றியும் வயங்கிணர்க் கொன்றையும்
அன்னவை பிறவும் பன்மலர் துதையத்
தழையுங் கோதையு மிழையு மென்றிவை
தைஇனர் மகிழ்ந்து திளைஇ விளையாடு
மடமொழி யாயத் தவருளிவள்யா
ருடம்போ டென்னுயிர் புக்கவ ளின்று;

[திரு] தரவு.

1 மிக்கு.

பொருளதிகாரம்

- செய்யுளியல்
சாஉஎ

தூஉ இவள், பொருபுகர் நல்லேறு கொள்பவ ரல்லாற்
றிருமாமெய் தீண்டல ரென்று கருமமா
வெல்லாரும் கேட்ப வறைந்தறைந் தெப்பொழுதுஞ்
சொல்லாற் றரப்பட் டவள்;

சொல்லுக; பாணியே மெஃறு றறைகென்றூர் பாரித்தார்
மாணிழை யாருகச் சாறு;

சாற்றுள், பெடையன்னார் கண்பூத்து நோக்கும்வா யெல்லாம்
மிடைபெறி னேராத் தகைத்து;

இவை கொச்சகம்.

தகைவகை மிசைமிசைப்

பாய்மா ரார்த்துட

னெதிரெதிர் சென்றார்

பலர்;

கொலைமலி சிலைசெறி

செயிரயர் சினஞ்சிறந்

துருத்தெழுந் தோடின்று

மேல்;

இவை அராகம்.

எழுந்தது துகள்—1 ஏற்றனர்

மார்பு

கவிழ்ந்தன

மருப்புக்—கலங்கினர்பலர்;

இவை சிற்றெண்.

அவருள், மலர்மலி புகலெழ வலர்மலி
மணிபுரைத் திரடோள் பிணைஇ
யெருத்தோ டிமிலிடைத் தோன்றினன்
றோன்றி
வருத்தினான் மன்றவவ் வேறு;

[இது] முடுகியலடிவந்த
கொச்சகம்.

ஏறெவ்வங் காணா வெழுந்தா ரெவன்கொலோ
வேறுடை நல்லார் பகை;
மடவரே நல்லாயர் மக்க ணெருநை
யடலேற் றெருத்திறுத்தார்க் கண்டுமற் றின்று
முடலேறு கோட்சாற்று வார்;

# இவையுங் கொச்சகம்.

## ஆங்கினி,

## தனிச்சொல்.

தண்ணுமைப் பாணி தளரா தெழூஉக
பண்ணமை யின்சீர்க் குரவையுட் டெண்கண்ணித்
திண்டோட் டிறலொளி மாயப்போர் மாமேனி
யந்துவ ராடைப் பொதுவனோ டாய்ந்த
முறுவலாண் மென்றோள்பா ராட்டிச் சிறுகுடி
மன்றம் பரந்த துரை.[1] [கலி-௱௨]

[இது] சுரிதகம்.

1 எற்றது. 2 வலர்மலிதரு.

பிறவும் இக்கிரமங்கொள்க.

யாப்பினும் பொருளினும் வேறுபட்ட கொச்சகவொருபோகை யதன்பி னோதின மையால் இதற்குங் காமப் பொருளே பெறப்பட்டது. (௱௪௬)

௪௱௫௰. ஒருபொரு ணுதலிய வெள்ளடி யியலாற்
திரிபின்றி முடிவது கலிவெண் பாட்டே.

என்-னின், கலிவெண்பாவாமாறு உணர்த்துதல் நுதலிற்று.

ஈற்றடியளவும் ஒருபொருளைக் குறித்து வெள்ளடியியலாற் றிரிபின்றி முடிவது கலிவெண்பாட்டாம் என்றவாறு.

கலிவெண்பாட்டெனினும் வெண்கலிப்பாட்டெனினும் ஒக்கும். வெள்ளடியியலா னென்றமையான் வெண்டளையான்வந்து ஈற்றடி முச்சீரான் வருவனவும் பிறதளையான் வந்து ஈற்றடி முச்சீரான் வருவனவுங் கொள்க.

உதாரணம்:—

'மரையா மரல்கவர மாரி வறப்ப
வரையோங் கருஞ்சுரத் தாரிடைச்
செல்வோர் சுரையம்பு மூழ்கச் சுருங்கிப்
புரையோர்த முண்ணீர் வறப்பப்
புலர்வாடு நாவிற்குத்
தண்ணீர் பெறாஅத்
தடுமாற் றருந்துயரங்
கண்ணீர் நனைக்குங் கடுமைய காடென்று

லென்னீ ரறியாதீர் போல விவைகூற
னின்னீர வல்ல நெடுந்தகா யெம்மையு
மன்பறச் சூழாதே யாற்றிடை நும்மொடு
துன்பந் துணையாக நாடி னதுவல்ல
தின்பமு முண்டோ
வெமக்கு.' [கலி-௬]

எனவரும்.

இது வெண்டளையான் வந்த வெண்கலிப்பா.

அஃதேல் இது நெடுவெண்பாட்டிற்கு ஓதிய விலக்கணத்தான் வருதலிற் பஃறொடைவெண்பாவாம் வெண்கலிப்பா வென்றதென்னை யெனின், புணர்தல் பிரிதல் இருத்தல் இரங்கல் ஊடல் எனவுங் கைக்கிளை பெருந்திணை யெனவுஞ் சொல்லப்பட்ட பொருளேழனுள்ளும் யாதானு மொருபொருளைக் குறித்து ஏனைக்கலிப்பாக்கள் போலத் தரவுந் தாழிசையுந் தனித்தனி பொருளாக்கிச் சுரிதகத்தாற் றொகுத்துவரு நிலைமைத் தன்றித் திரிபின்றி முடிவதனைக் கலிவெண்பா வெனவும், புறப்பொருட்கண்வரும் வெண்பாக்களைப் பஃறொடைவெண்பா வெனவும், பரிபாடற்கு உறுப்பாய் வரும் பஃறொடை வெண்பாக்களைப் பரிபாடலெனவும், கொச்சகக் கலிப்பாவிற் குறுப்பாய் வரும் பஃறொடை வெண்பாவைக் கொச்சகக் கலிப்பாவெனவும், [1]கூறுதலின் வாசிரியர் கருத்தென்று கொள்க. அன்னதாதல் 'நெடுவெண்பாட்டே குறுவெண்பாட்டே' [செய்யுளியல்-௱௫௪] என யாப்பினானே வேறுபடுத்தாராகிக் 'கைக்கிளை பரிபாட்டங்கதச் செய்யுள்' எனப்பொருளானு மினத்தானும் வேறுபடுத்தோதினமையானுங் கொள்க.

1 கூறுதலினது.

# பொருளதிகாரம் - செய்யுளியல்

சூ.112 கூ

'தீம்பால் கறந்த கலமாற்றிக் கன்றெல்லார்
தாம்பிற் பிணித்து மனைநிறீஇ யாய்தந்த
பூங்கரை நீலம் புடைதாழ மெய்யசைஇப்
பாங்கரு முல்லையுந் தாய பாட்டங்காற் றோழிநம்
புல்லினத் தாயர் மகளிரோ டெல்லா
பொருக்கு விளையாட வவ்வழி வந்த
குருந்தம்பூங் கண்ணிப் பொதுவன் மற் றென்னை
முற்றிழை யேஎர் மடநல்லாய் நீயாடுஞ்
சிற்றில் புனைகோ சிறிதென்றா னெல்லாநீ
பெற்றேம்யா மென்று பிறர்செய்த வில்லிருப்பாய்
கற்ற திலைமன்ற காணென்றேன் முற்றிய
தாழிருங் கூந்த நகைபெறத் தைஇய
கோதை புனைகோ நினக்கென்றா னெல்லா நீ

ஏதிலார்

தந்தபூக் கொள்வாய் நனிமிகப்

பேதையை மன்ற பெரிதென்றே 1 றையிழா

யைய பிதிர்ந்த சுணங்கணி மென்முலைமேற்

றொய்யி

லெழுதுகோ மற்றென்றான் யாம்பிறர்
செய்புற நோக்கி
யிருத்துமோ நீபெரிது
மையலை மாதோ
விடுகென்றேன் றையலாய்
சொல்லிய
வாறெல்லா மாறுமா றியான்பெயர்ப்ப
வல்லாந்தான்
போலப் பெயர்ந்தா னவனைநீ
யாயர் மகளி
ரியல்புரைத் தெந்தையும்
யாயு மறிய
வுரைத்தீயின் யானுற்ற
நோயுங்
களைகுவை யன்.' [கலி-௱௰௧]

## என்னும்

முல்லைக்கலி 2அயற்றளையான் வந்த கலிவெண்பா. (௱௪௭)

௪௱௩௰௭. தரவும் போக்கு மிடையிடை மிடைந்து
மைஞ்சீ ரடுக்கியு மாறுமெய் பெற்றும்
வெண்பா வியலான் வெளிப்படத் தோன்றும்
பாநிலை வகையே கொச்சகக் கலியென
நூனவில் புலவர் நுவன்றறைந் தனரே.

என்-னின், கொச்சகக்கலி யாமாறு உணர்த்துதல் நுதலிற்று.

தரவும் போக்கும் இடையிடைமிடைந்தும் என்பது—தரவாகிய வுறுப்புஞ் சுரிதகமாகிய வுறுப்பு முதலு முடிவும் வருதலின்றி இடையிடைவந்து தோன்றியு மென்றவாறு.

உம்மையால் இயற்கைவழாமற் றோன்றியு மென்றுகொள்ளப்படும்.

ஐஞ்சீரடுக்கியும் என்பது—ஐஞ்சீரடி பலவந்தும் என்றவாறு.

உம்மையால் வாராதுமென்று கொள்க.

ஆறுமெய்பெற்றும் என்பது—தரவு தாழிசை தனிச்சொல் சுரிதகஞ் சொற்சீரடி முடுகியலடி யென்னும் ஆறுறுப்பினையும் பெற்றும் என்றவாறு.

1 ன்மாதரா. 2 வெண்பாவினுட் பிறதளை வருதலிற் பிறதளையானும் வந்த.

௪௱௩௰

உம்மையாற் பெறுதுமென்று கொள்க.

வெண்பாவியலான் வெளிப்படத் தோன்றும் பாநிலைவகை என்பது—மேற் சொல்லப்பட்ட உறுப்புக்களை யுடைத்தாகியும் இலதாகியும் வெண்பாவி னியல்பினாற் புலப்படத் தோன்றும் பாநிலைவகை யென்றவாறு.

புலப்படத் தோன்றாத லாவது எனையுறுப்புக்களில் வெண்பாமிகுதல். இன்னும் அதனுளே பிற பாவடிகளும் வந்து வெண்பாவியலான் முடிதலுங் கொள்க.

கொச்சகக்... அறைந்தனரே என்பது—கொச்சகக்கலிப்பா வென்று இலக்கண மறிந்த புலவர் கூறினரென் றவாறு.

ஆறுமெய்பெறும் என்பதற்கு அராகமென்னும் உறுப்பைக்கூட்டி முடுகியலென்னும் உறுப்பைக்கழித்து உரைப்பது மொன்று.

உதாரணம்:—குறிஞ்சிக் கலியுள்,

'காமர் கடும்புனல் கலந்தெம்மோ
டாடுவாள்
தாமரைக்கண் புதைத்தஞ்சித்
தளர்ந்ததனோ டொழுகலான்
நீணாக நறுந்தண்டார் தயங்கப்பாய்ந் தருளினாற்
பூணாக முறத்தழீஇப் போதந்தா னகனகலம்
வருமுலை புணர்ந்தன வென்பதனா லென்றோழி
யருமழை [1]தரல்வேண்டிற்
றருகிற்கும் பெருமையளே;

இது தரவு: இதனுள்
இரண்டாமடி ஐஞ்சீரான் வந்தது.

அவனூர்தான், என விதனைத் தகிற்புகை
யுண்டியங்கும்
வானூர் மதியம் வரைசேரி னவ்வரைத்
தேனி னிறாலென வேணி
யிழைத்திருக்குங்
கானக ஞடன் மகன்;
இதனுள் முதற்கணின்றது

கூன்.

சிறுகுடி யீரே சிறுகுடி யீரே
வள்ளிகீழ் வீழா வரைமிசைத்
தேன்றொடா
கொல்லை
குரல்வாங்கி யீனு மலைவாழ்ந
ரல்ல புரிந்தொழுக லான்;

இதன்முதல் ஆசிரியவடி.

காந்தள் கடிகமழுங் கண்வாங் கிருஞ்சிலம்பின்
வாங்கமை மென்றோட் குறவர் மடமகளிர்
தாம்பிழையார் கேள்வர்த் தொழுதெழலாற் றம்மையருந்
தாம்பிழையார் தாந்தொடுத்த கோல்;

இவை மூன்றும் கொச்சகம்.

எனவாங்கு,

தனிச்சொல்.

அறத்தொடு நின்றேனைக் கண்டு திறப்பட
வென்னையர்க் குய்த்துரைத்தாள் யாய்;

இது வெள்ளைச் சுரிதகமாகி யிடை வந்தது.

---

1 தான்வேண்டிற்.

பொருளதிகாரம் -

செய்யுளியல்

௪௱௩௧

அவருந், தெரிகணை நோக்கிச்
சிலைநோக்கிக் கண்சேர்ந் தொருபக
லெல்லா முருத்தெழுந் தாறி
யிருவர்கட் குற்றமு மில்லையா லென்று

தெருமந்து சாய்த்தார் தலை;

தெரியிழாய் நீயுநின்

கேளும் புணர

வரையுறை தெய்வ

முவப்ப வுவந்து

குரவை தழீஇயா மாடக்

குரவையுட்

கொண்டு நிலைபாடிக்

காண்;

இவை யிரண்டுங் கொச்சகம்.

நல்லாய்,

தனிச்சொல்.

நன்னாட் டலைவரு மெல்லை நமர்மலைத்

தந்நாண்டாந் தாங்குவா ரென்னோற்

றனர்கொல்;

இது பேரெண்.

புனவேங்கைத் தாதுறைக்கும் பொன்னறை முன்றி
னனவிற் புணர்ச்சி கடக்குமா மன்றோ
நனவிற் புணர்ச்சி
நடக்கலு மாங்கே
கனவிற் புணர்ச்சி கடிதுமா மன்றோ;

விண்டோய்கன் னாடனு நீயும் வதுவையுட்
பண்டறியா தீர்போற் படர்கிற்பீர் மற்கொலோ
பண்டறியா தீர்போற் படர்ந்தீர் பழங்கேண்மை
கண்டறியார் தேன்போற் கரக்கிற்பென் மற்கொலோ;

இவை யிரண்டுந் தாழிசை.

மைதவழ் வெற்பன் மணவணி காணாமற்
கையாற் புதைபெறூஉங் கண்ணுங்கண் ணாகுமோ;

இது பேரெண்.

என்னைமன், நின்கண்ணாற் காண்பென்மன் யான்;
நெய்த லிதழுண்கண், நின்கண்ணா கென்கண் மன;

இதுவுங் கொச்சகம்.

எனவாங்கு,

தனிச்சொல்.

நெறியறி செறிகுறி புரிதிரி பறியா வறிவனை முந்துறீஇத்
தரைமிகு தொகைவகை யறியுஞ் சான்றவ ரினமாக
வேய்புரை மென்றோட் பசலையு மம்பலும்
மாயப் புணர்ச்சியு மெல்லா முடனீக்கச்
சேயுயர் வெற்பனும் வந்தனன்
பூவெழி லுண்கணும் பொலிகமா வினியே.' [கலித்—ந.க]

[இது] சுரிதகம்.

1 தா துருக்கும். 2 போதெழி.

சாஙஉ

# தொல்காப்பியம் - இளம்பூரணம்

இதனுள் முதலடி அறுசீர் முடுகியல்; இரண்டாவது ஐஞ்சீர் முடுகியல்.

இவ்வாறு வருவன கொச்சகக்கலிப்பா வெனப்படும்.

ஒத்தாழிசைக்குத் தாழிசையாகிய உறுப்பு மிக்குவந்தாற்போலக் கொச்சக கலிக்கும் வெண்பாவாகிய வுறுப்பு மிக்குவரும் என்று கொள்க.

இனி எண்போதப்பட்ட வுறுப்புக்கள் குறைந்தும் மயங்கியும் மிக்கும் வரப்பெறும். அவை கலித்தொகையுட் கண்டுகொள்க. (௱சஅ)

சாருஅ. கூற்று மாற்றமு மிடையிடை மிடைந்து
போக்கின் றாக லுறழ்கலிக் கியல்பே.

இது உறழ்கலி யாமாறு உணர்த்துதல் நுதலிற்று.

உறழ்கலிப்பாவிற்கு இலக்கணம் கூற்று மாற்றமும் விரவிவந்து சுரிதகமின்றி முடித லென்றவாறு.

இதனைக் கொச்சகக்கலியின்பின் வைத்தமையான் அக்கொச்சக வுறுப்பி னெப்பன

இதற்கு உறப்பாகக் கொள்ளப்படும்.

உதாரணம்:—

'யாரிலை னெங்கூந்தல் கொள்வா
னிதுவுமோ

ரூராண்மைக் கொத்த
படிறுடைத் தெம்மனை

வாரனீ வந்தாங்கே மாறு;

இது தலைமகள் கூற்று.

என்னிலை, ஒருயிர்ப் புள்ளி
னிருதலை யுள்ளொன்று
போரெதிர்ந் தற்றாப் புலவனீ
கூறினென்

னோருயிர் நிற்குமா
றியாது;

இது தலைவன் கூற்று.

தெளிந்தேம்யாங் காயாதி யெல்லாம்வல் லேடா
பெருங்காட்டுக் கொற்றிக்குப் பேய்கொடுத் தாங்கு
ஃ

வருந்தனின் வஞ்ச முரைத்து;
இது தலைமகள் கூற்று.

மருந்தின்று, மன்னவன் சீறிற்
றவறுண்டோ நீநயந்த
வின்னகை தீதோ விலேன்;
இது தலைமகன் கூற்று.

மாண
மறந்துள்ளா நாணிலிக் கிப்போர்

புறஞ்சாய்ந்து கண்டைப்பாய் நெஞ்சே யுறழ்ந்திவனைப்
பொய்ப்ப விடேஎ மெனநெருங்கிற் றப்பினே

னென்றடி சேர்தலு முண்டு.'

[கலி-அசு]

இப்பாட்டுச் சுரிதகமின்றி

வந்தவாறு கண்டுகொள்க.

எற்றிற்கு? இறுதியின்கண் வந்தது சுரிதக மாகாதோவெனின், சுரிதகமாகாது. சுரிதகமாவது ஆதிப்பாட்டினும் இடைநிலைப்பாட்டினு முள்ள பொருளைத் தொகுத்து முடிப்பது. [1]இஃது அன்ன தன்றென்க. (௱௪௬)

சா௫சு. ஆசிரியப் பாட்டி

னளவிற் கெல்லை

யாயிர மாகு மிழிபுமூன் [2]றடியே.

1 அது. 2 றடித்தே.

பொருளதிகாரம் - செய்யுளியல்

சா௩௩

என்-னின், ஆசிரியப்பாவிற்கு

[[1]எல்லை] கூறுதல் நுதலிற்று.

ஆசிரியப்பாவின் அளவிற்கு எல்லையாவது: சுருங்கின்று மூன்றடி: பெருமை யாயிர மடியாக இடைப்பட்டன எல்லாவடியானும் வரப்பெறும் என்றவாறு.

சுருங்கினபாட்டிற்கு உதாரண மேற் காட்டப்பட்டன. பெரியபாட்டு பத்துப்பாட்டினுள்ளும், சிலப்பதிகாரத்துள்ளும், மணிமேகலையுள்ளுங் கண்டுகொள்க. 'ஆசிரிய நடைத்தே வஞ்சி' [செய்யுளியல்-௱௪] என்றதனான் வஞ்சிப்பாவிற்கும் ஆயிரமடிப்பெருமையாகக் கொள்ளப்படும். (ளஇய)

௪௱௬௰. நெடுவெண் பாட்டே [2]முந்நான் கடித்தே
குறுவெண் பாட்டிற் [3]களவேழ் சீரே.

என்-னின், வெண்பாவிற்கு அடிவரையறை யுணர்த்துதல் நுதலிற்று.

நெடுவெண்பாட்டிற்கு எல்லை பன்னிரண்டடி. குறுவெண்பாட்டிற்கு அடி அள

வடியுஞ் சிந்தடியுமாகிய இரண்டடியும் என்றவாறு.

எனவே இடையுள்ள அடிகளெல்லாம் உரிய. உதாரண [4]மேற்காட்டப்பட்டது. (சஇக)

சாகூக. அங்கதப் பாட்டள

வவற்ரோ டொக்கும்.

என்-னின், அங்கதப்பாட்டிற்கு

அளவுணர்த்துதல் நுதலிற்று.

அங்கதப் பாட்டாகிய

வெண்பாவிற்கு எல்லை சிறுமை

யிரண்டடி, பெருமை

பன்னிரண்டடி என்றவாறு.

உதாரணம் சில காட்டப்பட்டன; ஏனைய வந்தவழிக் கண்டுகொள்க.

(ாஞஉ)

சாகூஉ.

கலிவெண் பாட்டே கைக்கிளைச் செய்யுள்
செவியறி வாயுறை புறநிலை யென்றிவை

தொகைநிலை மரபி

னடியில வெண்பா.

என்-னின், அடியளவு வரையறையில்லாத செய்யுள் உணர்த்துதல் நுதலிற்று.

கலிவெண்பாட்டும், கைக்கிளைப்பொருளைப் பற்றிய பா[வும்], செவியுறை வாழ்த்து, வாயுறைவாழ்த்து, புறநிலைவாழ்த்து என்ற பொருண்மைக்கண் வரும் வெண்பாக்களும் அளவு வரையறுக்கப்படா. பொருள் முடியுங்காறும் வேண்டிய அடி வரப்பெறும் என்றவாறு. (சஇ௩)

சாகூ. புறநிலை வாயுறை செவியறி வுறூஉவெனத்
திறநிலை மூன்றுந் திண்ணிதிற் றெரியின்
வெண்பா வியலினு மாசிரிய வியலினும்
பண்புற முடியும் பாவின வென்ப.

என்-னின், மேலனவற்றுட் சிலபொருட்குரிய வேறுபாடுணர்த்துதல் நுதலிற்று.

(பி-ம்)—1 அளவுணர்த்துதல். 2 மூன்றாலடித்தே. 3 கலவெழு. 4 மேற்காட்டுதும். 5 புறநிலை வாயுறை செவியறி வென்றிவை-தொகுநிலை யளவி னடியில வெண்பா. 6 கைக்கிளைப் பொருட் செய்யுளும்.

55

புறநிலை வாழ்த்தும் வாயுறை வாழ்த்துஞ் செவியறிவுறூஉவும் மருட்பாவினால் வரப்பெறும் என்றவாறு.

எனவே மருட்பா நான்கு பொருளினல்லது வரப்பெறாதாயிற்று. (௱௯௩)

உதாரணம் வந்தவழிக் காண்க.

## சூ. ௱௯௪. பரிபாடல்லே,

## நாலீ ரைம்ப துயர்படி யாக
## வையைந் தாகு மிழிபடிக் கெல்லை.

என்-னின், பரிபாடற்கு அடிவரையறை யுணர்த்துதல் நுதலிற்று.
பரிபாடற் செய்யுள் நானூறடி யுயர்பாக இருபத்தைந்தடி யிழிபாக வரும் என்றவாறு.

எனவே இடையெல்லா அடியானும் வரப்பெறும் என்றவாறு.

கலிப்பாவினுள் ஒத்தாழிசைக்கு அளவு மேற்கூறப்பட்டது.

கலிவெண்பாட்டிற்கு வரையறையில்லை யெனப்பட்டது.

கொச்சகக்கலிக்கு வரையறை கூறாமையாற் பொருள் முடியுங்காறும் வரப்பெறும் என்று கொள்க. அவ்வழிப் பலவுறுப்பாகி வருதலின் அதற்குறுப்பாகிய செய்யுளளவிற்றுதல் வேண்டும்.

## உறழ்கலியுங் கொச்சகக்

கலிப்பாற்படும்.

(௱௫௫)

சூ ாகூ௫. அளவியல் வகையே யனைவகைப் படுமே.

என்-னின், மேற் சொல்லப்பட்டவை தொகுத்துணர்த்துதல் நுதலிற்று.

இவ்வதிகாரத்துள் ஈண்டு அதிகரிக்கப்பட்ட அளவியல் ஈண்டுச் சொன்ன 4வகை பெறும் என்றவாறு.

(௱௫௬)

சூ ாகூசு. எழுநிலத் தெழுந்த செய்யுட் டெரியி னடிவரை யில்லன வாறென மொழிப.

என்-னின், அடிவரையறை யில்லாதன வரையறுத் துணர்த்துதல் நுதலிற்று.

எழுநிலமாவன பாட்டு, உரை, நூல், வாய்மொழி, பிசி, அங்கதம், முதுசொல் என்பன. அவற்றுட் பாட்டொழிந்த ஆறும் அடிவரையில வென்றவாறு. (௪௭௭)

௪௭௮. அவைதாம்,

நூலி னான வுரையி னான
நொடியொடு
புணர்ந்த பிசியி னான
ஏது நுதலிய [5]முதுமொழி யான
[6]மறைமொழி கிளந்த மந்திரத் தான
கூற்றிடை வைத்த
குறிப்பி னான.

என்-னின், மேற் சொல்லப்பட்ட அவற்றையுமாமாறு உணர்த்துதல் நுதலிற்று.

வாய்மொழியெனினு மந்திரமெனினு மொக்கும். அங்கதமாவது 'செம்பொருள் சரந்ததென விருவகைத்தே' [செய்யுளியல்-௱௨௰] என்றதனாற் சரந்தவங்கத மெனினுஞ் சொற்குறிப்பெனினு மொக்கும். [7]அவையாமாறு வருகின்ற சூத்திரத்தாற் காட்டுதும். (௪௭௮)

---

(பி-ம்)—1 மருட்பாவினுளும். 2 மேற்கூறப்பட்டது. 3 கொச்சகக்கலிப்பாவுக்கு. 4 வகைப்படும். 5 மொழியினை. 6 மறையொடு. 7 அவைவருமாறு.

௬௱௯௮. அவற்றுள்,

நூலெனப் படுவது

நுவலுங் காலை

முதலு முடிவு மாறுகோ ளின்றித்
தொகையினும் வகையினும் பொருண்மை காட்டி
யுண்ணின் றகன்ற வுரையொடு [1]புணர்ந்து
நுண்ணிதின் விளக்க லதுவதன் பண்பே.

என்-னின், நூலாமாறு உணர்த்துதல் நுதலிற்று.

நூலென்று சொல்லப்பட்டது எடுத்துக்கொண்ட பொருளொடுமுடிக்கும் பொருண்மை மாறுபடாமற் கருதியபொருளைத் தொகையானும் வகையானும் காட்டி யத னகத்துநின்றும் [2]விரிந்தவுரையோடு பொருந்த முடைத்தாகி [3]நுண்ணியதாகி [விளக்கு] வது நூற்கியல்பு என்றவாறு.

அகன்றவுரையோடு பொருந்துதலாவது சொல்லாத பொருண்மையெல்லாம் விரிக்கவேண்டியவழி அதற்கெல்லாம் இடனுண்டாதல். (௱௫௧)

௬௱௯௯. அதுவே தானு மொருநால் வகைத்தே.

என்-னின், நூல் பாகுபடுமாறு உணர்த்துதல் நுதலிற்று.
மேற்சொல்லப்பட்ட நூல் நான்குவகையை யுடைத்து என்றவாறு.

அவையாமாறு முன்னர்க் கூறப்படும்.

(௲கூ௰)

சாஎ௰. ஒருபொரு ளுதலிய
சூத்திரத் தானு
மினமொழி கிளந்த
வோத்தி னானும்
பொதுமொழி கிளந்த
படலத் தானு
மூன்றுறுப் படக்கிய
பிண்டத் தானுமென்
றாங்கனை மரபி னியலு
மென்ப.

என்-னின், மேல்

லித்து.

ஒருபொரு ளநுதலிய சூத்திரத்தானும் என்பது—ஆசிரியன் யாதானு மொரு பொருளைக் குறித்துக்கூறுஞ் சூத்திரத்தானும் என்றவாறு.

இனமொழி கிளந்த ஓத்தினானும் என்பது—இனமாகிய பொருள்கள் சொல்லப் படும் ஓத்தினானும் என்றவாறு.

பொதுமொழி கிளந்த படலத்தானும்என்பது—மேற் சொல்லப்பட்ட இனங்கள் பலவற்றையுங் கூறப்படும் படலத்தானும் என்றவாறு.

மூன்றுறுப் படக்கிய பிண்டத்தானும் என்பது—இம்மூன்றனையும் உறுப்பாக அடக்கிய பிண்டத்தானும் என்றவாறு.

ஆங்கனை மரபி னியலு மென்ப என்பது—அம்மரபினான் இயலும் நூலென்ப என்றவாறு. (௪௭௧)

அவற்றிற்கு இலக்கண முன்னர்க் கூறப்படும்.

---

(பி-ம்)—1 பொருண்டி. 2 பிரித்த. 3 நுண்ணிதாகிய பொருள் விளக்கலாகுது நூற் லியல்பாம். 4 மீரிரு. 5 காட்டுதும். 6 தான.

[illegible]

## சாஎக. அவற்றுள்,

சூத்திரந் தானே
யாடி நிழலி னறியத் தோன்றி
நாடுத லின்றிப் பொருணனி [1]விளங்க
யாப்பினுட் டோன்ற யாத்தமைப் பதுவே.

என்-னின், சூத்திரத்திற்கு இலக்கண முணர்த்துதல் நுதலிற்று.

சூத்திரமாவது கண்ணாடியி னிழற்போல விளங்கத்தோன்றி யாராயாமற் பொருள் நனிவிளக்குமாறு யாப்பின்கண்ணே தோன்ற யாப்பதென்றவாறு.

ஆடிநிழலி னறியத் தோன்றுவதாவது—சூத்திரம் படித்தவளவிலே அதனாற் சொல்லப்படுகின்ற பொருள் ஒருங்குதோற்றல்.

நாடுதலின்றிப் பொருணனி விளங்க யாத்தலாவது—அதன்கண் யாக்கப்பட்ட சொற்குப் பொருள் ஆராயாமற் புலப்படத் தோன்றுமாறு யாத்தல்.

### உதாரணம்:—

'வேற்றுமை தாமே யேழென மொழிப
விளிகொள் வதன்கண் விளியோ டெட்டே.'

[தொல்-வேற்றுமையியல்-க]

என்றவழி யாப்பின்கண்ணே பொருடோன்ற யாத்தவாறுங் போலக் கருதியபொருளுந் தோற்றியவாறுங் கண்டுகொள்க.

கண்ணாடி நிழற்

(௩௬௨)

## ௪௱௭௨. நேரின மணியை

நிரல்பட வைத்தாங்

கோரினப் பொருளை யொருவழி

வைப்ப

தோத்தென மொழிப வுயர்மொழிப்

புலவர்.

என்-னின், ஓத்திற்கு இலக்கண முணர்த்துதல் நுதலிற்று.

ஒத்தவினத்ததாகிய மணியை [2]ஒருங்கே கோவைப்பட வைத்தாற்போல [3]ஓரினமாக வரும்பொருளை ஓரிடத்தே சேரவைத்தல் ஓத்தென்று பெயராம் என்றவாறு.

எனவே அவ்வினமாகிச் சேர்ந்தநிலைக்கு ஓத்தென்ற பெயராயிற்று. றுமையோத்து', என்பதனானறிக.

அது 'வேற்

(௩௬௩)

ஒருநெறி யின்றி விரவிய பொருளாற்
பொதுமொழி தொடரினது படல மாகும்.

என்-னின், படலத்திற்கு இலக்கணமுணர்த்துதல் நுதலிற்று.

ஓரினமாகிய நெறியின்றிப் பலநெறியான் வருவன பொருளானே பொதுமொழியாற் றொடர்வுபடின் அது படலமெனப் பெயராம் என்றவாறு.

அது கிளவியாக்க முதலாக எச்சவியல் ஈறாகக் கிடந்த ஒன்பதோத்தினும் வேறுபாடுடையவாயினும் சொல்லிலக்கணம் உணர்த்தினமையாற் சொல்லதிகாரம் எனப் பெயர் பெறுதல்.

அதிகாரம் எனினும் படலமெனினு மொக்கும். (ாசச)

சாஎச. மூன்றுறுப் படக்கிய தன்மைத் தாயிற்
றோன்றுமொழிப் புலவர தி பிண்ட மென்ப.

(பி-ம்)—1 விளக்கி. 2 ஒருக்குசேரவைத்தாற்போல. 3 ஓரோவோரினமாகி.



என்-னின், பிண்டமென்பது உணர்த்துதல் நுதலிற்று.

மூன்று றுப்பினையும் அடக்கின தன்மைத்தாயின் அதனைப் பிண்டமென்று சொல்லுவர் என்றவாறு.

மூன்றுறுப்படக்குதலாவது சூத்திரம்[1] பலவுண்டாகி ஒத்தும் படலமு மின்றாகி வரினும், ஒத்துப்பலவுண்டாகிப் படலமின்றிவரினும், படலம் பலவாகிவரினும், அதற்குப் பிண்டமென்று பெயராம் என்றவாறு.

அவற்றுட் சூத்திரத்தாற் பிண்டமாயிற்று இறையனார் களவியல். ஒத்தினாற் பிண்டமாயிற்று பன்னிருபடலம். அதிகாரத்தாற் பிண்டமாயிற்று இந்நூலென்றுகொள்க. இவற்றைச் சிறுநூல் இடைநூல் பெருநூல் எனப்படும். (௱௯௫)

௪௱௭௫. பாட்டிடை வைத்த குறிப்பி னானும்

பாவின் றெழுந்த கிளவி யானும்
பொருண்மர
பில்லாப் பொய்ம்மொழி யானும்
பொருளொடு புணர்ந்த நகைமொழி
யானுமென்
றுரைவகை
நடையே நான்கென மொழிப.

என்-னின், உரை பாகுபடுமாறு உணர்த்துதல் நுதலிற்று.

பலசொல் தொடர்ந்து பொருள்காட்டுவனவற்றுள் ஓசைதழீஇயவற்றைப் பாட்

டென்றூர். ஓசையின்றிச் செய்யுட் டன்மைத்தாய் வருவது நூலெனப்பட்டது.

அவ்வகையுமன்றி வரும் உரைத்திறன் ஈண்டு உரை யெனப்பட்டது.

பாட்டிடைவைத்த குறிப்பாவது—பாட்டினிடை வைக்கப்பட்ட பொருட்குறிப்

பினும் உரையாம் என்றவாறு.

அவையாமாறு:

'ஊர்க்கா ணிவந்த பொதும்பருள்' என்னுங் குறிஞ்சிக்கலியுள்,

[illegible] 'இவளைச் சொல்வாடிக் காண்பேன் நகைத்து.' [கலித்-௫௬]

என்றது உரைக்குறிப்பு.

'ஒரூஉ, கொடியிய னல்லார்' என்னும் மருதக்கலியுள்,

'கடிய தமக் கியார்சொலத் தக்காரா மற்று' [கலித்-அஅ]

என்றது மது.

சிலப்பதிகாரத்து ஆய்ச்சியர் குரவையுள்,

கயலெழுதிய விமயநெற்றியி
னயலெழுதிய புலியும் வில்லும்
நாவலந்தண் பொழின்மன்னரோ
டேவல்கேட்ப வரசாண்ட
மாலைவெண் குடைப் பாண்டியன்கோயிலுட்

காலைமுரசியம்புமாதலின்
நெய்ம்முறை நமக்கின்றாகுமென
ஐயைதன் மகளைக்கூய்க்
கடைகயிறு மத்துங்கொண்
டிடைமுதுமகள் வந்துதோன்றுமன்.

என்றது மது.

(பி-ம்)—1 பலவுடைத்தாகி. 2 பாட்டினிடையிடை.



# தொல்காப்பியம் - இளம்பூரணம்

பாவின்றெழுந்த கிளவியானும் என்பது—பாக்களை யொழியத் தோற்றிய சொல்லானும் உரையாம் என்றவாறு.

அஃதாவது, வழக்கின்கண் ஒருபொருளைக் குறித்து வினவுவாருஞ் செப்புவாருங் கூறுங் கூற்று.

அதுவும் இலக்கணம் பிழையாமற் கூறவேண்டுதலானும் ஒருபொருளைக் குறித்துச் செய்யப்படுதலானுஞ் செய்யுளாம். இதனைக் குறித்தன்றே 'செப்பும் வினாவும் வழாஅல் ஓம்பல்' [தொல். கிளவியாக்கம்-௰௩] என்பது முதலாகக் கூறப்பட்ட இலக்கணமெல்லாம் என்று கொள்க.

பொருளொடு புணராப் பொய்ம்மொழியானும் என்பது—பொருளியல்பில்லாப் பொய்ம்மொழியானும் உரைவரும் என்றவாறு.

பொருளொடு புணர்ந்த நகைமொழியானும் என்பது—பொருளைப் பொருந்திய நகைமொழியாய் வருகின்றது என்றவாறு.

நகைமொழியாவது—மெய்சொல்லப்பட்ட உரைபொருந்தாதென இகழ்ந்து கூறுதல். அவ்விகழ்ச்சியின்பின்னர்ப் பொருளுணர்த்தும் உரை பிறக்குமாதலின் பொருளொடு புணர்ந்த நகைமொழியானும் உரைவருமென்றார்.

என்றுரைவகை நடையே நான்கென மொழிப என்பது—இவ்வகையினான் உரை நான்குவகைப்படும் என்றவாறு. (௱௬௬)

சாஎகூ. அதுவே தானு
மிருவகைத் தாகுப.

என்-னின்;
மேற்சொல்லப்பட்ட உரை இரண்டு வ
கைப்படும் என்றவாறு.

[1]அது மைந்தர்க்கு
உரைப்பனவும் மகளிர்க்கு
உரைப்பனவுமாம். (சாசுஎ)

சாஎஎ. ஒன்றே மற்றுஞ்
செவிலிக் குரித்தே
ஒன்றே
யார்க்கும் வரைநிலை யின்றே.

என்-னின், மேல்
இருவகைப்படும் என்ற உரையை

யுரைத்தற் குரியாரை உணர்த்துதல் நுதலிற்று.

மகளிர்க்கு உரைக்குமு ரை செவிலிக்குரித்து. மைந்தர்க்கு உரைக்குமுரை யெல் லார்க்கு முரித்தென்றவாறு.

செவிலி இலக்கணத்தின் உரைக்கின்றவுரையும், பாட்டியுரைக்கின்றவுரையும் கூறவேண்டாவெனின் அவ்விடங்களில் வரும் உரை பொருள்பற்றி வருதலின் அப்பொருள் கூறவேண்டுமென்க.

அன்றியும் 'அதுவே தானும்' என்பது பொருளொடுபுணர்ந்த நகைமொழியைச் சுட்டிற்றாகி அம்மொழி இரண்டு கூறுபடுமெனப் பொருளுரைப்பினு மமையும். (நச்.)

சாஎஅ. ஒப்பொடு
புணர்ந்த உவமத் தானும்
தோன்றுவது கிளந்த துணிவி னானும்
என்றிரு வகைத்தே பிசிநிலை வகையே.

என்-னின், 5பிசியாமாறு

உணர்த்துதல் நுதலிற்று.

ஒப்போடே புணர்ந்த வுவமை நிலையானும் பிசியாம்; துணிவினானும் பிசியாம் என்றவாறு.

தோன்றுவதனைச் சொன்ன

(பி-ம்)—1 இரண்டுவகையாவது. 2 கூறுவரேனவெனின். 3 கூறலென்க. 4 பிறன் கேட்பக் கூறப்படுமெனப். 5 பிசிநிலைவகையாமாறு.



'அச்சுப்போலே பூப்பூக்கும் 1அமலேயென்னக் காய்காய்க்கும்' என்பது பிசி. இது வுவமைபற்றி வந்தது. (ஈகூக)

சாஎகூ.

நுண்மையுஞ் சுருக்கமு மொளியு முடைமையு
மென்மையு மென்றிவை விளங்கத் தோன்றிக்
குறித்த பொருளை முடித்தற்கு

வருஉ
மேது நுதலிய முதுமொழி

யென்ப.

என்-னின், முதுமொழி யாமாறு
உணர்த்துதல் நுதலிற்று.

நுண்மை விளங்கவுஞ் சுருக்கம்
விளங்கவும் ஒளியுடைமை விளங்கவு
மென்மை விளங்கவு மென்று
இன்னோரன்ன விளங்கவும் தோன்றிக்
கருதிய பொருளை முடித்தற்கு வரும்
ஏதுவைக் குறித்தன
முதுமொழியென்று சொல்லுவர்

என்றவாறு. (௩௭௰)

௫௱அ௰. நிறைமொழி மாந்த
ராணையிற் கிளந்த
மறைமொழி தானே மந்திர
மென்ப.

என்-னின், மந்திர மாமாறு
உணர்த்துதல் நுதலிற்று.

நிறைந்தமொழியை யுடைய
மாந்தர் ஆணையாற் சொல்லப்பட்ட
மறைந்தசொல்
மந்திரமாவ தென்றவாறு.

அது வல்லார்வாய்க் கேட்டுணர்க.
(௩௭௧)

௫௱அ௧.

எழுத்தொடுஞ் சொல்லொடும் புணரா தாகிப்
பொருட்புறத் ததுவே குறிப்பு மொழியே.

என்-னின், குறிப்புமொழி யாமாறு உணர்த்துதல் நுதலிற்று.

எழுத்தொடும் சொல்லொடும் புணராதாகிச் சொல்லினு ணுணரப்படும் பொருளின் புறத்ததுவே குறிப்புமொழி என்றவாறு.

மேல் அங்கதமென்று சொல்லி யீண்டுக் குறிப்புமொழி யென்றதனுன் இச்சொல் வசைகுறித்து வருமென்றுகொள்க.

புகழ்குறித்து வந்தாற் குற்றமென்னை யெனின், அதனை வெளிப்படக்கூறக் கேட்டார்க்குந் தனக்கும் இன்பம் பயத்தலிற் குறிப்பினுற் கூறல்வேண்டுவது வசையென்று கொள்ளப்படும். (எஎஉ.)

# சாஅஉ.

பாட்டிடைக் கலந்த பொருள வாகிப்
பாட்டி னியல பண்ணத் திப்யே.

என்-னின், பண்ணத்தி யாமாறு உணர்த்துதல் நுதலிற்று.

மேல் இத்துணையும் [பாவும்] பாவின்றி வழங்குவனவும் எடுத்தோதினர். இனிப் பிறநூலாசிரியர் விரித்துக்கூறின இசைநூலின் பாவினமாமாறு உணர்த்துதலின் இது...

பாட்டிடைக் கலந்த பொருளவாகி என்பது—பாட்டின்கட் கலந்த பொருளையுடைத்தாகி யென்றவாறு.

எனவே அவ்வடி பாவிற் குரியபொருள் கொள்ளப்படும்.

பாட்டினியல பண்ணத்திப்யே என்பது—பாட்டுக்களின் இயல்பையுடையவாம் பண்ணைத் தோற்றுவிக்குஞ் செய்யுட்கள் என்றவாறு.

(பி-ம்)—1 மமமென்னும். 2 ளைந்த. 3 அப்பாவிற்.

# தொல்காப்பியம் - இளம்பூரணம்

பண்ணைத் தோற்றுவித்தலாற் பண்ணத்தியென்றார்.

அவையாவன [1]சிற்றிசையும் பேரிசையு முதலாக இசைத்தமிழில் ஓதப்படுவன. அவையாமாறு வருகின்ற சூத்திரத்தாற் [2]கூறுப. (௩௭௫)

சாஅரு. அதுவே தானும் பிசியொடு மானும்.

என்-னின், மேற்சொல்லப்பட்டதனுள் ஓருதாரண முணர்த்துதல் நுதலிற்று.

மேற்சொல்லப்பட்ட பண்ணத்தி பிசியோ டொத்த அளவிற்று என்றவாறு.

பிசியென்பது இரண்டடி யளவின்கண்ணே [3]வருவதாதலின் இதுவும் இரண்டடியான் வருமென்று கொள்ளப்படும்.

உதாரணம்:—

'கொன்றை வேய்ந்த செல்வ னடியை
என்று மேத்தித் தொழுவோம் நாமே.'

இது பிசியோடு ஒத்தவளவிற் றிப் பாலையாழென்னும் பண்ணிற்கு இலக்கண.

பாட்டாகி [4]வர்ச்சையமயிற்
பண்ணத்தியாயிற்று. பிறவுமன்ன.

சாஅசு. அடிமிமிர் கிளவி
யீரா றாகு
மடிமிகந்து வரினுங் கடிவரை
யின்றே.

என்னின். இதுவும்
பண்ணத்தி பாகுபடுமாறு
உணர்த்துதல் நுதலிற்று.
பண்ணத்தியெனினும்
பாவினமெனினு மொக்கும்.

'நாற்சீர் கொண்ட தடியெனப் படுமே' [செய்யுளியல்-௩௧] யென்றமையான் அடியென்பது நாற்சீரான் வருவதென்று கொள்க.

[6]நாற்சீரடியின் மிக்குவரும் பாட்டுப் [7]பன்னிரண்டும் பட்டு வருவனவுங் கொள்ளப்படும் என்றவாறு.

அவ்வழி அவ்வடியின் வேறு

இதனாற் சொல்லியது இருசீரடி [8]முதலிய எல்லாவடிகளானு மூன்றடிச் சிறுமையாக வரும் பாவினம் என்றவாறும்.

பன்னிரண்டாவன ஆசிரியம் வஞ்சி வெண்பாக் கலியெனச் சொல்லப்பட்ட நான்கு பாவினோடுந் தாழிசை துறை விருத்தமென்று மூன்றினத்தையும் உறழப் பன்னிரண்டாம்.

அவற்றுள் ஆசிரியத் தாழிசையாவது மூன்றடி யொத்துவருவது.

'நீடற்க [9]வினையென்ற நெஞ்சி னுள்ளி
நிறைமலர்சார் தொடுபுனையு நீரு மேந்தி
வீடற்கு [10]தன்மையின் விரைந்து சென்று
வின்றேடு[11] மண்ணிடை நன்றும் பெற்றி

(பி-ம்.—1 சிறிசை. 2 காட்டுதும். 3 வருவதொன்றுதலின். 4 வருதலிற். 5 பகுதி பமொறு. 6 நாற்சீரின். 7 பன்னிரண்டு வகைப்படும். 8 முதலாகிய. 9 வினைவென்ற. 10 தன்மையின்விரிந்து. 11 மண்ணிடையே.

# பொருளதிகாரம்

## செய்யுளியல்

சாஜக

என வரும்.

பாடற்கும் [1]பணிதற்குந் தக்க தொல்சீர்ப்
பகவன்ற[2] னடியிரண்டும் [3]பணிது நாமே.' [யாப். வி. ப. உகச]

அவ்வழி ஒருபொருண்மேன் மூன்றடுக்கி வருவன சிறப்புடைத்தென ஒருசாரார்
தாரணம் காட்டுமாறு:—

'கன்று குணிலாக் [4]கனியுதிர்த்த மாயவ
னின்றுநம் மானுள் வருமே லவன்வாயிற்
கொன்றையந் தீங்குழற் கேளாமோ [5]தோழி
பாம்பு கயிறாக் கடல்கடைந்த மாயவ
னீங்குநம் மானுள் வருமே லவன்வாயி
லாம்பலந் தீங்குழல் கேளாமோ [6]தோழி

கொல்லையஞ் சாரற் குருந்தொசித்த [7]மாயவ
[8]னெல்லைநம் மானுள் வருமே லவன்வாயின்
முல்லையந் தீங்குழல் கேளாமோ
[9]தோழி.'

இவை மூன்றடியான் மூன்றடுக்கிவந்த ஆசிரியத் தாழிசை யென்றவாறு.

* இவை அளவடியான் வருதலானும் ஒத்து மூன்றுவருதலானும் இவ்வாசிரியர் மதத்தால் தரவின்றாகித் தாழிசைபெற்ற கொச்சக வொருபோகெனப்படும். மேற்காட்டி

யதே ஆசிரியத்தாழிசை.

இனி, வஞ்சித்தாழிசையாவது

குறளடி நான்கினுல் ஒருபொருண்மேன்
மூன்
றடுக்கி வரும்.

'மடப்பிடியை
மதவேழந்
தடக்கையால் வெயின்மறைக்கும்
இடைச்சுர
மிறந்தார்க்கே
நடக்குமென்
மனனேகாண்;
இரும்பிடியை யிகல்வேழம்
பெருங்கையால் வெயின்மறைக்கும்
அருஞ்சுர மிறந்தார்க்கே விரும்புமென்
மனனேகாண்;

பேடையை யிரும்போத்துத்

தோகையால்
வெயின்மறைக்கும்
காடக மிறந்தார்க்கே
யோடுமென் மனனேகாண்.' [யாப்.

வி. ப. ௩௪௪]

எனவரும்.

அஃதேல், இவையு மூன்றடிக்கி வருதலிற் கொச்சக வொருபோகாதல் வேண்டு மெனின், அளவடியான் வாராமையான் ஆகாதென்க.

இனி, வெண்டாழிசையாவது மூன்றடியான்வந்து வெண்பாப்போல இறும். அது

(பி-ம்)—1 மகளிர்க்கு...தசொற்சீர். 2 ளடிப்பிணையே. 3 பணிர்து. 4 கனியெதிர்த மாமாயன். 5 சோழீஇ. 6 தோழீஇ. 7 மாமாய. 8 னெல்லிகம். 9 தோழீஇ. * ஒருபிரதியில் இவ்வாக்கியங்கள் காணப்பெறவில்லை.





'நன்பி தென்றாதிய சொல்லார்
முன்பு நின்று முனிவு செய்யார்
அன்பு வேண்டு பவர்.' [யாப். வி. ப. ௨௪௪]

எனவரும்.

## சிந்தியல் வெண்பா

ஒருபொருண்மேன் மூன்றடுக்கி
வருவதனை வெள்ளொத்

தாழிசை யென்ப. அது

'அன்று யறங்கொ ளலங்கிளர் சேட்சென்னி
யொன்று ருடைபுறம் போல நலங்கவர்ந்து
தன்றான் [1]றுறந்து விடல்;
எடி யறங்கொ ளலங்கிளர் சேட்சென்னி
கூடா
ருடைபுறம் போல நலங்கவர்ந்து
நீடான் றுறந்து விடல்;
பாவா யறங்கொ ளலங்கிளர்
சேட்சென்னி
மேவா ருடைபுறம் போல நலங்கவர்ந்து

காவான் றுறந்து விடல்' [யாப். வி. ப. உசச]

எனவரும்.

கலித்தாழிசையாவது

அடிவரையின்றி ஒத்துவந்து ஈற்றடி

சிலசீர் மிக்கும் குறைந்

தும் வருவது. அது

'வான்வரி வேங்கை

வழங்குஞ் சிறுநெறியென்

கேள்வரும் போழ்தி

னெழால்வாழி வெண்டிங்காள்

கேள்வரும் போழ்தி

னெழாதாய்க் குறுஅலியரோ

நீள்வரி நாகத் தெயிறே

வாழி வெண்டிங்காள்.' [யாப். வி. ப. ௩௩௰] எனவரும்.

இத்தாழிசை ஒருபொருண்மேல் மூன்றடுக்கிவரினும் ஒரோச்சக வொருபோகெனப் படா, கலித்தாழிசை யெனப்படும்: ஈற்றடி மிக்கு வருதலான்.

இனி ஆசிரியத்துறையாவது நான்கடியாய் [2]இடையிடை சீர் குறைந்துவரும். அது

'கரைபொரு கான்யாற்றங் கல்லதர் எம்முள்ளி வருதிராயின்
அரையிருள் யாமத் தடுபுலியோ நும்மஞ்சி யகன்று போக
[3]அரையுருமே நுங்கை வேலஞ்சு நும்மை
வரையர மகளிர் வௌவுத லஞ்சுதும் வாரலையோ.'

[யாப். வி. ப. உசுஞ]

எனவரும்.

வஞ்சித்துறையாவது குறளடி நான்கினால் [4]தனித்துவரும். அது

'முல்லைவாய்

முறுவலித்தன

கொல்லைவாய்க் 5குருந்தீன்றன

(பி.ப)—1 முடர்க்து. 2 யிடையடி சிலசீர். 3 கரையுருமோ துக்கை வேலஞ்சக. 4 தனிவருவது. 5 குருகீன்றன.



மல்லல்வான் மழைமுழங்கின
செல்வர்தேர் 1வரவுகாண்குமே.' [யாப். வி. ப. ௩௪௧]

எனவரும்.

இனி வெண்டுறையாவது மூன்றடிச் சிறுமையாக ஏழடிப் பெருமையாக வந்து இறுதியடிகளில் சில சீர் குறைந்துவருவது.

'குழலிசைய வண்டினங்கள் கோழிலைய செங்காந்தட் குலைமேற் பாய
அழலெரியின் மூழ்கினவா லந்தோ வளியவென் றயல்வாழ் மந்தி
2கலுழ்வனபோ னெஞ்சயர்ந்து கல்லருவி தூஉம்
நிழல்வரை நன்னாட னீப்பனோ வல்லன்.' [யாப். வி. ப. ௨௪௧]

எனவரும்.

3பிறவும் வந்தவழிக் காண்க.

கலித்துறை யாவது [4]நெடிலடி
நான்கினான் வருவது.

அஃதாவது, ஐஞ்சீரான்

வருவதும், பதினாறும் பதினேழும்
எழுத்துப்பெற்று
நானகடியான வருவனவுமாம்.

'யானுந் தோழியு மாயமு மாடுந்
துறைநண்ணித்
தானுந் தேரும்
பாகனும் வந்தென் னலனுண்டான்
தேனும் பாலும் போல்வன சொல்லிப்
பிரிவானேல்
கானும் புள்ளுங்
கைதையு மெல்லாங் கரியன்றே.'

[யாப். வி. ப. ௩௩௨]

'நல்லார் பழிப்பி லெழிற்செம் பவளத்தை
நாணிநின்ற பொல்லா முக்கண்ணெங்கள்
போதக மேபுர மூன்றெரித்த வில்லா
ளனீந்த விநாயக னேயென்று
மெய்ம்மகிழ
வல்லார் மனத்தன்றி மாட்டா ளிருக்க
மலர்த்திருவே.'

[மூத்தநாயனார் திருவிரட்டை
மணிமாலை-௨௰]

இது நேரசை முதலாகிப்
பதினெழுத்தான் வந்தது.

5 'கனிய நினைவொடு நாடொறுங் காதல்
செய்யுமடியார்க்

இனிய னவனொரு வின்னூக் கிலனெவ ரும்வணங்கப்
பனிவெண் பிறைநறுங் கொன்றைச் சடைப்பலி தேரியற்கை
முனிவன் சிறுவன் பெருவன் கோல் யானை முகத்தவனே.'
[மூத்தநாயனார் திருவிரட்டை மணிமாலை-௩]

இது நிரையசை முதலாகிப் பதினேழெழுத்தான் வந்தது.

இனி ஆசிரிய விருத்தமாவது [7]அறுசீரடி முதலாகிய மிக்க அடியினான் நான்கடியு மொத்துவரும். அது

(பி-ம்)—1 வரக்காணேன். 2 கழல்வஞ்சிப்பா வொஞ்சகைக்கது. 3 மேலும் வந்தவழிக் கண்டுகொள்க. 4 நெடிலடியாகிய ஐஞ்சீரடி நான்கினான் வருவது. ஓரடி பதினைந்தும் பதினாறும் பதினேழும் எழுத்துப்பெற்று வருவன 5 கனியுக். 6 படுமெடியுமர்க். 7 அறுசீர்முதலாக மிக்க அடி நான்கடியும் ஒத்துவருவது.



# தொல்காப்பியம் - இளம்பூரணம்

'இரைக்கு மஞ்சிறைப் பறவைக [1]ளெனப்பெய
[2]ரினவண்டு புடைசூழ
நுரைக்க ளொன்றுமக் குழம்புக டெகுண்டெழ
நுடங்கிய [3]விலயத்தார்
திரைக்க ரங்களிற் செழுமலர் சந்தனத்
திரள்களைக் கரைமேல்வைத்
தரைக்கு மற்றிது குணகடற் றிரையொடு
[4]பொருதல தவியாதே.' [சூளாமணி-கல்யாண-௰க]

எனவரும்.

பிறவும் வந்தவழிக் காண்க.

இனி வஞ்சிவிருத்தமாவது முச்சீரடி நான்காகிவரும். அது

‘இருது வேற்றுமை யின்மையாற்
சுருதி மேற்றுறக் கத்தநே
டரிது வேற்றுமை யாகவே
கருது வேற்றடங் கையினாய்.’
[சூளாமணி-சீயவதை-௩௭௰]

எனவரும்.

இனி, வெளிவிருத்தமாவது நான்கடியானுயினு மூன்றடியானுயினும் அடிதோறுந் தனிச்சொற் பெற்றுவரும். அது

‘ஆவா வென்றே யஞ்சின ராழ்ந்தா-ரொருசாரார்
கூகூ வென்றே கூவிளி கொண்டா-ரொருசாரார்
மாமா வென்றே மாய்ந்தனர் நீத்தா-ரொருசாரார்
ஏகீர் நாய்கீ ரென்செய்து மென்றா-ரொருசாரார்’

எனவரும்.

இது நான்கடியான் வந்தது.

மூன்றடியான் வருவது வந்தவழிக் காண்க.

இனி, கலிவிருத்தமாவது நாற்சீரடி நான்கினால் வரும்.

'தேம்பழுத் தினியநீர் மூன்றுந் தீம்பலா
மேம்பழுத் [7]தளிர்ந்தன சுளையும் வேரியும்
மாம்பழக் கனிகளு மதுத்தண் டீட்டமுந்
தாம்பழுத் துளசில தவள மாடமே.' [சூளாமணி-நகர-மச]

எனவரும்.

இவையெல்லாம் உரையிற்கோட லென்பதனானும் பிறநூன் முடிந்தது தானுடம்படுத லென்பதனானுங் கொள்க. (எஎடு)

சஎஅடு. கிளரியல் வகையிற் கிளந்தன தெரியி
னளவியல் வகையே யனைவகைப் படுமே.

---

(பி-ம்.—1 னைப்பொரு. 2 தினைவுண்டு. 3 வலத்பதாற். 4 பொருதலைத். 5 யாழா வொருசாரார். 6 வொருசாரார். 7 தளைந்தன.

என்-னின், மேற் சொல்லப்பட்டன தொகுத்து உணர்த்துதல் நுதலிற்று.

ஈண்டுச் சொன்ன வகையினாற் சொல்லப்பட்டனவற்றை யாராயுங்காலத்து அளவியல் வகைய எத்திணைப்பாகுபடும் என்றவாறு.

இதனாற் சொல்லியது செய்யுளாவது அடிவரையுள்ளனவும் அடிவரையில்லனவுமென இருவகைப் படுமென்பதூஉம் அடிவரையுள்ளன ஆசிரியம், வஞ்சி, வெண்பா, கலி, எனவும், தாழிசை, துறை, விருத்த மெனவும், அடிவரையில்லன, நூல், உரை, பிசி, முதுமொழி, மந்திரம், குறிப்புமொழி என அறுவகைப் படுமென்பதூஉ முணர்த்தியவாறு.

அஃதேல் மேல் 'அளவியல் வகையே யனைவகைப்படுமே' என்ற சூத்திரமிகையாதல் வேண்டுமெனின், அது பாவிற்கு அடி வரையறுத்துக் கூறப்பட்டது. இது செய்யுளினைத்தென வரையறுத்துணர்த்திற்று. (௪௭௬)

௪௮௬. கைக்கிளை முதலா [1]வேழ்பெருந் திணையு

முற்கிளந் தனவே [2]முறையி னான.

என்-னின், நிறுத்த முறையானே திணையாமாறு உணர்த்துதல் நுதலிற்று.

திணையாவது கைக்கிளை முல்லை குறிஞ்சி பாலை மருதம் நெய்தல் பெருந்திணை யென்பன. அவை முறைமையினான்

மேற்சொல்லப்பட்டன என்றவாறு.

முறைமையினாற் சொல்லுதலாவது, பாடாண்பாட்டினைக் கைக்கிளைப்புறமெனவும், வஞ்சியை முல்லைப்புறமெனவும், வெட்சியைக் குறிஞ்சிப்புறமெனவும், வாகையைப் பாலைப்புறமெனவும், உழிஞையை மருதப்புறமெனவும், தும்பையை நெய்தற்புறமெனவும், காஞ்சியைப் பெருந்திணைப் புறமெனவும், ஓதிய நெறி கொள்ளப்படும். இவ்வாறு கொள்ளவே பதினான்கு திணையும் ஏழாகி யடங்குமாயின. (௱௭௨)

சா.அள.

காமப் புணர்ச்சியு மிடந்தலைப் [3]படலும்
பாங்கொடு தழாஅலுந் தோழியிற் புணர்வுமென்

ருங்கநால் வகையினு [4]மடைந்த சார்பொடு
மறையென மொழிதன் மறையோ ராறே.

என்-னின், கைகோள்வகையிற் களவாமாறு உணர்த்துதல் நுதலிற்று.

இயற்கைப் புணர்ச்சியும் [5]இடந்தலைப்பாடும் பாங்கற்கூட்டமும் தோழியிற் கூட்டமு மென்று சொல்லப்பட்ட நான்குவகையானும் அவற்றைச் சார்ந்துவருகின்ற கிளவியானும் வருவன களவென்று கூறுதல் வேதமறையோர் நெறி என்றவாறு.

இதனுள் களவென்றது மறையென்றதனான் இது தீமைபயக்குங் களவன்மை கொள்க.

இன்-ஆன்பொருள்பட வந்தது. ஒடு-எண்.

(௱எஅ) சூ.௱அஅ.

மறைவெளிப் படுதலுந் தமரிற் பெறுதலு
மிவைமுத லாகிய வியனெறி திரியாது
[6]மலிவும் புலவியு மூடலு முணர்வும்
பிரிவொடு [7]புணர்ந்தது கற்பெனப் படுமே.

என்-னின், கைகோள்வகையிற் கற்பாகிய கைகோள் உணர்த்துதல் நுதலிற்று.

(பி-ம்)—1 வெழுபெருக். 2 முறைமையி. 3 பாடும். 4 மறைந்த சால்பொடு. 5 இடந்தலைப்பாடும். 6 மலிதலும். 7 புணர்ந்தவும்.

# தொல்காப்பியம் - இளம்பூரணம்

களவொழுக்கம் வெளிப்படுதலும் களவொழுக்கமின்றித் தமரானே பெறுதலு மென்று சொல்லப்பட்ட இவை முதலாகிய இயற்கைநெறியிற் றப்பாது மகிழ்தலும் புலத்தலும் ஊடலும் ஊடனீர்தலும் பிரிதலுமென்று சொல்லப்பட்ட இவற்றொடு கூடிவருவது கற்பென்று சொல்லப்படுவது என்றவாறு.

இயனெறி என்றதனாற் கரணத்தின் அமைதல் இன்றியமையாதென்று கொள்க.
(௱அக)

சூ.௱அகூ. மெய்பெறு மவையே கைகோள் வகையே.

என்-னின்,
மேற்சொல்லப்பட்டவற்றைத்
தொகுத்து உணர்த்துதல் நுதலிற்று.

பொருள்பெறவந்த மேற்சொல்லப்பட்ட களவு கற்பென்னும் கோள்வகையாவன என்றவாறு.

இருவகையே ஊ |

எகாரக் தேற்றம்.

(௱அ௰)

சூ௱கூ௰. பார்ப்பான்

பாங்கன் றோழி செவிலி .
சீர்த்தகு சிறப்பிற் கிழவன்
கிழத்தியோ
டளவியன் மரபி னறுவகை
யோருங்
[1]களவிற் கிளவிக் குரியரென்ப.

என்-னின்,

[2]இனிக்கூறப்படுவாரை
யுணர்த்துவார் களவின்கட்
கூறுவாரை
யுணர்த்துதல் நுதலிற்று.

பார்ப்பார் முதலாகச்

சொல்லப்பட்ட கலந்தொழுகு மரபினையுடைய அறுவகை யோரும் களவொழுக்கக் கிளவி கூறுதற் குரியரென்றவாறு.

தூதி எண்வகையின்கண் வந்தது. கலந்தொழுகு மரபென்றதனாற் பார்ப்பாரினும் பாங்கரினுஞ் சிலரே இதற் குடம்படுவாரென்று கொள்க.

பார்ப்பான்

உயர்குலத்தானாகிய தோழன்.

பாங்கன் ஒத்த குலத்தானும் இழிந்த குலத்தானுமாகிய தோழன். (௱௮௧)

சூ ௱௯௧. பாணன் கூத்தன்
விறலி பரத்தை
யாணஞ் சான்ற வறிவர் கண்டோர்
பேணுதகு சிறப்பிற் [3]பார்ப்பான் முதலா
முன்னுறக் கிளந்த வறுவரொடு தொகைஇத்
தொன்னெறி மரபிற் கற்பிற் குரியர்.

என்-னின், கற்பின்கட் கூறத்தகுவாரை யுணர்த்துதல் நுதலிற்று.

பாணன் முதலாகச் சொல்லப்பட்ட அறுவரும் மேற்சொல்லப்பட்ட பார்ப்பார் முதலிய அறுவருங்கூடப் பன்னிருவருங் கற்பின்கட் கூறுதற்குரியர் என்றவாறு.

'தொன்னெறி மரபிற் கற்பு' என்றதனான் அவர்குலந்தோறுந் தொன்றுபட்டுவரு கின்ற நெறியையுடைத்தென்று கொள்க. (ரு அ உ)

௪௱௯௰௨. ஊரு மயலுஞ் சேரி யோரு
நோய்மருங் கறிநருந் தந்தையுந் தன்னையுங்

(பி-ம்)—1 களவினிற். 2 களவிற் களவிக்குரியராயாறு உணர்த்துதல் நுதலிற்று. 3 பார்ப்பார்.

பொருளதிகாரம் - செய்யுளியல்

௪௱௯௰௭

கொண்டெடுத்து மொழியப் படுத லல்லது
கூற்றவ ணின்மை யாப்புறத் தோன்றும்.

என்-னின், மேற்சொல்லப்பட்ட இருவகைக் கைகோளிற்கும் உரியதோர் உணர்த்துதல் நுதலிற்று.

மரபு

ஊரிலுள்ளாருஞ் சேரியிலுள்ளாரும் அயன்மனையுள்ளாரும் நோய்ப்பக்கங் குறிப்பினலறிவாருந் தந்தையுந் தமையனும் இருவகைக் கைகோளினும் பட்டதனையுட்கொண்டு பிறிதொன்றை யெடுத்துமொழியினல்லது பட்டாங்குக் கூறாத லின்மை வலியுறுத்தத் தோன்றும் என்றவாறு.

எனவே, வலியில்வழிச் சிறுபான்மை நிகழவும்பெறும்.

'எந்தையும், நிலனுறப் பொறாஅனீர் சீறடிசிவப்ப
வெவனில குறுமக ளியங்குதி யென்னும்.' [அகம். ௰௨]

இது தந்தை யுட்கொண்டு கூறியது. பிறவுமன்ன.

(௩௮௬.

சூ. ௩௮௭.

கிழவன் றன்னொடுங் கிழத்தி தன்னொடு

நற்றாய் கூறல்

முற்றத் தோன்றாது.

என்-னின், நற்றாய்க்குரிய மரபு உணர்த்துதல் நுதலிற்று.

தலைவனொடுந் தலைவியொடும்

நற்றாய்கூற்று முற்பத் தோன்றாது

என்றவாறு.

எனவே, ஏனையோர்க்கே கூறும் என்றவாறும். உதாரணம் வந்துழிக் காண்க. (௱அ௪)

௪௱௯௪.

ஒண்டொடி மாதர்க் கிழவன் கிழத்தியொடு
கண்டோர் மொழிதல் கண்ட தென்ப.

என்-னின், கண்டோர்க்குரியதோர் மரபு உணர்த்துதல் நுதலிற்று.

ஒண்டொடி மாதராவார் நற்றாயுந் தோழியுஞ் செவிலியும். இவரொடுந் தலைவனொடுந் தலைவியொடுங் கண்டோர்கூறுதல் காணப்பட்டது என்றவாறு.

எனவே ஏனையோர் கேட்பக்கூறிற்றில்லை என்றவாறும். (௱அ௫)

## ௪௱௯௫.

# இடைச்சுர மருங்கிற் கிழவன் கிழத்தியொடு வழக்கிய லாணையிற் கிளத்தற்கு முரியன்.

என்-னின், இது தலைவற் குரியதோர் மரபு உணர்த்துதல் நுதலிற்று.

தலைவியை யுடன்கொண்டுபோம் இடைச்சுரத்தின்கண் தலைவியைத் தலைவன் வழக்குநெறியாணையானே கூறுதற்குரியன் என்றவாறு.

உம்மை எதிர்மறை. ஆணையென்பது [1]ஆக்கினை; வடமொழித்திரிபு. மெல்லிய காமம் நிகழுமிடத்து ஆக்கினை கூறப்பெறாரேனும் அவ்விடத்து வேண்டுமென்பது எடுத்தோதப் பட்டது.

உதாரணம்:—

'நீயினி யாடுக சிறிதே யானே
[2]மழகளி றுரிஞ்சிய பராரை வேங்கை

(பி-ம்)—1 ஆச்சினை. 2 மதகளி.



மணலிடு மருங்கி [1]னிரும்புறம் பொருந்தி
யமர்வரி னஞ்சேன் பெயர்க்குவெ
னுமர்வரின் மறைகுவன் மாஅ யோளே.' [நற்றிணை-௩௬௨]

என்பதனுட் கண்டுகொள்க.

மெல்லியமகளிர்முன் வன்மை கூறலாகாமையின் இது வழுவமைத்தவாறு. (௪௯௫)

௪௱௯௬. ஒழிந்தோர் கிளவி கிழவன் கிழத்தியொடு
மொழிந்தாங் குரியர் முன்னத்தி னெடுத்தே.

என்-னின், இது தலைவனுந் தலைவியும் அல்லாதார்க்குரியதோர் மரபு உணர்த்து

தல் நுவலிற்று.

தலைவனையுந் தலைவியையும் ஒழிந்த பதின்மரும் அத்தலைவனொடுந் தலைவியொடுஞ் சொல்லிப்போந்த மரபினாற் சொல்லப்பெறுவர்: இடமுங் காலமுங் குறித்து என்றவாறு.

மொழிகரக்கு என்பதனை வழக்கியலானையெனினு மமையும். முன்னமாவது:—

'இவ்விடத் திம்மொழி யிவரிவர்க் குரித்தென்
றவ்விடத் தவரவர்க் குரைப்பது'. [தொல்-செய்யுளியல்-ஈகக]

எடுத்தென்பது அறம்பொருளின்பங்கட்குத் தகாதசொற்களை யெடுத்துக்கூறுதல். அஃதாவது தலைவனைப் பார்ப்பானும் பாங்கனுங் கழறலும், தோழி இயற்பழித்தலும், தலைவியைச் செவிலி யலைத்தலும், பாணர் கூத்தர் பாசறையிற்சென்று கூறுதலும், தோழி தலைமகனை வற்புறுத்தலும் முதலாயின. (ருஅஎ)

ருஅஅ. மனையோள் கிளவியுங் கிழவன் கிளவியும்
வினையுங் காலக்
கேட்குந ரவரே.

என்-னின், இதுவு மது.

தலைவியுந் தலைவனுங் கூறக் கேட்போர் மேற்சொல்லப்பட்ட பதின்மரும் என்றவாறு.

இதுமுதலாகக் கேட்போரைக் கூறுகின்றது.

(ருஅஅ)

௪௱௬௮. பார்ப்பா ரறிவ
ரென்றிவர் கிளவி
யார்க்கும் வரையார் யாப்பொடு
புணர்த்தே.

என்-னின்; பார்ப்பாரும் அறிவருங் கூறுங் கூற்றுக் கேட்போரை யுணர்த்துதல் நுதலிற்று.

பார்ப்பார் அறிவரென்று சொல்லப்பட்ட இருவர்கூற்றும் எல்லாருங் கேட்கப் பெறுவ ரென்றவாறு. (௪௬)

௪௱௬௯. பரத்தை வாயி
லெனவிரு வீற்றுங்
கிழத்தியைச் சுட்டாக் கிளப்புப்
பயனிலவே.

என்-னின், இதுவு மொருசார் கூற்றிற்குரியா ரியல்பு உணர்த்துதல் நுதலிற்று.
பரத்தையென்று சொல்லப்படும் வேறுபாட்டினும் வாயிலென்று சொல்லப்படும்
வேறுபாட்டினுக் தலைமகளைச் சுட்டாத கூற்றுப் பயனில்லை என்றவாறு. (௪௪௰)

(பி-ம்)—1 மருங்கி னிற்புறம். 2 னுமரிவனஞ்சுவன். 3 சொல்லுப் பொருள். 4 தலைமகளை. 5 ரறிவோ. 6 கூற்றுங்.

# பொருளதிகாரம் - செய்யுளியல்



ரு॥. வாயி லுசாவே
[1]தம்மு ளுரிய

என-னின், வாயில்கட்குரியதோர் மரபு உணர்த்துதல் நுதலிற்று.

வாயில்கள் [2]உசாவுமிடத்துக்
கிழத்தியைச் சுட்டாது தம்முள்
உசாவுதலுரித்து
என்றவாறு.

உதாரணம் வந்தவழிக் கண்டுகொள்க.

(௱கக)

ருாக. ஞாயிறு திங்க
ள,றிவே நாணே
கடலே கானல் விலங்கே மரனே,
புலம்புறு பொழுதே புள்ளே
நெஞ்சே
யவையல பிறவு நுதலிய [3]நெறியாற்
சொல்லுந போலவுங் கேட்குந
போலவுஞ்
சொல்லியாங் கமையு மென்மனார்
புலவர்.

என்-னின், இதுவும் [4]கேட்டற்
பொருண்மைக்கண் வருவதோர் மரபுவழு
[5]வமைத்

நலை யுணர்த்துதல் நுதலிற்று.

ஞாயிறு முதலாக எடுத்த ஈறாகச் சொல்லப்பட்ட பதினொன்றும் அத்தன்மைய பிறவுமாகிய மக்களல்லாத பொருள்கள் தாங்கருதிய நெறியினானே சொல்லுவனபோலவும் கேட்குனபோலவுஞ் சொல்லியமையப்பெறும் என்றவாறு.

ஆங்கு-அசை.

'7பழிதபு ஞாயிறே பாடறியா தார்கட்
கழியக் கதழ்வை யெனக்கேட்டு நின்னை
வழிபட் டிரக்குவென் வந்தேனென் னெஞ்ச
மழியத் துறந்தானைச் சீறுங்கா லென்னை
யொழிய விடாதீமோ வென்று.' [கலித்-௱சஙு]

'மாதர் முகம்போ லொளிவிட வல்லையேற்
காதலை வாழி மதி' [குறள்-௲ய௯அ]

'உறுதி தூக்கத் தூங்கிய வறிவே
சிறிதுநனி விரைய லென்னு மாயிடை.' [நற்றிணை-உ௰அ]

'8சேர்ந்தகல் காதலர் நேமி நெடுந்திண்டே
ரூர்ந்த வழிசிதைய வூர்கின்ற வோதமே
பூந்தண் பொழிலே புணர்ந்தாடு மன்னமே
யீர்ந்தண் டுறையே யிதுதகா தென்னீரே.' [சிலப்-கானல்]

இதனுட் கடலுங் கானலும் புள்ளு மரனுங் கூறப்பட்டது.

மாலைநீ,
தையெனக் கோவலர் தனிக்குழ லிசைகேட்டுப்
பையென்ற நெஞ்சத்தேம் பக்கம்பா ராட்டுவாய் [கலித்-௱௯அ]

'வருந்திமோ வாழிய நெஞ்சே' [அகம்-எ௯]

பிறவு மென்றகனுன்.

(பி-ம்)—1 தம்முளுமுரிய. 2 உசாவிடத்துக் கெழுதகைமையவிடாது தத்தம்முன் உசாவு நவுமுரித்து. 3 பொருளாற். 4 கழிபடர்ப். 5 வருதலை. 6 பொருண்மை யெய்திய செறி யினுர். 7 பழுதறு. 8 சேர்ந்த தங்காதலா னேமி.





'மன்றப் பனைமேல் மலைமாந் தளிரேநீ
தொன்றிவ் வுலகத்துக் கேட்டு மறிதியோ
மென்றோண் ஞெகிழ்த்தான் றகையல்லால் யான்காணேன்
நன்றுதீ தென்று பிற.' [கலித்-௱௪உ]

எனவு மிர்ச்சிகரமா கொள்க.

இத்துணையுங் கூறப்பட்டது கேட்போ ரியல்பு.

ருாஉ.

(௱கூஉ)

ஒருநெறிப் பட்டாங் கோரியன் [1]முடியுங்
கருமநிகழ்ச்சி யிடமென மொழிப.

என்னின், நிறுத்த முறையானே இடமாமாறு உணர்த்துதல் நுதலிற்று. ஒருவழிப்பட்டு ஓரியல்பாக முடியும் வினைநிகழ்ச்சி இடமென்று சொல்லுவர் என்ற

வாறு.

நிகழ்ச்சி நிகழ்ந்தவிடம்.

ஒருநெறிப்படுதலாவது—அகமாயினும் புறமாயினும் ஒருபொருண்மேல் வருதல்.

ஓரியல் முடிதலாவது—அகத்தின்கட் களவென்றாலும் கற்பென்றாலும் அவற்றின் விரிவகையில் ஒன்றானும்பற்றி வருதல். புறத்தின்கண் நிரைகோடலானும் மீட்டலானும்

மேற்செலவானும்

எயில்வளைத்தலானும் யாதானு மோ

ரியல்புபற்றி வருதல்.

கருமநிகழ்தலாவது—அப்பொருளைப்பற்றி யாதானு பொருவினை நிகழுமிடம். இன்னுங் கருமநிகழ்ச்சி என்றதனால் தன்மை முன்னிலை படர்க்கையென்பனவுங் கொள்

ளப்படும்.

'செல்லாமை

யுண்டே லெனக்குரை மற்றுநின்

வல்வரவு வாழ்வார்க் குரை.' [குறள்-தூா

ருக]

என்றவழிப் பிரிவு

பொருண்மைநிகழு மிடமாயிற்று.

முன்னின்றுனைக் கூறுத

லின் முன்னிலை யென்னும்

இடமாயிற்று.

யாதானுமோர் கருமநிகழ்வழி

மென்று [2]இப்பொருள் கூறப்பட்டது.

அதற்காகு மிடத்தொடுங்கூட

நிகழ்தல்வேண்டு

ஒருநெறிப்படாதும் ஓரியன் முடியாதும் வருமிடம் வழுவாம். அஃதாவது, தலைமகனொடு புணர்தல்வேண்டித் தோழியை யிரந்து குறையுறுவான் அவ்விடத்திற்குத் தக்கவுரைகூறாது தன்னாற்றலும் ³பிறவுங்கூறுதல்.

'வெல்லிய லெல்லாருண் மென்மை யதுவிறந்
தொன்னார்கட் கூற்றுட்கு மூட்குடைமை யெல்லாஞ்
சலவருட் சாலச் சலமே நலவரு
ணன்மை வரம்பாய் விடல்.' [நாலடி-௱௮௮]

இதனு மறிக. அன்றியும்,

'நெடும்புனலுள் வெல்லு முதலை யடும்புனலு
ணீங்கி னதனைப் பிற.' [குறள் ௪௯௫]

இதுவு மிடனறிதல்.

(பி-ம்.—1 மொழியுக். 2 இப்பொருண்மை. 3 ஆற்றலையும் பிறவுங்.)



'உண்ணற்க கள்ளை யுணிலுண்க சான்றோரா
லெண்ணப் படவேண்டா தார்.' [குறள்-௯௨௨]

இது தன்மையானேயு முன்னிலேனேயு மொழித்துப் படர்க்கையானைத் தொழிற்1படுத்துதல். உண்ணற்க வென்னும் படர்க்கைச்சொல் படர்க்கைப் 2பெயரொடு முடிந்தது. பிறவுமன்ன. (௪௯௩)

௫௯௪. இறப்பே நிகழ்வே யெதிர தென்னுந்
திறத்திபன் மருங்கிற் றெரிந்தன ருணரப்

பொருணிகழ் புரைப்பது காலமாகும்.

என்-னின், நிறுத்தமுறையானே காலமாமாறு உணர்த்துதல் நுதலிற்று.

இறந்தகாலம் நிகழ்காலம் எதிர்காலமெனக் கூறப்பட்டியலும் பக்கத்தின் 3ஆராய்ந்து நோக்குமாறு பொருணிகழ்ச்சியைக் கூறுமது காலமாகும் என்றவாறு.

'முதுக்குறைந் தனளே முதுக்குறைந் தனளே
மலேய னொள்வேற் கண்ணி
முலேயும் வாரா முதுக்குறைந் தனளே.'

இஃது 4இறந்தகாலத்தின்கட் புணர்ச்சிபுலமை தோன்ற வந்தது. இனி,

'அண்ணுந் தேர்ந்திய வணமுலே தளரினும்
பொன்னேர் மேனி மணியிற் றாழ்ந்த
நன்னெடுங் கூந்த னரையொடு முடிப்பினு
நீத்த லோம்புமதி பூக்கே ழூர' [நற்றிணை-௰]

என்றவழி நிகழ்காலம் இளமைப் பருவமென்பது தோன்றவந்தது. இதனுள், நீத்தலோம்புமதி யென்பது எதிர்காலம் 5குறித்துநின்றது. இவ்வகையினற் காலமுமிடமும் எல்லாச் செய்யுளின்கணனும் வருமென்று கொள்க. (௪௯௪)

௫௯௫. இதுநனி பயக்கு மிதன்மா றென்னுந்
தொகுநிலைக் கிளவி பயனெனப் படுமே.

என்-னின், நிறுத்தமுறையானே பயனமாறு உணர்த்துதல் நுதலிற்று.

யாதானும் ஒருபொருளைக் கூறியவழி 6இதன் பின்பு இதனற்பயக்கு மென விரித்துக்கூறுது முற்கூறிய சொல்லினுனே தொகுத்துக்கூறுதல் பயனெனப்படும் என்ற

வாறு.

'சூரல் பம்பிய சிறுகான் யாறே
சூரர மகளி ராரணங் கினரே
7வாரல் வரினே யானஞ் சுவலே
சார னாட நீவர லாறே.'

இதனாற் பயன் வரைந்துகோடல் வேண்டுட் என்பது.

'ஒன்றாக நல்லது கொல்லாமை மற்றதன்
பின்சாரப் பொய்யாமை நன்று.' [குறள்-ஙஉங]

இதனாற் பயன் நன்மைவேண்டுவோர் இவ்வாறு செய்தல் வேண்டுமென்றல்.

(பி-ம்)—1 படுத்துதலின். 2 பொருளொடு முடிந்தாகின்றது. 3 ஆராய்ந்துரைக்கும் புலனுமாறு. 4 காலத்தலக்கணப்புணர்ச்சி புணையதோன்ற 5 குறித்துவந்தது. 6 அதன்பின்பும் இதுபயக்குமென. 7 வாரலெனினே.



இவ்வகையினால் யாதானுமொரு செய்யுளாயினும் பயன்படக் கூறல்வேண்டுமென்பது கருதிப் பயனென ஒருபொருள் கூறினார். (ஈகரு)

ருாரு. உய்த்துணர் வின்றித் தலைவரு பொருண்மையின்
மெய்ப்பட முடிப்பது மெய்ப்பா டாகும்.

என்-னின், நிறுத்தமுறையானே மெய்ப்பாடு 1ஆமாறு உணர்த்துதல் நுதலிற்று.

யாதானுமொன்றைக் கூறியவழி யதன்கட் பொருண்மையை 2விசாரித்துணர்தலன்றி அவ்விடத்து வரும் பொருண்மையானே மெய்ப்பாடு தோன்ற முடிப்பது மெய்ப்பாடென்னும் உறுப்பாம் என்றவாறு.

'ஐயோ வெனின்யான் புலியஞ் சுவலே
3அணைத்தனன் கொளினே யகன்மார் பெடுக்க வல்லேன்
என்போற் பெருவிதுப் புறுக 4நின்னை
யின்னா துற்ற வறனில் 5கூற்றே
நிரைவளை முன்கை பற்றி
வரைநிழற் சேர நடத்திசிற் சிறிதே.' [புறம்-உருரு]

இதனுள் அழுகையாகிய மெய்ப்பாடு புலப்பட வந்தவாறு கண்டுகொள்க.

செய்யுட் செய்வார் மெய்ப்பாடு தோன்றச் செய்தல் வேண்டுமென்பது கருத்து. (ஈகஅ)

௫௱௬. எண்வகை யியனெறி பிழைப்பா தாகி

முன்னுறக் கிளந்த முடிவின

தருமே.

என்-னின், மெய்ப்பாடாவது உணர்த்துதல் நுதலிற்று.

அது நகை முதலாகிய எட்டுமெய்ப்பாட்டு நெறியையும் பிழையாதாகி மேற்சொல்லப்பட்ட இலக்கணத்தையுடைத்து என்றவாறு.

அஃதாமாறு மெய்ப்பாட்டியலுட் காண்க.

(௱௬௭)

௫௱௭. சொல்லொடுங் குறிப்பொடு முடிவுகொ ளியற்கை புல்லிய கிளவி யெச்ச மாகும்.

என்-னின்,

நிறுத்தமுறையானே எச்சவகையாமாறு உணர்த்துதல் நுதலிற்று.

பிறிதோர் சொல்லொடும் பிறிதோர் குறிப்பொடு முடிவுகொள்ளும் இயற்கையைப்

பொருந்திய செய்யுள் எச்சமாகும் என்றவாறு.

எனவே, சொல்லெச்சம் குறிப்பெச்சமென இருவகையாயின. அது எச்சவியலுட்

'பிரிநிலை வினை' யென்னுஞ் சூத்திரத்துள் [தொல்-சொல்-எச்ச. ௩௪] பிரிநிலையென்பது

முதலாகச் சொல்லப்பட்ட எண்வகையானும் வருவன சொல்லெச்சமாம். குறிப்பென்

றோதப்பட்டது குறிப்பெச்சமாம்.

௫௱௮. இவ்விடத்
தியமொழி யிவரிவர்க் குரியவென்
றவ்விடத் தவரவர்க் குரைப்பது
முன்னம்.

என்-னின்,

நிறுத்தமுறையானே

முன்னமாமாறு உணர்த்துதல்

நுதலிற்று.

இவ்விடத்து இம்மொழியை இவர்க்குச் சொல்லத்தகுமெனக் குறித்து அவ்விடத்து அவர்க்கு அம்மொழியை யுரைப்பது முன்னமாம் என்றவாறு.

---

(பி-ம்)—1 வருமாறு. 2 விசாரித்துணரக் கூறுதலின்றி. 3 யுய்த்தனன் கொல்லெ மார்பெடுக்கல்லே. 4 வென்னை. 5 குரே. 6 முதலாக எட்டுக்குறியையும்.

எனவே, இடமுங் காலமுமுணர்ந்து கேட்போர்க்குத் தக்கவாறு மொழிதலுஞ் செய்யுளுறுப்பாம் என்றவாறு.

வந்ததுகொண்டு வாராதது முடித்த லென்பதனாற் காலமுங் கொள்க. (௱௬௬)

௫௱௬௰. இன்பமு மிடும்பையும் புணர்வும் பிரிவு
மொழுக்கமு மென்றிவை யிழுக்குநெறி யின்றி
யிதுவா கித்திணைக் [1]குரிப்பொரு ளென்னாது
பொதுவாய் நிற்றல் பொருள்வகை யென்ப.

என்-னின், நிறுத்தமுறையானே பொருள்வகை யாமாறு உணர்த்துதல் நுதலிற்று.

இன்பமுந்

துன்பமும் புணர்வும் பிரிவும்

ஒழுக்கமு மென்று சொல்லப்பட்டவை

வழுவுநெறி யின்றி இத்திணைக்குரிய பொருள் இப்பொருளென்னாது எல்லாப்பொருட்கும் பொதுவாகிநிற்கும் பொருளே பொருள்வகையாம் என்றவாறு. (௱௬௭)

௫௱௬௧. அவ்வவ

[2]மாக்களும் விலங்கு மன்றிப்

பிறவவண் வரினுந் [3]திறவதி னாடித்

தத்த மியலான் மரபொடு முடியி

னத்திறந் தாமே துறையெனப்

படுமே.

என்-னின், நிறுத்தமுறையானே துறையாமாறு உணர்த்துதல் நுதலிற்று.

அகப்பொருளாகிய எழு பெருந்திணைக்கும் புறப்பொருளாகிய எழு பெருந்திணைக்கு முரிய மாக்தரும் பரந்துபட்ட மாவும் புள்ளும், உம்மையால் மரமுதலாயினவும், பிறவவண் வரினு மென்றதனால் நிலம் நீர் தீ வளி முதலாயினவும் செய்யுட்கண் வருமிடத்துத் திறப்பாடுடைத்தாக ஆராய்ந்து தத்தமக்கேற்ற பண்போடும் பொருந்திய மரபோடும் முடியின், அவ்வாறு திறப்பாடுடைத்தாய் வருவது துறையென்று கூறப்படும் என்றவாறு. (௨௱௧)

௫௱௰௧. அகன்றுபொருள் கிடப்பினு மணுகிய நிலையினு
மியன்றுபொருள் முடியத் தந்தன ருணர்த்தல்
மாட்டென மொழிப பாட்டியல் வழக்கின்.

என்-னின், நிறுத்தமுறையானே மாட்டேறு உணர்த்துதல் நுதலிற்று. (௨௱௨)

௫௱௰௨. மாட்டு மெச்சமு நாட்ட லின்றி
யுடனிலை மொழியினுந் தொடர்நிலை பெறுமே.

இவையிரண்டுஞ் சூத்திரத்தாற் பொருள் விளங்கும்.

(௨௱௩)

௫௱௰௩. வண்ணந் தாமே நாலைந் தென்ப.

என்-னின், இனி நிறுத்தமுறையானே வண்ணமாமாறு உணர்த்துதல் நுதலிற்று.

நெடுஞ்சீர் வண்ணங் குறுஞ்சீர் வண்ணஞ்
சித்திர வண்ண நலிபு வண்ண
மகப்பாட்டு வண்ணம் புறப்பாட்டு வண்ணம்

ஒழுகு வண்ண மொரூஉ வண்ண
மெண்ணு வண்ண மகைப்பு வண்ணந்
தூங்கல் வண்ண மேந்தல் வண்ண
முருட்டு வண்ண முடுகு வண்ணமென்
றாங்கென மொழிப வறிந்திசி னோரே.

என்-னின், [1]வண்ணத்திற்குப் பெயர் கூறுதல் நுதலிற்று.

இதவுஞ் சூத்திரத்தாற் பொருள் விளங்கும்.

(உஙு) நாயரு. அவற்றுட்

பாஅ வண்ணஞ்

சொற்சீர்த் தாகி நூற்பாற்

பயிலும்.

என்-னின், பாவண்ணமாமாறு

உணர்த்துதல் நுதலிற்று.

பாஅவண்ணமாவது [3]சொற்சீரடியாகி

நூலின்கட் பயின் றுவரும் என்றவாறு.

'அ இ உ அம்மூன் றுஞ்
சுட்டு.' [தொல். எழுத்.
நூன்மரபு-௩௧]

'கொல்லே லையயம் எல்லே
யியக்கம்.' [தொல். சொல். இடை-உ௰)
எனவரும்.:
(உ௱௩)

௫௱௰௪. தாஅ வண்ணம்
இடையிட்டு
வந்த வெதுகைத் தாகும்.
என்-னின்,
தாவண்ணமாமாறு உணர்த்துதல்
நுதலிற்று.
தாஅவண்ணமாவது

இடையிட்டெதுகையான் வரும்

என்றவாறு.

உதாரணம்

(௨௱௭)

'தோடா ரெல்வளை நெகிழ நாளு
நெய்த லுண்கண் பைதல கலுழ
வாடா வவ்வரி புதைஇப் பசலையும்
வைகறோறும்
பைபையப் பெருகின
நீடா ரிவணென நீமனங் கொண்டோர்
கேளார் கொல்லோ காதலர் தோழீ
வாடாப் பௌவம் வார்முகந் தெழிலி
பருவஞ் செய்யாது வலனேர்பு வளைஇ
யோடா மலையன் வேலிற்
கடிது மின்னுமிக் கார்மழைக் குரலே.' [யாப். வி. ப. ௩௮௧]

என்னும் பாட்டு.

௫௱௰௭. வல்லிசை

வண்ணம் வல்லெழுத்து மிகுமே.

என்-னின், வல்லிசைவண்ண

மாமாறு உணர்த்துதல் நுதலிற்று.

வல்லெழுத்து மிகுவருவது வல்லிசை வண்ணமாம் என்றவாறு.

(பி-ம்)—1 வண்ணவாறுப்பாயாறு உணர்த்துதல். 2 சொற்சீர்த்தாய.

# பொருளதிகாரம் - செய்யுளியல்

சா௫௫

'பட்டோட்டி யன்ன தொடர்புமுடப் புன்னைக்கீழ்க்
கட்டொட்டிக் கன்னி தொடுப்பவர் தாழைப்பூத்
தொட்டிட்டுக் கொள்ளுந் துறைச்சேர்ப்ப னின்னொடு
விட்டோட்டி யுள்ளம் விடாது நிலையுமேன்
விட்டொட்டி 1நீக்காதோ வொட்டு.' [யாப். வி. ப. ௩௮௨.] (உாஅ)

௫௱௰அ. மெல்லிசை வண்ண மெல்லெழுத்து மிகுமே.

என்-னின், மெல்லிசைவண்ண மாமாறு உணர்த்துதல் நுதலிற்று.
மெல்லெழுத்து மிக்கது மெல்லிசை வண்ணமாம் என்றவாறு.

'பொன்னி னன்ன புன்னை நுண்டாது
மணியி னன்ன நெய்தலங் கான

மணவென வுதிரு யாநீர்ச் சேர்ப்பன்.

[மாண்வினை நெடுந்தேர் பூண்மணி யொழிய
யம்மர் மாலை வரனீ
நன்மா மேனி நயந்தனை யெனினே.']

[யாப். வி. ப. ௩௮௨]

எனவரும்.

(உ௱௬)

௫௱௰௬. இயைபு வண்ண

மிடையெழுத்து மிகுமே.

என்-னின், இயைபுவண்ண மாமா

று உணர்த்துதல் நுதலிற்று.

இடையெழுத்துமிக்கு

வருவதாஇயைபு வண்ணமாம் எ

ன்றவாறு. '[2]கால்வெள் ளருவி வரைமிசை

யிழியவுங்

கோள்வல் லுழுவை விடரிடை யியம்பவும்

[வாளுகி ருளியம் வரையக மிசைப்பவும்

வேலொளி

விளக்கினர் வரினே

யாரோ தோழி

வாழ்கிற் போரே.'] [யாப். வி. ப. ௩அ௯]

எனவரும்.

(உ௱ய)

௫௱உ௰. அளபெடை வண்ண

மளபெடை [3]பயிலும்.

என்-னின், அளபெடை வண்ண

மாயாறு உணர்த்துதல் நுதலிற்று.

அளபெடை பயின்று வருவது அளபெடை வண்ணமாம் என்றவாறு.

'தாஅட் டாஅ மரைமல ருழக்கி
பூஉக் குவளைப் போஒ தருந்திக்
காஅய்ச் செந்நெற் கறித்துப் போஒய்
மாஅத் தாஅண் மோஒட் டெருமை.' [யாப். வி. ப.
(உளயச)

எனவரும்.

ருாஉக. நெடுஞ்சீர் வண்ண நெட்டெழுத்துப் பயிலும்.

என்-னின், நெடுஞ்சீர் வண்ண மாமாறு உணர்த்துதல் நுதலிற்று.

நெட்டெழுத்துப் [4]பயின்றுவருவது நெடுஞ்சீர் வண்ணமாம் என்றவாறு.

'நீரூர் பாணு யாறே காடே
[5]நீலூர் காயாப் பூவீ யாதே

(பி-ம்)—1 நீங்காதே யொட்டு. 2 வாள்வெள். 3 யியலும். 4 பயின்றவருஞ் சீரினையுடைய வண்ணம். 5 நீரூர்.

சாந்தி

தொல்காப்பியம் - இளம்பூரணம்

[காரூர் பாணு மாவே யானே
யாரோ தாமே வாழா மோரே]

எனவரும்.

பூஞர் பாகா தேரே
பீஞர் தோளாள் சிறு ீரானே.' [யாப். வி. ப. ௩அ௩]

)

(உரை)

௫௨௨. குறிஞ்சீர் வண்ணங் குற்றெழுத்துப் பயிலும்.

என்-னின், குறிஞ்சீர் வண்ண மாமாறு உணர்த்துதல் நுதலிற்று. குற்றெழுத்துப் பயின்றுவருவது குறிஞ்சீர்வண்ணமாம் என்றவாறு.

'உறுபெய வெழிலி 1தொகுபெயல் பொழியச்
சிறுகொடி யவரை நெறிதலை யவிழ
[குறிவரு பருவ மிதுவென மறுகு
செறிதொடி நறுநுத லழிய

லழியலை யரிவையர் கருதிய
பொருளே.'] [யாப். வி. ப. ௩அ௪]

எனவரும்.

௫௱௨௩. சித்திர வண்ண
நெடியவுங் குறியவு நேர்ந்துடன்
வருமே.

என்-னின், சித்திரவண்ண
மாமாறு உணர்த்துதல் நுதலிற்று.

சித்திரவண்ணமாவது
நெட்டெழுத்துங் குற்றெழுத்தும்
சார்ந்துவரும் என்ற
வாறு.

'ஓரூர் வாழினுஞ் சேரி வாரார்
சேரி வரினு மார முயங்கார்.'
[குறுந்-௨௩௧]
எனவரும்.

(உரையிசை)

நாஉச. நலிபு வண்ணை

மாய்தம் பயிலும்.

என்னின், நலிபுவண்ணை

மாமாறு உணர்த்துதல் நுதலிற்று.

ஆய்தம் பயின்றுவருவது

நலிபுவண்ணமாம் என்றவாறு.

'அஃகாமை

செல்வத்துக் கியாதெனின்

வெஃகாமை

வேண்டும் பிறன்கைப் பொருள்.'

[குறள்-ராஎஅ]

எனவரும்.

(உாயஉ)

ருாஉரு.

## அகப்:ாட்டு வண்ண

# முடியாத் தன்மையின் முடிந்ததன் மேற்றே.

என்-னின், அகப்பாட்டு வண்ணமாமாறு உணர்த்துதல் நுதலிற்று.

அகப்பாட்டு வண்ணமாவது முடியாத்தன்மையான் முடிந்ததன் மேலதென்றவாறு.

'பன்மீ னுணங்கற் படுபுள் ளோப்பியும்
புன்னை நுண்டாது கம்மொடு தொகுத்தும்

(பி-ம்)—1 தொகுதிபெயல். 2 நெடிலுங் குறிலும். 3 மார்வு.

# பொருளதிகாரம் - செய்யுளியல்

சாருள

பன்னுன் வந்து பனிமொழி பயிற்றியும்
தோளி னீங்காமை சூளிற் றேற்றி
மணந்ததற் சேர்வான் றணந்து புறமாறி
யினைய னாகி யீங்குத் துறந்தோன்
பொய்த லாயத்துப் பொலந்தொடி மகளிர்
கோடியர் வெண்மண லேறி
யோடுகல மென்னுந் துறைவன் றேழி.' [யாப். வி. ப. ௩அ௫]

என வரும்.

(உாஙஅ)

## ருாஉசு. புறப்பாட்டு வண்ண முடிந்தது போன்று முடியா தாகும்.

என்-னின், புறப்பாட்டு வண்ண மாமாறு உணர்த்துதல் நுதலிற்று.

புறப்பாட்டு வண்ணமாவது முடிந்தது போன்று முடியாதாகிவரும் என்றவாறு.

உதாரணம்:—

'நிலவுமண லகன்றுறை வலவ னேவலி
1னெரிமணிப் புள்ளின மொய்ப்ப
நெருநலும்
வந்தன்று கொண்கன் றேரே யின்றும்
வருகுவ 2தாயி னன்றுபு சென்று
தகைந்த புன்னைத்
தாதுகு தண்பொழின்

மெல்ல [மேவர] மென்முலை முழுங்கப்
புல்லி னெவனோ மெல்லியை நீயே
நல்காது விடுவை யாயின் வைகலும்
படர்மலி யுள்ளமொடு மடன்மா வேறி
யுறுதுய ருலகுட னறியச்
சிறுகுடிப் பாக்கத்துப் பெரும்பழி தருமே.'
[யாப். வி. ப. ௩அ௫]

எனவரும்.

(உாவெ)

## ௫௨௭. ஒழுகு வண்ண மோசையி னொழுகும்.

என்-னின், ஒழுகுவண்ண மாமாறு உணர்த்துதல் நுதலிற்று.
ஓசையான் ஒழுகிக்கிடப்பது ஒழுகுவண்ணமாம் என்றவாறு.

**உதாரணம்:—**

'அம்ம வாழி தோழி காதல
ரின்முன் பனிக்கு மின்னா வாடையொடு
புன்கண் மாலையு மின்று நலிய
வுய்யல னிவளென் றுணரச் சொல்லிச்
செல்லுநர்ப் பெறினே செய வல்ல
3வின்னளி யிறந்த மன்னவர்
பொன்னணி நெடுந்தேர் பூண்ட மாவே.' [யாப் வி. ப. ௩௮௯]

எனவரும்.

(பி-ம்)—1 னெரி[யி]ணர்ப். 2 தாயிற் சென்று வம்புத். 3 வின்னினி.

ருாஉஅ. ஒரூஉ வண்ண
1மொரூஉத்தொடை தொடுக்கும்.

என்-னின், ஒரூஉ வண்ணம் உணர்த்துதல் நுதலிற்று. (உளஅ)
ஒரூஉ வண்ணமாவது நீங்கின தொடையாகித் தொடுப்பது என்றவாறு.

அது செந்தொடையாம்.

உதாரணம்:—

'தொடிநெகிழ்ந் தனவே கண்பசந் தனவே
யான்சென் றுரைப்பின் மாண்பின் றெவனோ
சொல்லாய் வாழி தோழி உரைய
முள்ளாற் பொதுளிய விலங்குநிலை நெடுவெதிர்
பொங்குவர லினமழை துவைப்ப
மணிநிலா விரியுங்
குன்றுகிழ வோற்கே.' [யாப். வி. ப.

னைவரும்.

(உாமிக) ருாஉகூ. என்று வண்ண
மென்றுப் பயிலும்.

என்-னின், என்று வண்ணம்
உணர்த்துதல் நுதலிற்று.

என்றுப் பயின்றுவருவது
என்றுவண்ணமாம் என்றவாறு.

உதாரணம்:—

"நிலம் நீர் வளிவிசும் பென்ற
நான்கி
னளப்பரியையே
நாள்கோள் திங்கள் ஞாயிறு

கனையழ

லங்தொருக்கு புணர்ந்த

விளக்கத் தனையை.' [பதிற்றுப்-மஉ]

எனவரும்.

(உஎஉ)

ருாகூய. அகைப்பு வண்ண

மறுத்தறுத் தொழுகும்.

என்-னின், அகைப்பு

வண்ணம் உணர்த்துதல் நுதலிற்று.

[3]அறுத்தறுத்தியலுவது

அகைப்பு வண்ணமாம் என்றவாறு.

உதாரணம்:—

'தொடுத்த வேம்பின்மிசைத் துதைந்த போர்தையிடை

யலைசத்த வாரமலைப் பட்டூ

ரண்ணவெண்பா

னியன்ற சேனைமுர சிரங்குந்

தானையெதிர்

மூயன்ற வேந்தருயிர் முருக்கும்

வேலினவன்.'

[யாப். வி. ப. ௩௮௭]

என வரும்.

(௨௭௨௪)

௫௭௩. தூங்கல் வண்ணம்

வஞ்சி யுரிஞம்.

என்-னின், தூங்கல் வண்ணம் உணர்த்துதல் நுதலிற்று.

தூங்கல் வண்ணமாவது வஞ்சியுரிச்சீர் பயின்றுவரும் என்றவாறு.

உதாரணம்:—

'வசையில்புகழ் வயங்குவெண்மீன்
திசைதிரிந்து தெற்கேகினும்.' [பட்டினப்-க]

எனவரும்.

---

(பி-ம்.)—1 மொழீஇத் தொடுக்கும். 2 தொடையாகிக்கிடப்பது. 3 அகைப்பு வண்ணமாவது அறுத்தறுத்தியலும் என்றவாறு.

௫௱௬௨. ஏந்தல் வண்ணஞ்
[1]சொல்லிய சொல்லிற்
சொல்லியது சிறக்கும்.
என்-னின், ஏந்தல் வண்ணம்
உணர்த்துதல் நுதலிற்று.
ஏந்தல் வண்ணமாவது
[2]சொல்லிய சொல்லினானே
சொல்லப்பட்டது சிறக்கவரும் ன்றவாறு.
உதாரணம்:—

'கூடுவார் கூடல்கள் கூட லெனப்படா
கூடலுட் கூடலே கூடலுங்-கூட
லரும்பிய முல்லை யரும்பவிழ் மாலைப்
பிரிவிற் பிரிவே

3பிரிவு.' [யாப். வி. ப. ௩அஅ]

என வரும்.

(உாஉ௩)

௫ா௩௩. உருட்டு வண்ண

மராகத் தொடுக்கும்.

என்-னின், உருட்டு

வண்ணமாமா று உணர்த்துதல்

நுதலிற்று.

உருட்டு வண்ணமாவது அராகந்

தொடுக்கும் என்றவாறு.

உதாரணம்:—

'தாதுறு முறிசெறி தடமல ரிடையிடை
தழலென விரிவன பொழில்.' [யாப். வி. ப. உ௬௬]

என வரும்.

(௨௱௨௪)

௫௱௩௪.

4முடுகு வண்ண முடிவறி யாம
லடியிறந் தொழுகி யதனோ ரற்றே.

என்-னின், முடுகு வண்ணமாமாறு உணர்த்துதல் நுதலிற்று.

முடுகு வண்ணமாவது நாற்சீரடியின் 5மிக்கோடி அராகத்தோடு ஒக்கும் என்றவாறு.

உதாரணம்:—

'நெறியறி செறிகுறி புரிதிரி பறியா வறிவனை முந்துறீஇ.'

[கலித்-௩௯] (௨௱௨௫)

௫௱௩௫. வண்ணந் தாமே
6இவையென மொழிப.

என்-னின், மேற்கூறப்பட்ட வண்ணமெல்லாந் தொகுத்து உணர்த்துதல் நுதலிற்று.

(பி-ம்)—1 சொல்லியது. 2 சொல்லியது சொல்லினிற் சொல்லப்பட்டது சிறக்கும். 3 பிரிவும். 4 முடுகுவண்ண, மடியிறந்தொடி யதனோரற்றே. 5 மிக்கோடி யராகத்தோடொக்கும். 6 யிவையென.

நிறுத்தமுறையானே 3அம்மையாகிய செய்யுள் உணர்த்துதல் நுதலிற்று.

சிலவாய் மெல்லியவாகிய மொழியினானே தொடுக்கப்பட்ட அடிநிமிர்வில்லாத செய்யுள் அம்மையாம் என்றவாறு.

உதாரணம்:—

'அறிவினா னாகுவ துண்டோ பிறிதினோய்
தன்னோய்போற் போற்றாக் கடை.'
[குறள்-௩௱௰௫]

எனவரும்.

௫௱௩௭. செய்யுண்
மொழியாற் சீர்புனைந் தியாப்பி
னவ்வகை தானே யழகெனப் படுமே.

என்-னின்,
நிறுத்தமுறையானே அழகென்னும்
செய்யுள் உணர்த்துதல் நுதலிற்று.

செய்யுட்குரிய சொல்லினாற்
சீரைப்புணர்த்துத் தொடுப்பின்
அவ்வகைப்பட்ட செய்யுள் அழகு
எனப்படும் என்றவாறு.

உதாரணம்:—

'துணியிரும் பரப்பகங் குறைய வாங்கி
மணிகிள ரடுக்கன் முற்றிய வெழிலி
காலொடு மயங்கிய கனையிரு ணடுநாள்
யாங்குவந் தனையோ வோங்கல் வெற்ப

நெடுவரை மருங்கிற் பாம்பென
விழிதரும்
கடுவரற் கலுழி நீந்தி
வல்லியம் வழங்குங் கல்லதர் நெறியே.'

[யாப். வி. ப. ௩௭௭]

எனவரும். (௨௱௨௮)

(பி-ம்)—1 என்பனவற்றோடெழ. 2 வனப்பியறானே வகுக்குங்காலைச்-சின்மென் மொழியாற் சீர்புனைந்தியாப்பி-னம்மைதானே யடிநிமிர்வின்றே. 3 வனப்புப் பாகுபடுக்கு மாறு அம்மையாகிய. 4 சீர்புனைந்து.

தொன்மை தானே சொல்லுங் காலை
யுரையொடு புணர்ந்த பழமை மேற்றே.

என்-னின், நிறுத்தமுறையானே தொன்மைச் செய்யுள் உணர்த்துதல் நுதலிற்று.

தொன்மையாவது உரையொடு பொருந்திப் போந்த பழமைத்தாகிய பொருண்மேல் வருவன. அவை இராமசரிதமும், பாண்டவசரிதமும் முதலாகியவற்றின்மேல் வருஞ் செய்யுள். (உ௩௨௯)

நூ௨௩௰. இழுமென் மொழியால் [1]விழுமியது நுவலினும்
பரந்த மொழியா லடிநிமிர்ந் தொழுகினுந்
தோலென மொழிப [2]தொன்மொழிப் புலவர்.

என்-னின், நிறுத்தமுறையானே தோலாகிய செய்யுள் உணர்த்துதல் நுதலிற்று.

[3]இழுமென் மொழியால் விழுமிய [4]பொருளைக் கூறினும் பரந்தமொழியினால் அடி நிமிர்ந்து ஒழுகினும் தோல் என்னும் செய்யுளாம் என்றவாறு.

உதாரணம்:—

'பாயிரும் பரப்பகம்
புதையப் பாம்பி
ஞாயிர மணிவிளக்
கழலுஞ் சேக்கைத்
துனிதரு வெள்ளந்

துயில்புடை பெயர்க்கு
மொளியோன் காஞ்சி
யெளிதெனக் கூறி
னிம்மை யில்லை மறுமை
யில்லை
நன்மை யில்லைத் தீமை
யில்லைச்
செய்வோ ரில்லைச்
செய்பொரு ளில்லை
யறிவோர் யாரஃ திறுவழி
யிறுகென.' [மார்க்கண்டேயனார் காஞ்சி]

என்றது இழுமென் மொழியால்
விழுமியது நுவல வந்தது.

'திருமழை தலைஇய
விருணிற விசும்பு' [மலைபடுகடாம்-க]
என்னுங் கூத்தராற்றுப்படை பாந்த

மொழியான் அடிநிமிர்ந்து வந்தது.
(உாஙல)

# ௫ாசம.

⁵விருந்தே தானும்
புதுவது புனைந்த யாப்பின் மேற்றே.

என்-னின், நிறுத்தமுறையானே

விருந்தென்னுஞ் செய்யுள்

உணர்த்துதல் நுத

லிற்று.

விருந்தாவது முன்புள்ளார் சொன்ன நெறிபோய்ப் ⁶புதிதாகச் சொன்ன யாப்பின் மேலது என்றவாறு.

புதிதாகப் புனைதலாவது ஒருவன்சொன்ன ⁷நிழல்வழியன்றித் தானே தோற்றுவித்தல். அது வந்தவழிக் காண்க. (உாஙக)

இது பெரும்பான்மையும் ஆசிரியப் பாவைக் குறித்தது.

நூசக. ஞகார முதலா னகார விற்றுப்
புள்ளி யிறுதி [8]யியைபெனப் படுமே.

(பி-ம்)—1 விழுமிது. 2 தொன்மொழிப். 3 முழுக்கின. 4 பொருளாகச். 5 விருத்த
ச. 6 புதிதாகப்புனைந்த. 7 மொழியினிழல்வழி. 8 யியைபென மொழிப.

சாஎஉ

# தொல்காப்பியம் - இளம்பூரணம்

என்-னின், நிறுத்தமுறையானே இயைபாமாறு உணர்த்துதல் நுதலிற்று.

ஞண நமன யரலவழள என்னும் பதினொரு புள்ளியும் ஈறுகவருஞ் செய்யுள் இயைபென்னுஞ் செய்யுளாம் என்றவாறு.

உதாரணம் வந்தவழிக் காண்க. (உாகூஉ)

நூசஉ. தெரிந்த மொழியாற் செவ்விதிற் கிளந்து
தேர்தல் வேண்டாது குறித்தது தோன்றிற்
புலனென மொழிப புலனுணர்ந் தோரே.

என்-னின், நிறுத்தமுறையானே புலன் என்னுஞ் செய்யுள் உணர்த்துதல் நுதலிற்று.

வழக்குச் சொல்லினானே தொடுக்கப்பட்டு ஆராய வேண்டாமற் [1]பொருள்தோன்றுவது புலனென்னுஞ் செய்யுளாம் என்றவாறு.

உதாரணம்:—

"பாற்கடன் முகந்த பருவக் கொண்மூ
வார்செறி முரசின் முழங்கி யொன்னார்

மலைமுற் றின்றே
வயங்குதுளி சிதறிச்
சென்றவ டிருமுகங் காணக் கடுந்தே
ரின்றுபுகக் கடவுமதி பாக வுதுக்காண்
மாவொடு புணர்ந்த மாஅல் போல
விரும்பிடி யுடைய தாகப்

பெருங்காடு மடுத்த காமர் களிறே.'
[யாப். வி. ப. ௩௭௧]

எனவரும்.

(௨௱௩௩) ௫௱௪௩. ஒற்றொடு
புணர்ந்த வல்லெழுத் தடங்காது
குறளடி முதலா
வைந்தடி யொப்பித்

தோங்கிய மொழியா னாங்கவன் மொழியி
னிழைபி னிலக்கண மியைந்த தாகும்.

என்-னின், நிறுத்தமுறையானே இழைபாமாறு உணர்த்துதல் நுதலிற்று.

ஒற்றொடு புணர்ந்த வல்லெழுத்தடங்காது ஆசிரியப்பாவிற் கோதப்பட்ட நாலெழுத்தாதியாக இருபதெழுத்தின்காறும் [2]உயர்ந்த பதின்மூநிலத்தும் ஐந்தடியும் முறையானே வரத்தொடுப்பது இழைபு என்னும் செய்யுளாம் என்றவாறு.

உதாரணம்:—

'பேர்ந்து பேர்ந்து சார்ந்து சார்ந்து
தேர்ந்து தேர்ந்து மூசி சேர்ந்து
வண்டு சூழ விண்டு நீங்கி
நீர்வாய்க் கொண்ட நீல மூர்வா
யூதை வீச வூர வாய
மதியேர் நுதலோ டொல்கி மாலை
நன்மணங் கமழும் பன்னல் லூர

(பி-ம்)—1 பொருள்விளக்குவது. 2 பரந்த.



வமையேர் விளைத்தோ ளம்பரி நெடுங்க

ணிணையி ரோதி யேந்திள வனமுலை
யிரும்பன் மலரிடை யெழுந்த மாவி

ண றுந்தழை துயல்வருஞ் செறிந்தேந் தல்கு
லணிநகை நகைஇய வரியமர் சிலம்பின்
மணிமருள் வார்குழல்
வளரிளம் பிறைநுத
லொளிநிலவு
வயந்திழை யுருவுடை மகளிரொடு
களிமுழவு முழங்கிய
வணிநிலவு மணிநக
ரிருந்தளவு மலரளவு சுரும்புலவு
நறுந்தொடையலள்
கலனளவு கலனளவு நலனளவு
நலனளவு
பெருமணம்

புணர்ந்தனை யென்பவஃ

தொருமீ மறைப்ப

வொழிகுவ தன்றே.' [யாப். வி. ப.

௩அ௰]

எனவரும்.

(உ௱௩௪)

௫௱௪௪. செய்யுண் மருங்கின் மெய்பெற நாடி

யிழைத்த விலக்கணம் பிழைத்தது போல

வருவன வுளவெனும் வந்தவற் றியலாற்
றிரிபின்றி முடித்த றெள்ளியோர் கடனே.

என்-னின், யாப்பிற் கோர் புறனடை யுணர்த்துதல் நுதலிற்று. இது சூத்திரத்தாற் பொருள் விளங்கும்.

(உஎங்டு)

எட்டாவது செய்யுளியல் முற்றும்.



# ஒன்பதாவது மரபியல்.



ருாசரு. மாற்றருஞ் சிறப்பின் மரபியல் கிளப்பிற்
பார்ப்பும் பறழுங் குட்டியுங் குருளையுங்
கன்றும் பிள்ளையு மகவு மறியு மென்
றொன்பது நுங் குழவியொ டிளமைப் பெயரே.

இவ்வோத்து இவ்வதிகாரத்துக் கூறப்பட்ட பொருட்கு மரபு உணர்த்தினமை யன், மரபியல் என்னும் பெயர்த்து.

இவ்வோத்தினுள் இத் தலைச்சூத்திரம் என்னுதலிற்றோவெனின், இளமைப் பெயராமாறு உணர்த்துதல் நுதலிற்று.

குழவியொடு இவ்வொ[ர]ன்பதும் இளமைப் பெயராம் என்றவாறு.
இதன் பொருள் மேல் விரிக்கின்றார்.

(●)

 3எருது

மேற்றையு மொருத்தலுங்
களிறுஞ்

சேவுஞ் சேவலு மிரலையுங் கலையு
மோத்தையுந் தகரு முதளு
மப்பரும்

போத்துங் கண்டியுங் கடுவனும்
பிறவும்

யாத்த வாண்பாற்
பெயரென மொழிப.

4என்-னின், ஆண்பாற்பெயர் உணர்த்துதல் நுதலிற்று.
ஆண்பாற் பெயர் இவ்வெண்ணப்பட்ட பதினொன்றும் பிறவுமாம் என்றவாறு.
பிறவும் என்றதனான் ஆண் என்றும் விடை என்றும் வருவனபோல்வனகொள்க.
(உ)

௱௪௭. பேடையும் பெடையும் பெட்டையும் பெண்ணு
மூடு காகுங் கடமையு மளகு

(பி-ம்)—1 மறியுமொன்பதுங். 2 என்பது சூத்திரம். இவ்வோத்து என்னபெயர்த் தோவெனின், மரபியலென்னும் பெயர்த்து. உலகத்து வழங்கும்பொருளை யிவ்வாறு சொல......ற்பெற்றபெயர். மேற் செய்யுளிலக்கணமுணர்த்தி வழக்கிலக்கணம் உணர்த்து கின்றாராகலின் பிற்கூறப்பட்டது. இ[த்]தலைச் சூத்திரம் என்னுதலிற்]றோ வெனின், திருதிணைப் பொருளும்பற்றிவரும் இளமைப்பெயர் உணர்த்துதல் நுதலிற்று. மாற்றருஞ் சிறப்பின் மரபியல் கிளப்பி...டைய மரபியலைக் கூறுங்காலத் தென்றவாறு. விலக்குத வரு வயாவது பார்ப்பென்பதனை வழங்கியன் மரபி...றங்காற் கூறலாகாமை. பார்ப்பு முத லாகக் குழவியீறாகச் சொல்லப்பட்ட வொன்பதும் இளமைப்பெய ரென்றவாறு...குழவி யோடோன்பதுமென மொழிமாற்றுக. அவை யாமாறு தத்தஞ் சூத்திரத்துக் காட்டுதும். 3 று. 4 எறுமுதலாகச் சொல்லப் பட்டனவும் அத்தன்மைய பிறவும் ஆண்பாற் பெய ரென்றவாறு. பிறவுமென்றதனாற் கொள்ளப்படு...ல் மக்கட்குரிய ஆண்பெயர் கூறுத லென்றவாறு. பிறவுமென்றதனாற் கொள்ளப்படு...ல் மக்கட்குரிய ஆண்பெயர் கூறுத தென்னையெனின், அவை பாலறியவ[ந்த] வுயர்திணைப் பெயரெனச் சொல்லதிகாரத்துள் [பெயரியல்-அ] எடுத் ..தத்தஞ் சிறப்புச் சூத்திரத்துட் காட்டுதும்.



௱௪௮

# தொல்காப்பியம் - இளம்பூரணம்

மந்தியும் பாட்டியும் பிணையும் பிணவு
மந்தஞ் சான்ற பிடியொடு பெண்ணே.

1என்-னின், பெண்பாற்பெயர் உணர்த்துதல் நுதலிற்று.
இக்கூறப்பட்ட பதின்மூன்றும் பெண்பாற்பெயராம் என்றவாறு.

௫௱௭௮. அவற்றுள்,
பார்ப்பும் பிள்ளையும் பறப்பவற் றிளமை.

(பு)

என்-னின், மேல் அதிகரிக்கப்பட்ட மூவகைப் பெயர்க்குஞ் சிறப்புவிதியுடையன இச்சூத்திரமுதலாக வருகின்ற சூத்திரங்களாற் கூறப்படுகின்றன.

மேற் சொல்லப்பட்டவற்றுட் பார்ப்பு பிள்ளை2யென்னும் இரண்டும் பறவையி னிள

மைப் பெயர் என்றவாறு.

3இவ்வோத்திற்

சூத்திரத்தாற் பொருள் விளங்குவன

வற்றிற்கு உரை யெழுது

கின்றிலம்.

நூா சுசு.

தவழ்பவை தாமு மவற்றோ ரன்ன.

(சு.)

என்றது, ஊர்வனவற்றிற்கு மேற் சொல்லப்பட்ட இருவகை இளமைப்பெயரும் ஆம் என்றவாறு. (ரு)

நூடுo. மூங்கா வெருகெலி மூவரி யணிலொ
டாங்கவை நான்குங் குட்டிக் குரிய.

என்றது, இவை நான்கும் குட்டி என்று சொல்லப்படும் என்றவாறு.

(அ) மூங்கா என்பது கீரி.

நூநு.க. பறழெனப் படினு
முறழாண் டில்லை.

என்றது, மேற்சொல்லப்பட்ட நால்வகை யுயிர்க்கும்
ஞம் உறழ்ச்சியில்லை என்றவாறு.

எனவே, இரண்டுமாம்

என்றவாறும்.

௫௱௫௨.

நாயே பன்றி புலிமுய னான்கு
மாயுங் காலைக் குருளை யென்ப.

(௬)

|

இளமைப்பெயர் பறழ் எனி

|

என்றது, காய்முதலாகச்
யென்றிவழங்கும் என்றவாறு.

சொல்லப்பட்ட 5நான்கின்

இளமைப்பெயர் குருளை
(அ)

௫௱௫௩. நரியு மற்றே நாடினர் 7கொளினே.

என்றது, நரியின் இளமைப் பெயரும் 8ஆராயுங்காலத்துக் குருளை எனப்படும் என்றவாறு.

(பி-ம்)—1 பேடை முதலாகச் செ[ால்லப்பட்டன பெ]ண்பாற் பெயரென்றவாறு. அந்தஞ் சான்றவென்பது வழக்கின்கண் முடியவமைத்த தென்றவாறு. 2 யென்பன. 3 இதனுட். 4 உரிய. 5 னான்கும். 6 வழங்கப்படும். 7 கொளலே. 8 ஆராயுமிடத்துக்.

# பொருளதிகாரம் - மரபியல்

**சாகள**

இது மேலனவற்றொடு ஒருங்கெரனவாக 1ஓதாமையிற் சிறுபான்மை வருமென்று கொள்க. (க)

ருாரு ௨. குட்டியும் பறழுங் கூற்றவண் வரையார்.

என்-னின், எய்தாத தெய்துவித்தல் நுதலிற்று.

மேற் சொல்லப்பட்ட ஐவகையுயிர்க்குங் குட்டி பறழ் என்பனவும் ஆம் 2என்றவாறு.

(ய)

ருாருரு. பிள்ளைப் பெயரும் பிழைப்பாண் டில்லை
கொள்ளுங் காலை நாயலங் கடையே.

என்-னின், இதுவுமது.

3மேற்கூறியவற்றுள்
நாயன்றி ஒழிந்தவை பிள்ளை என்னும்
இளமைப்பெயர்க்கு
உரிய என்றவாறு.

பன்றிக்குருளை பன்றிக்குட்டி
பன்றிப் பறழ் பன்றிப்பிள்ளை எனவுமாம்.

ஏனையவும் இவ்வாறே ஒட்டிக்
கொள்க.

(௰க)

ருாருசு.

ஆடுங் குதிரையு நவ்வியு முழையு
மோடும் புல்வா யுளப்பட மறியே.

என்றது ஆடு முதலாகச் சொல்லப்பட்ட ஐந்துயிரும் மறி என்னும் இளமைப் பெயர் பெறும் என்றவாறு.

(மஉ)

4கவ்வி-புள்ளிமான் ; 5மூழை-மூழா.

ஙாஙஎ கோடுவாழ் 6குரங்கு குட்டியுங் கூறுப.

* கோடு வாழ்குரங்கென்பது ஊகமு முசுவுங் கொள்ளப்படும்.

உம்மை எதிரதுதழீஇய எச்சவும்மை.

ஙாஙஅ. மகவும் பிள்ளையும் பறழும் பார்ப்பு

மவையு மன்ன வட்பா லான.

(மங)

என்-னின், இதுவுங் குரங்குக் குரியதோர் இயல்பு உணர்த்துதல் நுதலிற்று. மகவு முதலாகிய நான்குங் [7]குரங்குச்சாதி இளமைப் பெயராம் என்றவாறு. [8]குரங்குக்குட்டி, குரங்குமகவு, குரங்குப்பிள்ளை, குரங்குப்பறழ், குரங்குப் பார்ப்பு.

ருாருசூ. யானையுங் குதிரையுங் கழுதையுங் கடமையு
மானோ டைந்துங் கன்றெனற் குரிய.

(பி-ம்)—1 கூருமையிற். 2 என்றவாறு. நாய்க்குருளை, நாய்க்குட்டி, நாய்ப்பறழ் எனவரும். 3 பிள்ளை யென்னும் இளமைப்பெயர் நாயொழிந்த நான்கு உயிர்க்கண்ணும் கூறுங் காலைக் குற்றமில வென்றவாறு. 4 கவ்வியென்பது. 5 முறையென்பது. 6 குரங்குங் குட்டிகூறும். 7 குரங்குச் சாதிக்கு. 8 குரக்குக்குட்டி.

* இவ்வுரைப் பகுதியில் சிலசொற்கள் எழுதுவோரால் விடுபட்டுப் போயின வெனத் தோன்றுகிறது.



# தொல்காப்பியம் - இளம்பூரணம்

என்றது யானை முதலாக மாவிருகச் சொல்லப்பட்ட [1]ஐந்தினது இளமைப் பெயர் கன்று என்றுவரும் என்றவாறு. (௰ஞ)

ருாசூ௰. எருமையு மரையும் வரையா ரான்டே.

என்றது, கன்றெனக் கூறும் இளமைப்பெயர் எருமைக்கும் மரைக்கும் உரித்து என்றவாறு. (௰௩)

ருாசூக. கவரியும் [2]கராகமு நிகரவற் றுள்ளே.

என்றது, [3]கவரி என்று சொல்லப்படுவதும் கராகமென்று சொல்லப்படுவதும் கன்

தென்னும் பெயர் பெறும்
என்றவாறு.

[4]கராக மென்பது கரடி. கராம் = முதலை.

நூஅசுஉ. ஒட்டக [5]மவற்றே டொருவழி நிலையும்.
(யஎ)

என்றது, ஒட்டகமென்று
சொல்லப்படுவதுங் கன்றென்னும்
பெயர் பெறும் என்ற
வாறு.

நூஅசுஙு.

குஞ்சரம் பெறுமே குழவிப் பெயர்க்கொடை.

(யஅ)

என்றது, குழவியென்னும் இளமைப் பெயர் யானை பெறும் என்றவாறு. (யகூ)

நூஉசு.

ஆவு மெருமையு 7மதுசொலப் படுமே.

என்றது, ஆவும் எருமையும் குழவிப்பெயர் பெறும் என்றவாறு. (உய)

நூஉரு.

கடமையு மரையு முதனிலை யொன்றும்.

என்றது, [8]கடமாவும் மரையுங் குழவி எனப் பொருந்தும் என்றவாறு. (உக)

நூஎசுசு.

குரங்கு முசுவு மூகமு மூன்றும்
நிரம்பநாடி னப்பெயர்க் குரிய.

என்றது குரங்கு முதலிய [9]மூன்றும் ஆராயுங்காலத்துக் குழவிப்பெயர்க்குரிய எனறவாறு.

நூாசுள. குழவியு மகவு மாயிரண் டல்லவை
கிழவ வல்ல மக்கட் கண்ணே.

என்றது, குழவி மகவென்று சொல்லப்பட்ட
லாத ஏனையவை மக்கட் குரியவல்ல என்றவாறு.

10இரண்டு இளமைப்பெயரு மல்
(உரு)

நூாசுஅ.

பிள்ளை குழவி கன்றே போத்தெனக்
கொள்ளவு மடையு மோரறி வுயிர்க்கே.

என்றது ஓரறிவுயிராகிய புல்லும் 11மரனும் இளமைப்பெயர் பிள்ளை முதலாகச் சொல்லப்பட்ட நான்குங் கொள்ளவும் அமையும் என்றவாறு.

(பி-ம்;—1 ஐர்தும். 2 கராம். 3 ககரியென்றங் கராமென்றஞ் சொல்லப் படுவது உம். 4 கராம். 5 அவற்றுளே. 6 மென்பதுஉம். 7 யவைசொலப். 8. கடமையும். 9 மூன் றுயிரும். 10 விரண்டின். 11 மரனுமாகிய.

# பொருளதிகாரம் - [illegible]

[illegible]

உம்மை எதிர்மறையாகலான் கன்றென்றதே பெரும்பான்மை. (உ௫)

ருாசுசு. நெல்லும் புல்லும் நேரா ரான்டே.

என்-னின், எய்தியது விலக்கல் நுதலிற்று.

1மேற் கூறப்பட்ட நான்கின் இளமைப்பெயரும் மேனவரும் ஓரறிவுயிர்க்கு என்றவாறு.

உம்மை எதிர்மறையாதலின் மேற்சொல்லப்பட்ட என்றவாறு.

ருாஎம. சொல்லிய மரபி

னிளமை தானே

சொல்லுங் காலை யவையல திலவே.

# கொள்ளார் நெல்லும் புல்லு இளமைப்பெயர் கூறப்பெறார்

(உ௱)

என்-னின், இள மைப்பெயரை வரையறுத்து உணர்த்துதல் நுதலிற்று.

சொல்லிப் போந்த மரபுடையன வன்றிச் சொல்லவேண்டு
²மரபுடையனவற்றிற்

ருஞ் சொல்லுமிடத்து [3]இவைதாமே இளமைப்பெயர் என்றவாறு.

என்பது என் சொன்னவாறோவெனின், * பரந்துபட்ட வுயிர்த் தன்மையெல்லாம் ஈண்டு ஓதப்பட்டனவல்ல, எடுத்தோதாதனவற்றிற்கு ஈண்டு ஓதப்பட்ட இளமைப் பெயரல்லது பிற பெயரின்மையின், இவற்றன் ஏற்பனவற்றோடு கூட்டியுரைக்க என்ற வரும்.

## இத்துணையுங் கூறப்பட்ட சூத்திரத்திற்கு உதாரணம்:—

'பறவைதம் பார்ப்புள்ள' [கலித்-௱௰௧]
'வெள்ளாங் குருகின் பிள்ளையும் பலவே'
'யாமைப் பார்ப்பி னன்ன' [குறுந்-௱௫௨]
'தன்பார்ப்புத் தின்னும் பண்பின் முதலை' [ஐங்குறு-௪௧]

பார்ப்பு, பிள்ளை பிறவும் பறப்பன ஊர்வனவெல்லாம் இவ்வகையினறக் கூறுப.
கடப்பனவற்றுள், மூங்காக்குட்டி, மூங்காப்பறழ் ; வெருகுக்குட்டி, வெருகுப்பறழ் ; எலிக்
குட்டி, எலிப்பறழ் ; அணிற்குட்டி, அணிற்பறழ் ; நாய்க்குட்டி, நாய்க்குருளை ; நரிக்குட்டி,
நரிக்குருளை, நரிப்பறழ், நரிப்பிள்ளை ; பன்றிக்குட்டி, பன்றிக்குருளை, பன்றிப்பறழ், பன்
றிப்பிள்ளை ; புலிக்குட்டி, புலிக்குருளை, புலிப்பறழ், புலிப்பிள்ளை ; குரக்குக்குட்டி, குரக்கு
மக, குரக்குப்பிள்ளை, குரக்குப் பார்ப்பு, குரக்குப்பறழ், குரக்குக்குழவி; ஊக முசுவென்பன
வும் இவ்வாறே கொள்க. யாட்டுமறி; குதிரைமறி, குதிரைக்கன்று; கவ்விமறி ; உழைமறி ;
புல்வாய்மறி; யானைக்கன்று, யானைக்குழவி; கழுதைக்கன்று; கடமைக்கன்று, கடமைக்
குழவி ; ஆன்கன்று, ஆன்குழவி ; எருமைக்கன்று, எருமைக்குழவி ; மரைக்கன்று, மரைக்
குழவி ; கவரிக்கன்று ; கராக்கன்று ; ஒட்டகக்கன்று ; மக்கட்குழவி, மக்கண்மக ; தெங்கம்
பிள்ளை ; கமுகங்கன்று ; கருப்பம்போத்து. ஓரறிவுயிர்க்கட் குழவியென்பது வந்தவழிக்
கண்டு கொள்க.

(பி-ம்)—1 செல்லும் புல்லு மெனவரும் ஓரறிவுயிர்கள் மேற்சொல்லப்பட்ட வின
மைப்பெயர் கூறப்பெறு றென்றவாறு. 2மரபுடையன வற்றிற்குச். 3 அவைதானே.

* இதுமுதல் 'குரங்குமுசவு மூகமும்மந்தி' என்னுஞ் சூத்திரம் வரையுள்ள பகுதி
யைக் கொண்ட இதழ்கள் இளம்பூரணருரை முழுதுமடங்கிய ஏட்டுப்பிரதியில் தவறி
விட்டன. ஸ்ரீ. ரா. ராகவையங்காரவர்கள் அன்புகூர்ந் தனுப்பிய மரபியல் ஏட்டுப்பிரதியே
விடுபட்ட பகுதியை நிரப்புதற்கு உபகாரமாயிற்று.

இனி அவையல்லது பிறவில்லை யென்றமையின், ஒன்றற்குரியவற்றை ஒன்றற்குரித்தா[க்]கி வழங்குவனவுஞ் சிறுபான்மை கொள்ளப்படும். கழுதைதமறியென்பனவும் 'பிள்ளை வெருகிற் கல்கிரை யாகி' [குறுந்-௱௭] என்றாற்போலவும் சான்றோர் செய்யுளகத்து வருவன கடியப்படா வென்றவாறு. எடுத்தோதாதது பெரும்பான்மை. இனி எடுத்தோதாதன: சிங்கம் புலிப்பாற்படும்; உடும்பு, ஓந்தி, பல்லி அணிற்பாற்படும்; நாவியென்பது மூங்காவின் பாற்படும். பிறவும் இவ்வகையின் ஏற்பன கொள்க. (௨௮)

௫௭௧. ஒன்றறி வதுவே யுற்றறி வதுவே
இரண்டறி வதுவே யதனொடு நாவே
மூன்றறி வதுவே யவற்றொடு மூக்கே
நான்கறி வதுவே யவற்றொடு கண்ணே
ஐந்தறி வதுவே யவற்றொடு செவியே
ஆறறி வதுவே யவற்றொடு மனனே
நேரிதி னுணர்ந்தோர் நெறிப்படுத் தினரே.

என்-னின், உலகத்துப் பல்லுயிரையும் அறியும் வகையாற் கூறப்படுதலை [உணர்த்துதல்] நுதலிற்று.

ஓரறிவுயிராவது உடம்பினானறிவது; ஈரறிவுயிராவது உடம்பினானும் வாயினானும் அறிவது; மூவறிவுயிராவது உடம்பினானும் வாயினானும் மூக்கினானும் அறிவது; நாலறிவுயிராவது உடம்பினானும் வாயினானும் மூக்கினானும் கண்ணினானும் அறிவது; ஐயறிவுயிராவது உடம்பினானும் வாயினானும் மூக்கினானும் செவியினானும் கண்ணினானும் அறிவது; ஆறறிவுயிராவது உடம்பினானும் வாயினானும் மூக்கினானும் கண்ணினானும் செவியினானும் மனத்தினானும் அறிவது. இவ்வகையினான் உயிர் ஆறுவகையின வாயின.

இவ்வாறு அறிதலாவது: உடம்பினால் வெப்பம் தட்பம் வன்மை மென்மை அறியும். நாவினாற் கைப்பு காழ்ப்பு துவர்ப்பு உவர்ப்பு புளிப்பு மதுரம் என்பன அறியும். மூக்கினால் நன்னாற்றம் தீயநாற்றம் அறியும். கண்ணினால் வெண்மை செம்மை பொன்மை பசுமை கருமை நெடுமை குறுமை பருமை நேர்மை வட்டம், கோணம் சதுரம் என்பன அறியும். செவியினால் ஓசை வேறுபாடுஞ் சொற்படும் பொருளும் அறியும். மனத்தினாலறியப்படுவது இதுபோல்வன வேண்டு மெனவும், இது செயல் வேண்டுமெனவும், இஃது எத்தன்மை யெனவும் அனுமானித்தல். அனுமானமாவது புகைகண்டவழி நெருப்புண்மை கட்புலன் அன்றாயினும் அதன்கண் நெருப்பு உண்டென்று அனுமானித்தல்.

இவ்வகையினான் உலகிலுள்ளவெல்லாம் மக்கட்கு அறிதலாயின. அறியும் உயிர்களை வருகின்ற சூத்திரங்களாற் கூறுதும்.

இனி அவற்றை
(உஎ)

ருாஎஉ. புல்லு மரனு மோரறி வினவே
பிறவு முளவே யக்கிளைப் பிறப்பே.

ஓரறிவுயிராமாறு புல்லும் மரனும் என்று சொல்லப்பட்ட இருவகை உடம்பினவடி யும்; அக்கிளைப்பிறப்பு பிறவும் உள என்றவாறு.

பிறவாவன கொட்டியுந் தாமரையுங் கழுநீரும் என்பன.

புல்லென்பது புறவயிர்ப்பு உடையன; மரமென்பது அகவயிர்ப்புடையன. அவையா மாறு முன்னர்க் கூறப்படும். (உஅ)

# பொருளதிகாரம் - மரபியல்

சாஎக

ருாஎங. நந்து முரளு மீரறி வினவே
பிறவு முளவே யக்கிளைப் பிறப்பே.

என் - னின், ஈரறிவுயிர் உணர்த்துதல் நுதலிற்று.

ஈரறிவுயிராவன நந்தும்,

முரளுமென்று சொல்லுவ; பிறவுமுள

ஈரறிவுயி ரென்ற ...ரும். நந்து என்றதனால்

சங்கு, நத்தை, அலகு, நொள்ளை என்பன

கொள்க. முரள் என்

...னால் இப்பி, கிளிஞ்சி[ல்], ஏரல் என்பன கொள்க.

௫௭௪. சிதலு மெறும்பு மூவறி வினவே
பிறவு முளவே யக்கிளைப் பிறப்பே.

என்-னின், மூவறியுயிராமாறு உணர்த்துதல் நுதலிற்று.
சிதலும், எறும்பும், மூவறிவின; அக்கிளைப் பிறப்பு [பிறவு] முள என்றவாறு.
பிறவாவன அட்டை முதலாயின. (௩௰)

௩௱௭௫. நண்டுந் தும்பியு நான்கறி வினவே
பிறவு முளவே யக்கிளைப் பிறப்பே.

என்-னின், நாலறிவுயிராமாறு உணர்த்துதல் நுதலிற்று.
நண்டும், தும்பியுமென நாலறிவையுடைய; அக்கிளைப் பிறப்பு [பிறவு]முள
என்ற
வாறு.
பிறவு மென்றதனன் ஞிமிறு, சுரும்பென்பன கொள்க.

௩௱௭௬. மாவும் புள்ளு மையறி வினவே
பிறவு முளவே யக்கிளைப் பிறப்பே.

என்-னின், ஐயறிவுயிராமாறு உணர்த்துதல் நுதலிற்று.

நாற்கால் விலங்கும் புள்ளும் ஐயறிவுடைய: அக்கிளைப் பிறப்பு பிறவும் உள என்றவாறு.

பிறவாவன தவழ்வனவற்றுள் பாம்பு முதலாயினவும் நீருள்வாழ்வனவற்றுள் மீனும் முதலையும் ஆமையும் முதலாயினவுங் கொள்ளப்படும். (௫௨.)

௫௱௭௭. மக்க டாமே யாறறி வுயிரே
பிறவு முளவே யக்கிளைப் பிறப்பே.

என்-னின், ஆறறிவுயிராமாறு உணர்த்துதல் நுதலிற்று.
மக்கள் ஆறறிவுயிரெனப்படுவர்; அக்கிளைப்பிறப்பு[பிறவு]முள என்றவாறு. (௫௩)
பிறவாவது தேவர், அசுரர், இயக்கர், முதலாயினோர்.

௫௱௭௮. ஒருசார் விலங்கு முளவென மொழிப.

இதுவு மது.
விலங்கினுள் ஒருசாரனவும் ஆறறிவுயிரா மென்றவாறு.
அவையாவன கிளியுங் குரங்கும் யானையும் முதலாயின.

(பி-ம்)—1 மாக்களு.



மேல் ஓரறிவுயிரெனத் தோற்றுவித்தார்: அதனானே இச்சூத்திரங்கள் ஈண்டுக் கூறப்பட்டன. (௫௪)

௫௱௭௯. வேறாக் குறித்தே விதந்துகிளி றென்றல்.

என்-னின், நிறுத்த முறையானே ஆண்பாற் குரிய பெயர் கூறுதல் நுதலிற்று

இச்சுத்திர முதலாயின.

களிறென்று விதந்துகூறுதல் யானைக்குரித்து என்றவாறு. (௬௫)

நூ. ௮௰. கேழற் கண்ணுங் கடிவரை யின்றே.

பன்றியின் கண்ணும் ஆண்பாலைக் களிறென்றல் கடியப்படா தென்றவாறு. (௬௬)

நூ. ௮௧. புல்வாய் புலியுழை மரையே கவரி .
சொல்லிய கராமோ டொருத்த லொன்றும்.

புல்வாய் முதலாயின அறுவகையுயிரும் ஒருத்தலென்ன ஆண்பெயர் ஒன்றும் என்றவாறு. (௬௭)

நூ. ௮௨. வார்கோட் டியானையும் பன்றியு மன்ன.

யானையும் பன்றியும் ஒருத்தலெனப்படு மென்றவாறு.

நூ. ௮௩. ஏற்புடைத் தென்ப வெருமைக் கண்ணும்.

(௬௮)

எருமையினும் ஆணினை ஒருத்தலென்று கூறப்படு மென்றவாறு. (ருக)

ருா அச. பன்றி புல்வா யுழையே கவரி
என்றிவை நான்கு மேறெனற் குரிய.

பன்றி முதலாகிய நான்கும் ஆணினை ஏறென்று கூறலா மென்றவாறு. (சம)

ருா அரு.

எருமையும் மரையும் பெற்றமு மன்ன.

சூத்திரத்தாற் பொருள் விளங்கும். (சக)

ருா அசா.

கடல்வாழ் சுறவு மேறெனப் படுமே.

கடல்வாழ் சுறாவின்

ஆணினையும் ஏறெனப்படு மென்றவாறு.

(௪௨)

௫௱௮௭. பெற்ற மெருமை புலிமரை புல்வாய்
மற்றிவை யெல்லாம் போத்தெனப் படுமே.

பெற்ற முதலாகிய ஐந்தின் ஆணினையும் போத்தெனலாகு மென்றவாறு. (௪௩)

௫௱௮௮. நீர்வாழ் சாதியு மதுபெறற் குரிய.

நீருள்வாழும் முதலை முதலாயினவற்றுள் ஆண்பால் என்றவாறு.

போத்தெனக் கூறுதற்குரிய

(௪௪)

௫௱௮௬. மயிலு மெழா

அலும் பயிலத் தோன்றும்.

மயிலுள்ளும் எழாலுள்ளும்

ஆணினைப் போத்தென்றல்

பெரும்பான்மை என்ற

வாறு. (௪௫)

௫௱௮௭. இரலையுங் கலையும் புல்வாய்க் குரிய.

இரலை என்னும் பெயரும் கலை என்னும் பெயரும் புல்வாயில் ஆண்பாற்குரிய என்றவாறு.

௫௱௮௮. கலைப்பெயர் காட்சி யுழைக்கு முரித்தே
நிலையிற் றப்பெயர் முசுவின் கண்ணும்.

கலை என்னும் பெயர் உழைக்கும் முசுவிற்கு முரித் தென்றவாறு.

(௪௬)

(௪௭)

நூ ௬௨.

மோத்தையுந் தகரு முதளு மப்பரும்
யாத்த வென்ப யாட்டின் கண்ணே.

மோத்தை முதலாகச் சொல்லப்பட்டன யாட்டில் ஆணிற்குரிய வென்றவாறு.

(௪௮)

❀

நூ ௬௩.

சேவற் பெயர்க்கொடை சிறகொடு சிவணு
மாயிருந் தூவி மயிலலங் கடையே.

மயிலல்லாத புள்ளின்கண் ஆண்பெயர் சேவலென்று கூறப்படு மென்றவாறு. (௪௧)

சிறகு என்றது. ஆகுபெயர்.

நூ௫௯௪. ஆற்றலொடு புணர்ந்த வாண்பாற் கெல்லாம்
ஏற்றைக் கிளவி யுரித்தென மொழிப.

ஆற்றலுடைத்தாகிய ஆண்பாற்கெல்லாம் ஏற்றை என்னும் பெயர் உரித்தென்றவாறு. (௫௰)

ஏற்புழிக்கோடல் என்பதனான் அஃறிணைக்கண்ணும் கொள்ளப்படும்.

நூ௫௯௫. ஆண்பா லெல்லாம் ஆணெனற் குரிய
பெண்பா லெல்லாம் பெண்ணெனற் குரிய
காண்டவை யவையவை யப்பா லான.

ஆண்பா லுயிரெல்லாம் ஆண் என்னும் பெயர்பெறும்; பெண்பா லுயிரெல்லாம் பெண் என்னும் பெயர்பெறும்; அவ்விருவகைக்கும் அறிகுறி காண்டலான் என்றவாறு.

சேவற்குரித் தென்னும் சூத்திர[௫௫]முதலாக இத்துணையும் ஆண்பெயர் கூறினார். இனிப் பெண்பெயர் கூறுகின்றாராகலின் அதிகாரப்பட்ட பொருள் சே, கடுவன், கண்டி என்பன சிறப்புச் சூத்திரத்தாகலின் (?) அதற்குரியனெனக் கூறிற்றிலராலெனின், அவற்றுள் சே என்பது ஆவினுள் ஆணேயே குறித்து வழங்கலின் ஓதாராயினார். கடுவனும், கண்டியும் முன்னை எடுத்தோதப்படும். எடுத்தோதப்பட்டன பலபொருள் ஒருசொல்லும் ஒருபொருட் பலசொல்லும் என்றுகொள்க.

# தொல்காப்பியம் - இளம்பூரணம்

இத்துணையுங் கூறப்பட்டது: வேழத்துள் ஆண் களிறு ஒருத்தல் ஏற்றை எனப்படும்; பன்றியுள் ஆண் ஒருத்தல் ஏற்றை எனப்படும்; புல்வாயுள் ஆண் ஒருத்தல், ஏறு, ஏற்றை, போத்து, இரலை, கலை எனப்படும்; புலியுள் ஆண் ஒருத்தல், போத்து, ஏற்றை எனப்படும்; உழையுள் ஆண் ஒருத்தல், ஏறு, கலை, ஏற்றை எனப்படும்; மரையுள் ஆண் ஒருத்தல், ஏறு, போத்து, ஏற்றை எனப்படும்; கவரியுள் ஆண் ஒருத்தல், ஏறு, ஏற்றை எனப்படும்; கராத்துள் ஆண் ஒருத்தல், ஏறு, ஏற்றை எனப்படும்; எருமையுள் ஆண் ஒருத்தல், போத்து, ஏற்றை, கண்டி எனப்படும்; சுறவில் ஆண் என்பன ஏற்றை எனப்படும்; பெற்றத்துள் ஆண் போத்து, ஏறு, ஏற்றை எனப்படும்; 'எருது காலுறு துன்னியர் கொன்ற' என வருதலின் எருதும் ஆம்; அதிகாரப் புறனடையாற் கொள்க. நீர்வாழ் சாதியுள் ஆண் வராற் போத்து வாளைப் போத்து என வரும். முசுவில் ஆண் கலை எனப்படும்; குரங்கும், ஊகமும் இவ்வாறே கொள்ளப்படும்; கடுவன் எனவும் வரும். ஆட்டினுள் ஆண் மோத்தை, தகர், முதன், அப்பர் எனவரும்; புள்ளினுள் மயிலாண் எழால், சேவல், போத்து, ஏற்றை எனப்படும்; புள்ளினுள் ஆணெல்லாவற்றிலும் மயிலல்லாதனவெல்லாம் சேவல் ஏற்றை எனப்படும். ஓரறிவுயிருள் ஆண் பெண் என வேறுபடுத்தலாவன ஏற்றைப்பனை ஆண்பனை என வரும்.

௫௱௬௯. பிடியென் பெண்பெயர் யானை மேற்றே.

இனிப் பெண்பெயர் உணர்த்துகின்றார் இச்சூத்திர முதலாக. (௫௪)

பிடி என்னும் பெண்பெயர் ஆனையின் மேலது என்றவாறு. (௬௨)

௫௱௬௭. ஒட்டகங் குதிரை கழுதை மரையிவை
பெட்டை யென்னும் பெயர்க்கொடைக் குரிய.

பெட்டை என்னும் பெயர் ஒட்டக முதலாகச் சொல்லப்பட்ட நான்குக்கும் பெண்பாற்குப் பெயராம் என்றவாறு. (௬௩)

௫௱௬௮. புள்ளு முரிய வப்பெயர்க் கென்ப.

பெட்டை என்னும் பெயருக்குப் புள்ளிற் பெண்பாலு முரிய என்றவாறு. (௬௪)

௫௱௬௯. பேடையும் பெடையும் நாடி னொன்றும்.

பேடை என்னும் சொல்லும் பெடை என்னும் சொல்லும் ஆராயுமிடத்துப் பெட்டை என்பதனோடு ஒன்றும் என்றவாறு.

இது புள்ளின் வைத்தமையாற் புள்ளின்பின் வருதல் பெரும்பான்மை. (௬௫)

௫௱௭௰. கோழி கூகை யாயிரண் டல்லவை
சூழுங் காலை யளகெனல் லமையா
* கோழியுக் கூகையு மளகெனப் படும். (௬௬)

௫௱௭௧. பெண்பா லான
அப்பெயர்க் [1]கிழமை மயிற்கு முரித்தே.

அளகென்னும் பெண்பாற் பெயர் மயிலுக்கும் பெண்பாற்கு முரித்து என்றவாறு. (௬௭)

---

பிரதி)—1 கிளவி. * 'கோழியுக்...பெண்பாலான' என்பது சூத்திரத்தின் பகுதியாக வுள்ளது.

# பொருளதிகாரம் - செய்யுளியல்

௫௱௭௫

௫௱௨.

புல்வாய் நவ்வி யுழையே கவரி
சொல்வாய் நாடிற் பிணையெனப் படுமே.

புல்வாய் முதலாகிய நான்கிற்கும் பிணை என்னும் பெண்மைப்பெயர் வழங்குதற் குரித்து என்றவாறு. (கூஅ)

சூ௱௩. பன்றி புல்வாய் நாயென மூன்று
மொன்றிய வென்ப [1]பிணவென் பெயர்க்கொடை.

பன்றி முதலாகிய மூன்றிற்கும் பெண்பாற்குப் பிணவு என்னும்பெயர் பொருந் திற்று என்றவாறு.

சூ௱௪. பிணவ லெனினு மவற்றின் மேற்றே.

(௬௯)

பிணவல் என்று சொல்லினும்

மேற் சொல்லப்பட்டவாறின் மேல

என்றவாறு.

சூாரு.

பெற்றமு மெருமையு மரையு மாவே.

(கய)

ஆ என்னும் பெண்பெயர் பெற்றம் முதலாகிய மூன்றிற்கு முரித்து என்றவாற. (கக)

சூாகு. பெண்ணும் பிணவு மக்கட் குரிய.

பெண்ணென்னும் பெயரும் பிணவு என்னும் பெயரும் மக்களிற் பெண்பாற் குரித்து என்றவாறு. (கஉ)

சூாஎ. எருமையும் மரையும் பெற்றமு நாகே.

எருமை முதலாகச் சொல்லப்பட்ட மூன்றற்கும் நாகு என்னும் பெண்பெயர் உரித்து என்றவாறு. (கங)

சூாஅ. நீர்வாழ் சாதியு ணந்தும் நாகே.

நீர்வாழ்வனவற்றுள் நந்தென்பதூஉம் நாகு என்னும் பெண்பெயர் பெறும் என்ற (கச)

வாறு.

சூாசுடு. மூடுங் கடமையும் யாடல பெறாஅ. (சுரு)

மூடும் கடமையும் ஆட்டின் பெண்பால தென்றவாறு.

சூாய. பாட்டி யென்ப பன்றியு நாயும்.

பாட்டி என்னும் பெயர் பன்றியினதூஉம் நாயினதூஉம் பெண்பெயர்க்குரிய என்ற (சுசு)
வாறு.

சூாயக. நரியு மற்றே நாடினர் கொளினே. (சுஎ)

நரியும் பெண்பாற்குப் பாட்டி என்னும் பெயர் பெறும் என்றவாறு.

சூாய௨. குரங்கு முசுவு மூன்றும் மந்தி.

(பிரதி)—1 பிணையென்.

சுாஎசு

தொல்காப்பியம் - இளம்பூரணம்

குரங்கு முதலாயின மூன்றும் பெண்பால் மந்தி என்னும் பெயர்பெறும் என்ற

வாறு.

இத்துணையுங் கூறப்பட்டன பெண்பாற் பெயராவன: யானையுட் பெண் பிடி; ஒட்டகம்-பெட்டை; குதிரை-பெட்டை; கழுதை-பெட்டை; மரை-பெட்டை, நாகு, ஆ; புள்ளு-பெட்டை, பேடை, பெடை; கோழி-அளகு; கூகை, மயில்-அளகு; புல்வாய்-பிணை, பிணவு, பிணவல்; நவ்வி-பிணை; உழை, கவரி-பிணை; பன்றி-பிணவு, பிணவல், பாட்டி; நாய்-பிணவு, பிணவல், பாட்டி; பெற்றம்-ஆ, நாகு; எருமை-ஆ, நாகு; மக்கள்-பெண், பிணவு; நந்து-நாகு; ஆமா-மூடு, கடமை; நரி-பாட்டி; குரங்கு-மூசு, ஊகம், மந்தி: எனவரும்.

இதனான் எடுத்தோதாதன சான்றோர் செய்யுளகத்துக் கண்டுகொள்க. வழக்கினுள்ளும் வந்தவாறு கண்டுகொள்க. (௬௮)

சூ௬௱௬௯. குரங்கினு ளேற்றைக் கடுவ னென்றலும்
மரம்பயில் கூகையைக் கோட்டா னென்றலுஞ்
செவ்வாய்க் கிளியைத் தத்தை யென்றலும்
வெவ்வாய் வெருகினைப் பூசை யென்றலும்
குதிரையு ளாணினைச் சேவ லென்றலும்
இருணிறப் பன்றியை யேன மென்றலும்
எருமையு ளாணினைக் கண்டி யென்றலும்
முடிய வந்த வழக்கி னுண்மையிற்
கடிய லாகா கடனறிந் தோர்க்கே.

இது அதிகாரப் புறனடை.

குரங்கு முதலாகச் சொல்லப்பட்டவற்றை இப்பெயரான் உலகத்தார் வழங்குதலின் ஈண்டோதிய இலக்கணத்தின் மாறுபட்டு வருவன வழக்கினுஞ் செய்யுளினும் அடிப்பட்டவேல் வழுவென்று கடியப்படா வென்றவாறு. (௬௯)

சூ௬௱௭௰. பெண்ணு மாணும் பிள்ளையு மவையே.

பெண்ணும், ஆணும், பிள்ளையும் பற்றவருஞ்சொல் மேலெடுத்தோதினவை என்றவாறு.

இனிச் சிறப்பு விதியுடைய அந்தணர்க் குரியன கூறப்படுகின்றது. (௭௰)

சூ௬௱௰௫. நூலே கரக முக்கோல் மணையே
ஆயுங் காலை யந்தணர்க் குரிய.

நூலும் கரகமும் முக்கோலும் மணையும் ஆராயுங்காலத்து அந்தணர்க்கு உரிய என்றவாறு. (௭௧)

சூ௬௱௰௬. படையுங் கொடியுங் குடையு முரசும்
நடைநவில் புரவியுங் களிறுந் தேருந்
தாரு முடியு நேர்வன பிறவுந்
தெரிவுகொள் செங்கோ லரசர்க் குரிய.

படை-கருவி. [படை] முதலான ஒன்பதும் செங்கோலும் பிறவுமென்றதனான் ஆரமுங் கழலு மெல்லாம் அரசர்க்குரிய என்றவாறு. (௭௨)

# பொருளதிகாரம் - மரபியல்

௬௱௭௭

சூ௬௱௰௭.

அந்த ணாளர்க் குரியவு மரசர்க்
கொன்றிய வரூஉம் பொருளுமா ருளவே.

அவை நாலுதொழில் : ஈதல்
வேட்டல் வேட்பித்தல் ஓதலும்.

(௭௫)

சூ௱௰அ. பரிசில் பாடாண் டிணைத்துறைக் கிழப்பெயர்
நெடுந்தகை செம்ம லென்றிவை பிறவும்
பொருந்தச் சொல்லுத லவர்க்குரித் தன்றே.

இப்பொருண்மையும் அரசர்க்கு முரித்து அந்தணர்க்கு முரித்து என்றவாறு. (௭௬)

சூ௱௰௯.

ஊரும் பெயரு முடைத்தொழிற் கருவியும்
யாரும் சார்த்தி யவையவை பெறுமே.

ககரும் தமது இயற்பெயரும் சிறப்புப்பெயரும் தத்தந் தொழிற்கேற்ற கருவியும் வரையுஞ் சார்த்தி அவையவை வருதல்பெறும் என்றவாறு. (௭௭)

சூ௱௨௰. தலைமைக் [1]குணச்சொலுந் தத்தமக் குரியதோர்
நிலைமைக் கேற்ப நிகழ்த்துப வென்ப.

தலைமைக் குணமுடையராகக் கூறுதலும் தத்தமக்கேற்ற நிலைமைக்குப்பொருந்து

மாறு நிகழ்த்துப என்றவாறு.

எனவே இறப்பவுயர்தல் இறப்பவிழிதல் ஆகாதென்றவாறும்.

சூ௭௧. இடையிரு வகையோ ரல்லது நாடிற்
படைவகை பெறாஅ ரென்மனார் புலவர்.

(௭௬)

அரசரும் வணிகரு மல்லாதோர்க்குப் படைக்கலவகை கூறப்பெறார் என்றவாறு. (௭௭)

சூ௭௨. வைசிகன் பெறுமே வாணிக வாழ்க்கை.

வைசிகன் வாணிகத்தான் வாழும் வாழ்க்கையைப் பெறும் என்றவாறு. (௭௮)

சூ௭௩. மெய்தெரி வகையி னெண்வகை யுணவின்
செய்தியும் வரையா ரப்பா லான.

இதுபயறு.

எண்வகை உணவாவன : நெல்லு, [2]காணம், வரகு, இறுங்கு, தினை, [3]சாமை, புல்லு,

சோறும்பை.

இவையிற்றை உண்டாக்குகின்ற உழவு தொழிலும் 4வாணிகர்க்கு வரையாரென்ற வாறு. (௭௧)

சூ. ௨௪. கண்ணியுந் தாரு மெண்ணின ராண்டே.

வைசிகருக்கும் கண்ணியுந் தாரும் சொல்லப்பெறு மென்றவாறு. (௭௨)

(பிரதி)—1 குணஞ்சொலர். 2 காப்பு. 3 புல்லா, முதிரை, 4 வாணிகர்க்கு...உகையா மென்றவாறு. → கொன்று



சூ. ௨௫. * வேளாண் மாந்தர்க் குழுதூ ணல்ல
தில்லென மொழிப பிறவகை நிகழ்ச்சி.

என்றது வே[ளாண் மாந்தர்]க்குத் தொழில் உழவே என்றவாறு.

சூ. ௨௬. வேந்துவிடு தொழிலிற் படையுங் கண்ணியும்
1வாய்ந்தன ரென்ப வவர்பெறும் பொருளே.

(௭௩)

வய்ரயதன்மேற் சிறப்புவிதி. வேந்தரால் வைப்பட்ட தொழிலினுனே படையும் கண்ணியும் வேளாண்மாந்தர்க்கும் உளதாகு மென்றவாறு. (௩௨)

சூ௫௨எ. அந்த ணாளர்க் கரசுவரை வின்றே.

§ அமாத்திய நிலையும் சேனபதி நிலையும் பெற்ற அந்தணாளர்க்கு அரசர் தன்மையுட் வரைவில வென்றவாறு.

அஃதாவது மந்திரி புரோகிதனுமயவழிக் கொடியும் குடையும் கவரியும் தாரு முதலாயின அரசராற்பெற்று அவரோடு ஒருதன்மையராகி யிருத்தல். (௩௩)

சூ௫௨அ. வில்லும் வேலுங் கழலுங் கண்ணியும்
தாரு மாரமுந் தேரு மாவும்
மன்பெறு மரபி னேனோர்க் குரிய.

வில்லு முதலாகச் சொல்லப்பட்டனவெல்லாம் மன்னனாற்பெற்ற மரபினால் வைசிகர்க்கும் வேளாளர்க்கு முரிய என்றவாறு. (௩௪

சூ௫௨௯. அன்ன ராயினு மிழிந்தோர்க் கில்லை.

அன்னர்[த]ர மிழிந்தோராயினும் மேற்சொல்லப்பட்ட மன்னனால் வில்லு முதலாயின பெற்ற மரபினராயினுட் நான்கு குலத்திலும் இழிந்த மாந்தர்க்கு அவை உளவாகக் கூறப்படா வென்றவாற.

எனவே அவரவர்க் குரியவாற்றாற் கூறப்பெறு மென்றவாறு.

சூ௫௩0. புறக்கா ழனவே புல்லெனப் படுமே.

(௩௫)

என்னின், ஓரறிவுடையன புறவயிர்ப் புடையனவற்றைப் புல் என்று சொல்வர் என்றவாறு.

அவையாவன: தெங்கு, பனை, கமுகு, மூங்கில் முதலாயின. (௩௬)

கூ௱௩௧. அக்கா மூனவே மரமெனப் படுமே.

[3]உள்வயிர்ப் புடையனவற்றை மரமெனப்படு மென்றவாறு.

(அஎ)

கூ௱௩௨. தோடே மடலே யோலை யென்று
ஏடே யிதழே பாளை யென்று

(பிரதி)—1 ஆய்க்தன; ஆர்க்த தென்ப. 2 புறவயிர முடையனவற்றைப். 3 உள் வயிருடையன வற்றை. * இச்சூத்திரம் ஸ்ரீ ராகவையங்காரவர்களதுபிரதியிற் காணப் படவில்லை. § 'அமாத்ரயர் நிலையும் ஈசுபதி நிலையும் பெற்ற' என்பது இச்சூத்திரத்தின் முதலடியாக வுள்ளது.

# பொருளதிகாரம் - மரபியல்

௩௱௭௬

ஈர்க்கே குலையே நேர்ந்தன பிறவும்
புல்லொடு வருமெனச் சொல்லினர் புலவர்.

தோடுமுதலாகச் சொல்லப்பட்ட உறுப்பின் பெயரெல்லாம் புல்லாகிய உறுப்பின் கண்ணே வருமென்றவாறு.

இதனுனே புறவயிர்ப்பும் உள்வயிர்ப்பு மில்லாதனவற்றுள் ஒருசாரன இவ்வகைப் பட்ட உறுப்புப்பெய [1]ருடையனவாகி இவையும் புல்லெனப்படும் என்றவாறு.

அவையாவன : [2]வாழை ஈந்து தாமரை கழுநீர் என்றித்தொடக்கத்தன. (அ௯)

சூ௬௩௩. இலையே முறியே தளிரே தோடே
சினையே குழையே பூவே யரும்பே
நனையே யுள்ளுறுத் தனையவை யெல்லாம்
மரனொடு வருஉங் கிளவி யென்ப.

இலை முதலாகச் சொல்லப்பட்ட உறுப்புப்பெயர் மரத்துக்கு அங்கமாம் என்றவாறு.

இதனானே புறவயிர்ப்பும் உள்வயிர்ப்பும் இல்லாதனவற்றுள் ஒருசாரன ப்பெயர் உடையன மரமெனப்படுமென்று கொள்க.

இவ்வுறுப்

அவையாவன : முருக்கு தணக்கு முதலாயின.

சூ௬௩௪. காயே பழமே தோலே [3]செதிளே
வீழோ டென்றாங் கவையு மன்ன.

(௨௪)

இச்சூத்திரம் அவ்விருவகைக்கும் பிற்கூறவிற் காய் முதலாகச் சொல்லப்பட்ட அவ்வுறுப்புப்பெயர் அவ்விருவகைக்கும் பொதுவெனப்படு மென்றவாறு.

தாழை பூவுடைத் தாகலானும் கோடுடைத் தாகலானும் புறவயிர்ப் பின்மை யானும் மரமெனப்படு மாயினும் புல் என்றல் பெரும்பான்மை. (கூ)

சுாஅகூ. நிலந்தீ நீர்வளி விசும்போ டைந்துங்
கலந்த மயக்க முலக மாதலின்
இருதிணை யைம்பா லியனெறி [4]வழாமைத்
திரிவில் சொல்லொடு தழாஅல் வேண்டும்.

என்-னின், இதுவுமோர் மரபுணர்த்துதல் நுதலிற்று.

உலகு நிலமுதலாகிய ஐம்பெரும்பூதக் கலந்த மயக்கமாதலான் மேற்சொல்லப்பட்ட பொருள்களைத் திணையும் பாலும் வழாமல் திரிபுபடாத சொல்லோடே தழுவுதல் வேண்டும் என்றவாறு.

கலத்தலாவது முத்தும் பவளமும் நீலமும் மாணிக்கமும் விரவினாற் போறல்.

மயக்கமாவது பொன்னும் வெள்ளியும் செம்பும் உருக்கி யொன்றாதல் போறல்.

உலகமென்றது உலகினையும் உலகினுட் பொருளையும். உலகமாவது முத்தும் மணியுங் கலந்தாற்போல நிலம் நீர் தீ வளி ஆகாயம் என விரவி நிற்கும்: உலகினுட் பொருள் பொன்னும் வெள்ளியும் செம்பும் உருக்கி யொன்றானாற்போல வேற்றுமைப்படாது நிற்கும்: அவ்விரண்டினையும் உலகம் உடைத்தாகலிற் கலந்த மயக்கமென்றார்.

(பிரதி)—1 ருடையனவாயின் அவையும். 2 தாழையுந் தாமரையுங் கமுகு... 3செடுழே. 4 வழாமற் றிரிவில்.



இப்பொருள் எல்லா வுலகத்தையும் விட்டு நீங்காமையின் இவற்றை ஒருமுகத்தால் நோக்க வேறுபாடிலவா மாதலான் மேற்கூறிப்போந்த முறையினான் வேறுபடுத்து இருதிணையாகவும் ஐம்பாலாகவும் இயன்றநெறி வழுவாமைத் திரிபுபடாத சொல்லோடே

புணர்க்க என்றவாறு.

உதாரணம்: சாத்தன் சோற்றை உண்டான் என்பது. இது உண்டற் குரியானை வேறு கூறுதலின் மரபாயிற்று. அஃதேல் வழாமை தழால்வேண்டுமெனக் கருதியபொருள் முடியும்: திரிவில்சொல் என்றது மிகை பயனின், ஒக்கும். குழவி என்பது உயர்திணைக்கண்ணும் அதற்குரிய பாலார் கூறுதற்கு அஃறிணைக்குரிய பாலாற் கூறப்படுதலின் அவ்வகையான் வருவன வழுவாயினும் திரிவில்சொல் என்றதனான் இதுவும் அடக்கிக்கூறினார். (௬௫)

சூ. ௬௪௬. மரபுநிலை திரிதல் செய்யுட் கில்லை
மரபு வழிப்பட்ட சொல்லி னான.

என்-னின், செய்யுட் குரியதோர் மரபு உணர்த்துதல் நுதலிற்று.

ஈண்டுச் சொல்லப்பட்ட மரபுநிலையிற் றிரிதல் செய்யுட்கில்லை: மரபு வழிப்பட்ட சொல்லினாற் செய்யவேண்டுதலின் என்றவாறு.

எனவே யாதானும் ஒரு செய்யுளும் ஈண்டோதிய மரபினாற் செய்யவேண்டும் என்றவாறும்.

செய்யுட்கில்லை எனவே வழக்கினுட் சில திரியவும் பெறும். அவை குதிரையை ஆணினைப் போத்தென்றல் போல்வன.

சூ. ௬௪௭. மரபுநிலை திரியிற் பிறிது பிறிதாகும்.

(சு உ)

என்-னின், மரபுநிலை திரிந்துவரிற் பொருள் வேறுவேறாகு மென்றவாறு.

எனவே வழுவென்றவாறும்.

சூ௱௩அ. வழக்கெனப் படுவ துயர்ந்தோர் மேற்றே நிகழ்ச்சி அவர்கட் டாக லான.

(கூ௩)

ஐயமறுத்தலை நுதலிற்று. வழக்கென்று சொல்லப்பட்டது உயர்ந்தோர் மேலது: நூலின் நிகழ்ச்சி அவர்மாட்டாதலான் என்றவாறு.

மரபுநிலை திரிதல் செய்யுட் கில்லையெனவும் அதனானே வழக்கிற் சிறுபான்மை வரு மெனவும் செய்யுள்மரபு ஒழியவரின் அது வழுவா மெனவும் கூறினாராயிற் பாயிரத்துள்

'வழக்குஞ்செய்யுளு மாயிரு முதலி னெழுத்துஞ் சொல்லும் பொருளு நாடி' என்றதனும் மாறுகொள்ளுமோவெனின் ஐயுற்றார்க்கு ஆண்டு வழக்கென்று சொல்லப்பட்டது உயர்ந்தோர் வழக்கினை எனவும் இழிந்தோர்வழக்கு வழக்கெனப்படாதெனவும் கூறியவாறு. (கச)

சூ௱௬௬. மரபுநிலை திரியா மாட்சிய வாகி
உரைபடு நூறா மிருவகை நிலைய
முதலும் வழியுமென நுதலிய நெறியின.

என்-னின், மேற் செய்யுளியலுள் யான் உணர்த்துதல் நுதலிற்று.

தோற்றுவாய் செய்த

நூலை இலக்கணவகை

மரபாவது நூற்கு இன்றியமையாத இயல்பு, அவ்வியல்பு திரியாத மரபுடைத்தாய் உரைக்கப்படும் நூல்தாம் இருவகைய: முதனூல் எனவும் வழிநூல் எனவும் என்றவாறு. உரைக்கவென்பது விகாரத்தால் தொக்கது.

அது வருகின்ற சூத்திரத்தாற் கூறுப.

சார்புநூல் என்பதும் ஒன்றுண்டாலெனின், அது இருவர் ஆசிரியர் கூறியவதற்கு படப்பட்டு வருதலின் அதுவும் வழிநூலென அடங்கும். எதிர்நூல் என்பதும் ஒன்றுண்டு. அதுவும் ஒரு முனைவனாற் செய்யப்படின் முதனூலாம்; பிறர் செய்யின் வழக்காது. (௯௫)

சூ ௯௰. வினையி 1னீங்கி விளங்கிய வறிவின்
முனைவன் கண்டது முதனூ லாகும்.

என்-னின், நிறுத்தமுறையானே முதனூலாமாறு உணர்த்துதல் நுதலிற்று.

சூத்திரத்தாற் பொருள் விளங்கும்.

சூ ௯௧. வழியெனப் படுவ ததன்வழித் தாகும்.

(௯௫)

என்-னின், வழிநூ லாமாறு உணர்த்துதல் நுதலிற்று.

வழிநூல் எனப்படுவது முதல்வன் கண்ட நூல்வழியே செய்வது என்றவாறு.

அஃதேல், இதனாற் பயன் என்னை யெனின், அது வருகின்ற சூத்திரத்தான் விளங்கும். (௯௭)

சூ ௯௨. வழியி னெறியே நால்வகைத் தாகும்.

என்-னின், வழிநூல் பாகுபடுமாறு உணர்த்துதல் நுதலிற்று.
வழிநூல் எனப்படுவது நான்கு வகைப்படு மென்றவாறு.
அது முன்னர்க் கூறுதும். (கஅ)

சூஎசாடு. தொகுத்தல் விரித்தல் தொகைவிரி மொழிபெயர்த்
ததர்ப்பட யாத்தலோ டனைமர பினவே.

என்-னின், வழிநூல் வகையாமாறு உணர்த்துதல் நுதலிற்று.
முதனூலாசிரியன் விரித்துச் செய்ததனைத் தொகுத்துச் செய்தலும், தொகுத்துச் செய்ததனை விரித்துச் செய்தலும், அவ்விருவகையினையும் தொகை விரியாகச் சொல்லுதலும், வடமொழிப்பனுவலை மொழிபெயர்த்துத் தமிழ்மொழியாற் செய்தலும் என்றவாறு. (கக)

இது வழிநூலா ஞய பயன.

சூஎசசு. ஒத்த சூத்திர முரைப்பிற் காண்டிகை
மெய்ப்படக் கிளந்த வகைய தாகி
ஈரைங் குற்றமு மின்றி நேரிதின்
முப்பத் திருவகை யுத்தியொடு புணரின்
நூலெண மொழிப நுணங்குமொழிப் புலவர்.

என்-னின், நூற்கு இலக்கண முணர்த்துதல் நுதலிற்று.
இனி ஒத்த சூத்திரத்தானும் காண்டிகையானும் பொருண்மேற் கூறிய வகையுடைத்தாகிப் பத்துக்குற்றமு மின்றி நுண்ணிதாகிய முப்பத்திரண்டு வகைப்பட்ட தந்திர வுத்தியொடு புணருமாயின் நூலெனச் சொல்லுவர் புலவர் என்றவாறு.
உரைப்பின் என்பதனை முன்னே கூட்டி நூலுரைப்பின் எனப் பொருளுரைக்க. (ஏ)
அவையாமாறு முன்னர்க் காட்டுதும்.

(பிரதி)—1 னீங்கிய.

௯௪௫. உரைபெடுத் [1]ததன்முன் யாப்பினுஞ் சூத்திரம்
புரைதப வுடன்படக் காண்டிகை புணர்ப்பினும்
[2]விதித்தலும் விலக்கலு மெனவிரு வகையொடு
[3]புணர்த்தவை நாடிப் புணர்க்கவும் பெறுமே.

இதுவு மது.

சூத்திரத்தின் முன்னர் உரையை விரித்துரைக்கு மிடத்துஞ் சூத்திரம் பொருள் விளங்கக் காண்டிகை புணர்க்குமிடத்தும் ஆசிரியன் இப்பொருள் இவ்வாறு கூறல்வேண்டு மென விதித்தலும் இப்பொருள் இவ்வாறு கூறப்பெறுமெனன விலக்கலுமாகிய இருவகை யொடே கூடப் பொருத்தினவற்றை ஆராய்ந்து புணர்க்கவும் ஆம் என்றவாறு.

இதனாற் சொல்லியது ஆசிரியன்சொன்ன சூத்திரத்தினைக் குறைபடக் கூறினு னென்றல் அமையாமையானும் அவன் கூறுகின்ற பொருளினை நிலைபெறுத்தற்குப் பிறி தொன்றை விரித்தோதிய நெறியை விலக்கியும் பொருள் உரைத்துக் கொள்ளப்படு மென்றவாறு.

செய்யுளியலுள்,

நூலெனப் படுவது நுவலுங் காலை

முதலும் முடிவு மாறுகோ ளின்றித்
தொகையினும் வகையினும் பொருண்மை காட்டி
யுண்ணின் றகன்ற வுரையொடு
பொருந்தி

நுண்ணிதின் விளக்க லதுவதன் பண்பே. [செய்யுளியல்-௱௫௯]

என்று கூறுதலின் இதுவும் இலக்கணமாகக் கொள்க. (௱௧)

சுாசசு. மேற்கிளந் தெடுத்த யாப்பினுட் பொருளொடு
சில்வகை யெழுத்தின் செய்யுட் டாகிச்
சொல்லுங் காலை யுரையகத் தடக்கி
நுண்மையொடு புணர்ந்த வொண்மைத் தாகித்
துளக்க லாகாத் துணைமை யெய்தி
அளக்க லாகா வரும்பொருட் டாகிப்
பல்வகை யானும் பயன்றெரி புடையது
சூத்திரத் தியல்பென யாத்தனர் புலவர்.

என்-னின், நூற்கு அங்கமாகிய சூத்திரத்திலக்கணம் உணர்த்துதல் நுதலிற்று.

மேல் தொகுத்தல் விரித்தல் தொகைவிரி மொழிபெயர்த்து அதர்ப்பட யாத்தல் என நால்வகையினும் சொல்லப்பட்ட பொருளோடு, சிலவெழுத்தினான் இயன்ற செய்யுட்டாகி, உரைக்குங்காலத்து அவ்வுரையிற் பொருளெல்லாம் தன்னகத் தடக்கி, நுண்ணிய பொருண்மையொடு பொருந்திய விளக்கமுடைத்தாகி, கெடுக்கலாகாத துணைச்சூத்திரங்களை யுடைத்தாகி, வரையறுக்கப்படாத அரியபொருளை யுடைத்தாகிப் பலவாற்றானும் பயனை யாராய்தல் உடையது சூத்திரம் எனக் கூறினர் புலவர் என்றவாறு.

4அளக்கலாகா அரும்பொருளாவது பலமுகத்தானும் பொருள்கொள்ளக் கிடத்தல். செய்யுளியலுள்,

சூத்திரந் தானே

ஆடி நிழலி னறியத் தோன்றி

(பிரதி)—1 தனமுன். 2 விடுத்தலும் விலக்கலுமுடையோர். 3 புரைதப. 4 அளக்கலாத

# பொருளதிகாரம்.

## மரபியல்

சாஅங

காடுத லின்றிப் பொருணனி விளக்கி
யாப்பினுட் டோன்ற யாத்தமைப் பதுவே. [செய்யுளியல்-ாகூ]

என்பதூஉம் இதற் இலக்கணம். (௩௨)

சூ௪௭. பழிப்பில் சூத்திரம் பட்ட பண்பிற்
கரப்பின்றி முடிவது காண்டிகை யாகும்.

என்-னின், காண்டிகையாமாறு உணர்த்துதல் நுதலிற்று.

குற்றமில்லாத சூத்திரஞ்சொன்ன இயல்பினன் மறைவின்றி விளக்குவது காண்டிகையா மென்றவாறு. (௩௩)

சூ௪௮. விட்டகல் வின்றி விரிவொடு பொருந்திச்
சுட்டிய சூத்திர முடித்தற் பொருட்டா
ஏது நடையினு மெடுத்துக் காட்டினு
மேவாங் கமைந்த மெய்ந்நெறித் ததுவே.

இதுவு மது.

சூத்திரத்திற்படுஞ் சொற்பொருளை விட்டுநீங்குத லின்றி விரிவோடே பொருந்தக் குறித்தசூத்திர முடித்தற்காக ஏதுநெறியானும் எடுத்துக் காட்டினானும் பொருந்தி யாங்கமையும் பொருணெறியை யுடைத்துக் காண்டிகை யென்றவாறு.

விட்டகல்வின்றி விரிவொடு பொருந்தலாவது மிகவகலாமை. இம்மனை நெருப்புடைத் தென்றது சூத்திரப்பொருள்; புகையுடைத்தாதலா னென்பது ஏது; அடுக்களை போலவென்பது எடுத்துக்காட்டு. இவ்வகையினாற் சூத்திரப் பொருளுரைக்க வென்றவாறு. (௩௪)

சூ௪௯. சூத்திரத் துட்பொரு ளன்றியும் யாப்புற
வின்றி யமையா திவையவை யெல்லா
மொன்ற வுரைப்ப துரையெனப் படுமே.

உரையாமாறு உணர்த்துதல் நுதலிற்று.

சூத்திரத்துட் பொருளொழியவும் அந்நூலகத்தில் யாப்பிற்கும் பொருந்த இன்றியமையாதனவெல்லாங் கொணர்ந்து பொருந்த வுரைப்பது உரையாகு மென்றவாறு. (௩௫)

சூ௫0. மறுதலைக் கடாஅ மாற்றமு முடைத்தாய்த்
தன்னூ லானும் முடிந்தநூ லானும்
ஐயமு மருட்கையுஞ் செவ்விதி னீக்கித்
தெற்றென வொருபொரு ளொற்றுமை கொளீஇத்
துணிவொடு நிற்ற லென்மனார் புலவர்.

இதுவு மது.

உரையாவது, மறுதலைக்கடாஅ மாற்றமுமுடைத்தாக, ஐயப்பட்டு நிற்றலு மருண்டு நிற்றலு நீக்கி, தன்னூலானுதல் அப்பொருண்முடிவுறக் கூறின நூலானுதல் தெளிய வொருபொருளை யொற்றுமைப்படுத்து, இதுவே பொருளெனத் துணிதல் உரையிற் கியல் பென்றவாறு.

மாற்றமுமுடைத்தாகி யென்ற வும்மையால் விடையு முடைத்தாகி யென்க. (ஈசு)



சூ௱௬௧. சொல்லப் பட்டன வெல்லா மாண்பும்
மறுதலை யாயின் மற்றது சிதைவே.

† மேலவற்றிற் கோதலானை நூற்குரியதோர்மரபு முதனூலாயிற் சிதைவில்லை யென்றவாறு.

என்னை ஆவன கூறியது? விரியலாதன சிதைவது வழிநூ லென்றவாறும். (௱௭)

சூ௱௬௨. * சிதைவில வென்ப முதல்வன் கண்ணே.

சூ௱௬௩. முதல்வழி யாயினும் யாப்பினுட் சிதையும்
வல்லோன் புணையா வாரம் போன்றே. (௱௮)

வழிநூற் குரியதோர் மரபுணர்த்துதல் நுதலிற்று.

முதனூலின் வழிசெய்யினும் அந்நூல் யாப்பினுட் சிதையும். வல்லவன் புணையா வாரம் போல வென்றவாறு.

கோவைவாசியா (?) னென்றவாரும்.

(௱௧)

௬௱௩௪. சிதைவெனப் [1]படுபவை வசையற நாடிற்
கூறியது கூறல் மாறுகொளக் கூறல்
குன்றக் கூறல் மிகைபடக் கூறல்
பொருளில கூறல் மயங்கக் கூறல்
கேட்போர்க் கின்னா யாப்பிற் றாதல்
பழித்த மொழியா னிழுக்கக் கூறல்
தன்னா னொருபொருள் கருதிக் கூறல்
என்ன வகையினும் மனங்கோ ளின்மை
அன்ன பிறவும் அவற்றுவிரி யாகும்.

மேலதிகாரப்பட்ட ஈரைக் குற்றமுமாமாறு உணர்த்துதல் நுதலிற்று.

கூறியது கூறலாவது ஒருக்காற் கூறியதனைப் பின்னுங்கூறல்.

கொள மாறுபடக் கூறலாவது ஒருக்காற் கூறியபொருளோடு மாறுகொள்ளுமாறு பின்கூறல். அஃதாவது தவம்நன்று என்றவன்றான் தவந் தீதென்று கூறல்.

குன்றக் கூறலாவது தானதிகரித்த பொ[ருள்களுட்சிலவ]ற்றைக் கூறாதொழிதல்.

மிகைபடக் கூறலாவது அதிகாரப் 2பொருளன்றிப் பிறபொருளுங் கூறுதல். அஃதாவது தமிழிலக்கணஞ் சொல்லுவா னெடுத்துக் கொண்டான் வட[மொழியிலக்கணமும்] கூறல்.

பொருளில கூறலாவது
பின்றிப் பயனில்லாதன கூறல்.

முன்னும் பின்னும் வருகின்ற

பொருண்மைக் கொப்

மயக்கக் கூறலாவது கேட்டார்க்குப் பொருள்விளக்[குமாறின்றிக் கூறல்.]

கேட்போர்க்கின்னா யாப்பிற்றாதலென்பது பொருள் யாக்கப்பட்ட சூத்திரஞ் சந்தவின்பமின்றி யிருத்தல்.

பழித்தமொழியான் இழுக்கக் கூறலாவது தாஞெரு பொ[ருளை யொரு வாய்பாட் டாற்குறித்] துப் பிறிதொரு வாய்ப்பட்டாற் கூறுதல். அக்குறிப்பு உலகவழக் கின்மை யாற் பிறர்க்குப் புலப்படாதாம்; அதனுல் அதுவுங் குற்றமாயிற்று.

† இங்கு உரை வாக்கியங்கள் சூத்திரத்திற் கேற்ப அமையாது பிறழ்ந்துள்ளன வென்று தோன்றுகிறது. * இச்சூத்திரம் பிரதியிற் காணப்பெறவில்லே.

(பிரதி)—1 பலவது. 2 பொருளின்றிப்.

# பொருளதிகாரம் - மரபியல்

சூ.II அரு

என்னவகையினும் மனக்கோள் இன்மையாவது எழுத்தினுலுஞ் சொல்லினுலும் பொருளினுலு மனக்கொள்ளுமாறு கூருமை. (சுஎ)

சூ.அரு. எதிர்மறுத் துணரினத் திறத்தவு [1]மவையே.

இதுவு மது. நூற்குற்ற முணர்த்துதல் நுதலிற்று.
எதிர்மறுத்து உணர்வாராயின், அத்திறத்தவும் குற்றமா மென்றவாறு.
[உதாரணம்:] பாவஞ் செய்தான்கிரையம்புகு மெனக் கருதிக் கூறவான் தவஞ்
...ய்வான் சுவற்கம் புகுமென்றல். இவ்வாறுகூறிச் சுவற்கம் பெறு மென்னும் பொருட்...
...ரயம்புகுமென்ற பொருள் 2தோன்றுமையிற் குற்றமாயிற்று. (௱௰௧)

சூத்திரம். ஒத்த காட்சி யுத்திவகை விரிப்பின்
நுதலிய தறிதல் அதிகார முறையே
தொகுத்துக் கூறல் வகுத்துமெய்ந் நிறுத்தல்
மொழிந்த பொருளோ டொன்ற வைத்தல்
மொழியா ததனை முட்டின்றி முடித்தல்
வாரா ததனான் வந்தது முடித்தல்
வந்தது கொண்டு வாராதது முடித்தல்
முந்து மொழிந்ததன் தலைதடு மாற்றே
ஒப்பக் கூறல் ஒருதலை மொழியே
தன்கோட் கூறல் உடம்பொடு புணர்த்தல்
பிறனுடம் பட்டது தானுடம் படுதல்
இறந்தது காத்தல் எதிரது போற்றல்
மொழிவா மென்றல் கூறிற் றென்றல்
தான்குறி யிடுதல் ஒருதலை யன்மை
முடிந்தது காட்டல் ஆணை கூறல்
பல்பொருட் கேற்பின் நல்லது கோடல்
தொகுத்த மொழியான் வகுத்தனர் கோடல்
மறுதலை சிதைத்துத் தன்றுணி புரைத்தல்
பிறன்கோட் கூறல் அறியா துடம்படல்
பொருளிடை யிடுதல் எதிர்பொரு ளுணர்த்தல்
சொல்லி னெச்சம் சொல்லியாங் குணர்த்தல்
தந்துபுணர்ந் துரைத்தல் ஞாபகம் கூறல்
உய்த்துக்கொண் டுணர்தலொடு மெய்ப்பட நாடிச்
சொல்லிய வல்ல பிறவவண் வரினும்
சொல்லிய வகையாற் சுருங்க நாடி
மனத்தி னெண்ணி மாசறத் தெரிந்துகொண்
டினத்திற் சேர்த்தி யுணர்த்தல் வேண்டும்
நுனித்தகு புலவர் கூறிய நூலே.

தந்திரவுத்தி யாமா றுணர்த்துதல்நுதலிற்று.
இ[தன் பொழிப்]பு: நுதலிய தறிதல் முதலா[கச் சொல்லப்பட்]டனவும் அத்தன்
மைய பிறவுந் தந்திர வுத்தியா மென்றவாறு.

(பி-ம்)—1, மதுவே. 2 தோன்றினமையிற்.

சீர்அக்

# தொல்காப்பியம் - இளம்பூரணம்

தந்திரமெனினும் நூலெனினு மொக்கும். உத்தியென்பது வடமொழிச் சிதைவு. அது சூத்திரத்தின்பாற் கிடப்பதோர் பொருள் வேறுபாடு காட்டுவது.

ஒத்தகாட்சி யுத்திவகை விரிப்பினென்பது நூற்குப் பொருந்திய காட்சியினா லுரைக்கும் உத்திவகையை விரிக்குங்காலத் தென்றவாறு.

நுதலியதறிதலாவது—சூத்திரத்திற் சொற்றபொரு ளுணர்[த்]தலன்றி, இதன் கருத்திதுவென வுணர்த்தல். அஃதாவது 'எழுத்தெனப்படுப' [நூன்மரபு-க] என்னுஞ் சூத்திரத்துள் 'எழுத்து இனைத்தென வரையறுத்துணர்த்துதல் நுதலிற்று' என்றல்.

அதிகார முறையாவது—முன்னம் பலபொருளை யதிகரித்தவழிப் பின்னும் அம்முறையானே விரித்துணர்த்துதல். அஃதாவது உயர்திணை யஃறிணையென அதிகரித்து 'ஆடூஉ வறிசொல்' [கிளவியாக்கம்-உ] என்னுஞ் சூத்திரத்தான் சிறந்தமுறை பிறழாமல் உயர்திணை கூறல். இன்னு மிதனானே ஒருசூத்திரத்திலே கருதியபொருளை வைத்து வருகின்ற சூத்திரத்துள் ஓதாது அதன் காரியமாயின கூறியவழி அதனைச் சூத்திரந்தோறுங் கொணர்ந்துரைத்தல். அஃதாவது 'அகரவிறுதிப் பெயர்நிலைமுன்னர்' [உயிர்மயங்கியல்-க] என்னுஞ் சூத்திரத்திற் 'க ச த பத்தோன்றி' னெனவோதி 'வினையெஞ்சு கிளவி' [உயிர்மயங்கியல்-உ] யென்னுஞ் சூத்திரத்துள் ஓதிற்றிலராயினும் அதிகாரமுறைமையினான் வல்லெழுத்து வருவழியென வுரைத்தல்.

தொகுத்துக் கூறலாவது—வகைபெறக் கூறல்வேண்டுமாயினும் அதனைத்தொகுத்துக்கூறல். 'எழுத்தெனப்படுப அகரமுதல னகர விறுவாய் முப்பஃதென்ப' [நூன்மரபு-க] என்றாற்போல்வன. இன்னும் பலசூத்திரத்தாற் கூறியபொருளை யித்துணையுங் கூறப்பட்டதெனக் கூறலுமாம். 'தூக்கியல் வகையே யாப்பென மொழிப' [செய்யுளியல்-அஉ] என்பதனாற் கொள்க.

வகுத்து [மெய்ந்] நிறுத்தலாவது—தொகைபடக்கூறிய பொருளை வகைபடக் கூறல். அது 'அ, இ, உ, எ, ஒ' [நூன்மரபு-௩] என்னுஞ் சூத்திரத்தாற் கொள்க. இன்னு மதனானே தொகைபடச் சூத்திரஞ்செய்தவழி அவற்றுள் ஒரோவொன்று பொதுவிலக் கணத்தான் முடியாதவழிப் பெரும்பான்மை சிறுபான்மைகொண்டு வகுத்துப் பொரு ளுரைத்தலுமாம். இன்னு மதனானே தொகைபடக் கூறியவதனை வகுத்துப் பொரு ளுரைத்தலுமாம்.

மொழிந்த பொருளோடொன்ற வைத்தலாவது—சூத்திரத் துட்பொருள் பல படத்தோன்றுமாயின் முற்பட்ட சூத்திரத்திற்கொக்கும் பொருளுரைத்தல். அன்றியும் முற்பட்ட சூத்திரத்தினான் ஒருபொருளோதியவழிப் பிற்பட்ட சூத்திரமும் பொருளோ டொன்ற வைத்தலுமாம்.

மொழியாததனை முட்டின்றி முடித்தலாவது—எடுத்தோதாத பொருளை முட்டுப் படாமல் உரையினான் முடித்தல். இதனை 'உரையிற்கோடல்' என்ப. இக்கருத்தினானே,

சூத்திரத் துட் பொரு ளின்றியும் யாப்புற
வின்றி யமையா தியைபவை யெல்லா
மொன்ற வுரைப்ப துரையெனப் படுமே. [மரபியல்-௱௰௩]

என ஓதுவராயிற்றென்க.

வாராததனான் வந்தது முடித்தலாவது—ஒருக்கெண்ணப்பட்ட பொருளொன் றனைப் பகுத்துக்கூறியவழி யாண்டு வாராததற் கோதிய விலக்கணத்தை இதன்கண்ணும் வருவித் துணர்த்துதல்.

வந்தது கொண்டு வாராதது முடித்தலாவது—ஒருக்கெண்ணப்பட்டவற்று ளொன்றைப் பகுத்து இலக்கணங் கூறியவழி வாராததன்கண்ணும் இவ்விலக்கணத்தைக் கூட்டிமுடித்தல்.

முந்துமொழிந்ததன் தலைதடுமாற்றுவது—முற்பட அதிகரித்தபொருளை யவ் வகையினாற் கூறாது முறைபிறழக் கூறுதல். இவ்வாறு கூறுங்கால் ஒருபயனோக்கிக் கூறல்வேண்டும். அது புள்ளிமயங்கியலுட் கண்டுகொள்க.

## பொருளதிகாரம்.

